*Mentions honorables faites sur le poëte Savarayalounaïker dans divers journaux.*

*Moniteur officiel de Pondichéry*, des 31 août 1860, n° 549; 14 juin 1861, n° 590; 9 octobre 1863, n° 712; 2 février 1866, n° 832; 22 juillet 1870, n° 1062.

*Revue du monde colonial*, imprimé à Paris, 12 décembre 1863; p. 881 :

Journal tamoul intitulé *Dinavartamany*, imprimé à Madras, 24 janvier 1861, no 277 :

*Journal catholique*, publié en tamoul par la Mission de Rayapourom à Madras, 1er mai 1870, n° 13; p. 57.

## பாகூர்

கல்லறைக்கல்லிலிசைத்த

பாடல்.

நலந்திகழ் துய்க்காம்பேரா யிரத்தெண்ணூற்று நாற்பத்
துநாலாமாண்டாஞ் சூன்மாதம்
பலந்திகழே ழாந்தேதி செய்கான்புண்ய பவுத்ரியுமாய்ச்
சஞ்சீவி சர்வம்மாளின்
குலந்திகழுஞ் சுபுத்ரியுமாய் வருந்தா யம்மாள் குலவிட
நல்லறையெனுங் கல் லறையிங்கீந்தான்
தலந்திகழும் பாகூரி லிதனாலன்றோ சவராயலுக்கோவில்
சமைப்பித்தானே.

கடவுள் துணை.

# புதுவை வித்துவான்

## ம. ா. ா.

# செ. சவராயலு நாயகர்பேரில்

## வித்துவான்கள் கூறிய

# பாடல்கள்.

## திரிசிரபுரம் மகாவித்துவான்

ம. ா. ா. பிள்ளையவர்கள்

## மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்

இயற்றியது.

பார் பூத்தபெரும் புகழ்சால்குணச் சவராயலு மகிபன்பளகுதீரச்............*
சீர் பூத்த தமிழ்ப்பிரசங்கம் புரியு மனையபெருந்திறமென்சொல்கேன்..........*
ஏர்பூத்த பூமுடியோனே சிரகம்பிதஞ்செய்வானெண்ணு மஞ்சுந்....,....:.*
தார் பூத்த முடியுடை மற்றையரது மாறுதுசெய்வான்றலைப்பட்டாரோ........(க)

சொன்னயமும் பொருணயமு மணிநயமும் பணின்யமுஞ்சொல்லாமற்றைப்.*
பன்னயமும் வெளிப்படுத்தி நீ செய்பிரசங்க நயப்பயன் பாராட்ட.....,...,...*
என்னயமு முணர்ந்தேமா வொரோவொன்றேசிறிதுணர்ந்தேமெல்லாம்வல்லார்
தன்னயமாக்கொளுஞ்சவாாயலு சுகுணபுனிதாநீசாற்றுவாயே............(உ)

அரிய ருலகிடைக் கற்றோ ரவருளும் பன்னூல்களு நன்கமையத் தேர்ந்தோர்..*
அரியாரவருளுங் கவிசெய்பவராரிய ரவருளு மின்பமையச்செய்வோர்..........*
அரியாரவருளும் பிரசங்கம் புரிவோ ரவருளு நல்லமைதிவாய்ந்தோர்..........*
அரியரொலா மமைந்த சவராயலு வள்ளானினை யொப்பாவார்யாரோ........(ங)

பூவின்பாலுயர்புதுவைவருசெயகா னினிதளித்த புதல்வன்மேலோர்........*
பாவின்பாலுலவு சவராயலு பூபதி நயமே பயின்றதாய..................*
நாவின்பாலெழுபிரசங்கங் கேட்டோர் பிறிதொன்றை நாடுவாரோ ............*
ஆவின்பால் விரும்புனர் காராட்டின்பால் விரும்பினு மிவ்வகிலத்தோரோ...(ச)

தேனுலும்பொழிற் புதுவைவளர் சவராயலு வள்ளல் சிறந்துளோனே.......*
யானுலும் பொறுமையுள ஞென்றனின்மேம்படப் புரிந்தவறத்தை யோர்கான்..*
மீனுலுங் கடலுலகில் விரித்தில ஞேதினனென்றே விளம்புவீரேற்.........*
றுனுலு மறைமுணுணர்ந்தவன்போல வெவர் சிறந்தார் சாற்றுவீரே....... (௫)

ஒளிகிளர் விண்மதிநால மாசுறுந்தேய்தரும் போகிக்குணவாமாயுந்.........*
தெளிகிளர்வண் புதுவைநகர் வருசவராயலு மகிபாசிறந்ததாநின்...........*
னளிகிளர்தண் மதியோ சூக்கும மகளங்கந் தேயாதமையோகிக்காந்.......*
துளிகிளர்நல்லுணவோங்குமெனு நிகருமொருதேத்தாள் சுமத்தலானே...(௬)

வாயாரப்புண்ணியனைப்புகழ்தரிற் புண்ணியமுடனே வருமாலென்று.......*
தூயார்செப்புவர் புதுவைவரு சவாாயலு புனித சுகுண யோக..............*
நேயாமற்றதுதுணிந்து பாவலர் பல்லோர் கவியானினைப்புகழ்ந்தா.........*
ரோயார் பற்பலர் தமைப்பாடிடச் சிறந்தாரொனிலச்சொலுண்மைதானே .....(௭)

ஆடுகொடிமணி மாடவளப் புதுவைவளர் சவராயலுபூபாவிந்..............*
நீடுலகினின் கல்விபோனிறைவான்மதியென்று நிரம்பிப்பார்க்குஞ்...........*
சூடுபுகழ் நின்கைபோற் பொழிந்திடுவான் முகிலென்றுஞ் சொரிந்துபார்க்கு..*
மீடுசரியர்காது தேயும் விளர்த்திடு மவையாதியற்றுந்தானே.............(௮)

பராவிய புண்ணியத்தாலே பராபரன்பேருள்பெற்றுய் பகருமற்றுற்........*
புராதன வான்புலவர் புரிதுதிபெற்றுயதனுலே புணரிசூழ்ந்த..............*
தராதல மன்னவர் செய்சிறப்பும்பெற்றுய் நீடூழிதழைவாய் சீர்த்தி...........*
விராவுபுதுவைச் சவராயலுநாயகா விஞுமென்வேண்டுநிற்கே...........(௯)

விண்மணிநேர் வண்மணி பூவேந்தரிருகண்மணிநூல் விளங்கக்கற்றே.....*
ருண்மணிவெண்மணிச் சிந்தாமணிதம்பி மகிபாலனுவந்தந்நாணின்........*
பண்மணிவாசகம்பொருடேர்ந் தெழுதெழுத்தா முனையிந்நாட்பாந்துசான்றே..*
ரொண்மணியாகிய சவராயலு புனிதாதழைந்த தெங்களிரும் பாவாயே.....(௰)

மன்னியவெண்மணித் தம்பிமணி சவராயலுமணிக்கு மகிழ்ந்தந்நாட்செய்..*
துன்னியசில்லெழுத்து மொழியா லந்த மணிபுலவர் தொக்குப்பல்பாப்......*
பன்னியமேம்பட்டத்தனுற் பாரீரத்தம்பிபாற் சென்றுங்கண்................*
முன்னியவல்லமை தெரித்தொன்தெய் திடினீர்யாவருக்கு முதலாவீரே....(௰௧)

வே று.

அளங்கூராழிவெண்முத்து மஞ்செந்துகிருமலேயெறிய..................*
விளங்கூர்புகழொண்பிரதாபம் வெளிப்பட்டென்னப் பொலிபுதுவை........*
வளங்கூர் சவராயலு வெனுங்கண்மணியே நின்னையெஞ்ஞான்று...........*
முளங்கூர் தரக்கண்டுவந்திருப்பேனுமைக்கு மாற்றமொன்றுளதே...... (௰௨)

வே று.

தறையாத வனேநிகரும் விளக்கமு மெய்க்கலேயுணர்ச்சிதவாதமாண்புங்....*
குறையாத பெருந்திருவுந் தண்ணளியுமறுத பெருங்கொடையுமன்பு.........*
மிறையாத பெரும்புகழு மொருசேரவாய்ந்து கதித்தெந்தஞான்றுங்.........*
குறையாத வளப்புதுவைவளர் சவராயலு மகிபன் குலவிக்காண்க......(௰௩

நல்லகுணம்பொறை யடக்கஞானமிவை யருவென்பார் நாணுக்கொள்ளச்...
சொல்லநிறையவையெலா மோருருவங்கொண்டன்ன தோற்றமிக்கான்.......
வெல்லவல்ல மதியமைச்சிற்பகைமுழுதுந் தபச்சூழும் வினையின்வல்லோர்.
வல்லபுகழ் வளர்புதுவைவாழ் சவராயலு சிந்தாமணி யீதோர்க........(௰௪)

கலையுணர் வண்புலவர்பெறு கற்பகமே பொற்பகலாக்காமர்வாழ்வே........
நிலையுணர் மெஞ்ஞானியர் வாயாசிபூண்டொளிர் சங்கநிதியேயென்கா........
தலையுணர் சிந்தாமணியே தமிழருமை யறிமுகிலே தாவாவின்ப..........
மலையுணர் நன்புகழப் புதுவைவரு சவராயலு சுகுணவள நல்லோயே..(௰௫)

வே று.

ஒன்றுந்தருமக் குரியவரா யைம்பொறியும்..............................
வென்றுந் தருண்மதியின் மேலாவ-ரொன்று..............................
நவராயலுத்தசத்தி நண்ணுவார் மேன்மைச்..............................
சவராய லுத்தலைச்சார்ந்தார்........................................ (௰௬)

வே று.

உளமார் பெருங்கல்வியுஞ் செல்வமு மூக்கப்பாடுங்......................
களமார் மனமில்லவராசிக்கலப்புந் தேவன்............................
றளமாரடித்தாமரைக்கன்புந் தழைத்துமல்கி...........................
வளமார் சவராயலு கண்மணி வாழ்க வாழ்க..........................(௰௭)

திருவாவடுதுறை

## ம௱௱ ஒப்பிலாமணிதேசிகரவர்கள்

இயற்றியது.

வசையில்வளம் பொலி புதுவை வளர்சவராயலு மகிபன்வயங் குபாவு, மிசையில்பிறர்பாவுமொப்பென்பேன்பொன்னே டிரும்பு மிணையென்பாயென்னிற், றிசைபுகழ் கண்காது வாய் நாசி பதமு தலுறுப்புச் சிறந்துளாரு, மசையுமவையில்லாருமக்க ளென்னு தென்னுமைப்பிரகிலத்தோரே. (௧)

ஷ ம. ா. ா. மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் மாணுக்கரு ளொருவரும் தமிழில் சூதசங்கிதைகுசேலோபாக்யான முதலிய வை செய்தவருமாகிய.

## ம௱௱ வல்லூர் தேவராஜபிள்ளையவர்கள்

இயற்றியது.

முன்னேர்த மிலக்கியமோ விலக்கணமோ விதி விலக்கு முறை யோ நீதி, மன்னேர் மன்னுறக் கடவுளியற்றிரண்டா மறையோவெ ன் வழுத்துகேன்வான், மின்னேர்பைம்பொழிற்புதுவை வளர் சவராயலுமகிபா மிகுநின்பாட்டா, லென்னேர்தாருமெலாமோர்வ தற்குத்தடையமைதியெய்தாரயாரே..........................(௧)

வேறு.

காவலருந்தவருவ வேள்கனன்று வருங்குறைமதியுங்காயுமென்று, விரவலருந்தவருவ தெப்போது மயலாற்றும் வகை வேறுகாணேன், பரவலருந்தவருவமை நுதலார் கூறுவர் சிறப்புப்பா ராரோடு, புரவலருந்தவருவக்கப்புரி சவராயலு மால்பாற்போய்வா மின்னே......................................(உ)

எதுலக்கந்தா முரிவீல் கோட்டியெய்யும் வேள்கடலோ விளையாநிற்கும், மோதுலக்கந்தாமுழுமா மலையக்கால் கொடிதிவைசெய்மூண்மற்றியாவும், மாதுலக்கந்தாமு கமனோடு சொற்றுளெனப் புதுவைவளருமேலோன், ஆதுலக்கந்தாமுகக்குங்கடல் சவராயலு மகிபற்கறைதிமானே................................(௩)

வேறு.

சங்கம்பங்க முறப்பஞ்ச தருக்கண் மகவான்புரமேறத், தங்கச் சிலை கைச்சிலையாகித்தயங்கிக் குழையப் பசுநிறச்சூன், மங்குல்வ ளாயின் முழைபுகுத வயங்குபுரவுத் தொழில் பூண்ட, செங்கைச் சவராயலு சுகுண செல்வனிதனை நோக்குகவே.............(ச)

வேறு.

சீர்மலியுலகம் படைத்தளித்தழிக்குந் தேவநித்திய நிராகாரன், ஏர்மலி தூய பத்தியே புரிவோனிலகு மெய்ம்மொழி பொலிநாவன், தார்மலி புயத்தன் கலையொருங்குணர்ந்தோன் றகுபுகழ்பெறு சவராயற், பேர்மலி நல்லோனிச்சிறு கடிதம்பெட்பினினோக்குகமாதோ.........................................(ரு)

தந்தைநற்சுதன் றூயாவியே யென்னச் சத்தியமறை யெடுத்துரைக்கு, மந்தமிறிரியேகப் பெருந்தேவனும் யெகோவாவினை யகத்திற், சந்ததமற்பிற் பாவுறுதாசன்றனையெலாம் புகழ்தருசுகுணன், முந்துசீர்ச் சவராயலு வெனுங்கோமான் முன்னுமிக்கடிதநோக்குகவே.........................................(சு)

ஒருவடிவாயு மூவடிவாயு மொளிர்பான்பெரும்புகழ் விளக்கத், திருவடி வெடுத்த தன்பெனக்கவிஞர் செப்புறத்தகுகுணமேரு, தருகவென்றிரந்தார்க் காசையோடுவந்து தருவென வழங்குறு கொண்டன், மருமலி சவராயலுவெனுஞ்சுகுண மன்னனிக் கடிதநோக்குகவே.........................................(எ)

உலகெலாம்படைத்துக்காத்தருள் பரம னுவப்புறவிதையமாமலரி, லலகிலாவன்பி னிரந்தாம் பழிச்சு மருங்குணகானிரவலரா, நலமிகு பைங்கூழ் செழிப்புறச்சொன்ன நன் மழை பொழிதரு கொண்டல், நிலமகிழ் சவராயலுவெனும் புனித நிருப னின்னிருப நோக்குகவே.........................................(அ)

மாசிலாக்கன்னிபாலுலகளிக்க வந்தவதரித்தொருதூய, வேசு நாமங்கொளிறையடிமலர்க்கேயின்னமுவசும் பலாணியுந், தாசனு வலர் நாயகன் முகிஞணத்தருங்காதலன் சவராயல், வாசவனிந்தக் கடிதத்தை யன்பான் மலர்விழிகொண்டு நோக்குகவே.......(௬)

வே று.

சீர்மலிந்த திரியேக தேவனைச் சிந்தையிற்றினமும் பாவன்பின ன், பார்மலிந்தபுகழ்ப் புதுவைப்பெரும் பதிவிளங்க வுதித்தருள் புண்ணியன், தார்மலிந்த புயாசலன் றண்டமிழ்ச் சலதிக்கொப்பி றமிழ்முனியாயினேன், கார்மலிந்த கான் சவராயலு கன்னன்கா ண்கக் களித்திக்கடிதமே..............................(ம)

---

திரிசிரபுரம் கலெக்டர்

## ம॰ ரா॰ ரா॰ சோவல அப்பாசாமிமுதலியாரவர்கள்

இயற்றியது.

பார்வளருங் கௌரிகுலராயலென்பான் பயந்தமுத்து நாயகன் செய்தவத்தில் வந்த, சீர்வளருஞ் செயகானின் புதல்வனான செல் வசவராயலு நாவலவன்பெற்ற, பேர்வளரு நேய செயராயலுக்கு ம் பிரியகுணமேவு சந்தபாரம்மாட்கும், ஏர்வளருந் தொசம்மாளெ னும் பிள்ளைக்கு மேக பானருள் பெருகவென்றுமாதோ......(க)

---

நீதிநூல் பெண்மதிமாலை முதலியவைசெய்த மாயூரமுன்சீப்

## ம॰ ரா॰ ரா॰ ச॰ வேதநாயகம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

ஏர்கொள் சவராயலு நாயகதீரா வாயிர நாவிருந்துஞ் சேடன், ஓர் கவியுஞ் செய்திலன் பல்கவிகள் செய்தாயவன்முழ்ந்தானுயர்ந்தா ய் நீயே, சீர்சுமந்தாய் பார்சுமந்தான் கேள்வியுற்று யவன்கேளாச் செவிடனுனன், ஆர்விடவாக்கினனவனீ யமுதவாக்கின னூனைத் தானவனெவ்வானே..................................(க)

அகத்தியனைக்கண்ட தாரவன் பாட்டைக்கேட்ட தாராழிமுற்றுஞ், சகத்திலுண்டானெனினுஞ் சவராயலு நாயகநின் பாச்சலதி பொ ங்கி, யிகத்துலகை வளைத்ததுண்ணமுடியாது தனைவிழுங்கு மெ னமேலோடி, நகத்தொளித்துப்பெரும் பயத்தாற் குறுகினனெனி லினி யாநவில்வதென்னே..............................(உ)

சாதிநாயகனான சவராயலுத்தமனே சவரியாரொன், சோதிநாயக னும நீதரித்தாய் மீனுட்சி சுந்தரப்பேர், நீதிநாயகனன்றேநினக்கா

சானுலக மெலா நியமித்தாளு, மாதிநாயகனனை மேனிபாடி லுன் கவிலயை யார்மெச்சாரே.................................(௩)

கலையழகையுணர் சவராயலு நாயகா மரியகன்னித்தாயின், றலை யழகை மீன்காட்டுந் தாளழகைச் சசிகாட்டுந் தங்கமேனி, மலைய ழகைக்கதிர்காட்டுங்குணவழகை மறைகாட்டு மாண்பாலத்தாய், நி லையழகைப்பலகவியா னீகாட்டலதிசயமோ நிலத்திற்றுனே..(௪)

எண்ணெடுத்த சகத்திரநாவிருந்துமே பாடியுய்ய வேதுவின்றி, மண்ணெடுத்துக் கல்லெடுத்து மரமெடுத்து நாளுமுயிற்வாழுஞ் சேட, விண்ணெடுத்த புகழ்கொள் சவராயலுநாயகன் கவிவேலைக் குணீயோர், பண்ணெடுத்துப்பாடினிதிப் பெண்ணடுக்கு மண் ணெடுக்கும்பழியும் போமே................................(௫)

மதிகொள் சவராயலுநாயகதீரா மரியனைக்குமகிழ்ந்து நீ செய், துதிகவியைத் துதிப்பதற்காயிரங்கவிகள்வேண்டும்வளஞ்சூழும் பல்லூர்க், கதிபதிநாநமக்கிங்கோபலவேலையாறுகவிக்கதிகம்பாட, விதியிலை யாதலிற் சிறிதும்பெரிதெனக்கொண்டினி நமக்குவிடை யீவாயே........................................(௬)

---

தேவிபட்டணம் கணக்கி லவதானி

## ம॰ ஈ॰ ஈ॰ முத்துச்சாமிப்பிள்ளையவர்கள்

இயற்றியது.

பார்லோகற் கண்டோ பழமோ வமிர்தினுக்கு......................
மேலோயா தென்று விளம்புகேன்-நாலோர்......................
தவராயலுரு தவிரிற் புதுவைச்..................................
சவராயலு பாக்க டாம்..........................................(௧)

---

ஷ ம. ஈ. ஈ. மீனுட்சி சுந்தரம்பிள்ளையவர்களின் மாணக்கரு ளொருவரும் சென்னைக்கவரன்மெண்டுநோர்மல்பாடசாலைத்தமிழ்ப் புலவருமாகிய சோடசாவதானம்

## ம॰ ஈ॰ ஈ॰ தி॰ சுப்பராயசெட்டியாரவர்கள்

இயற்றியது.

மைநாடு மலர்ப்பொழில் சூழ் சோணுடு மலைநாடு வளத்தாற்சேர்த்த செய்நாடு தென்னுடு நடுநாடு முளநாடு சிறப்பாலோங்கும், மெய்நாடு தொண்டைநாட்டொளிர்முகமாய்விண்ணுடுமேவுவோர்பார்,வைநாடுமா ண்புளதாம் புதுவைநகர்க் கொருதிலகமாகி வாழ்வோன்............(௧)

இச்சகமொன்றேதிருவை யிரவலர்பாற்குடியேற்றியிடனையோட்டி
முச்சகமும் புகழ் நிறுவுங் குணமேரு முதுபுலவர் தமக்கெஞ்ஞான்றும்
பொச்சமிலோர் கருவூலஞ் செயகான்பூ பதிதவத்தாற் புவனத்தப்பால்
நச்சணையகலி யொளிப்பவறன்றோன்றவுடன் றோன்றுநன்மை மிக்
கோன்..........................................................(௨)

பன்னூலுமொருபொழுதிற் சுவைகனிந்த சொற்பொருளாற் பகரவ
ல்லோன், எந்நூலும் பற்பலர்த மகமுகப்பவெடுத்துரைக்குமெழிற் சீ
ராளன், முன்னூலின் பொருடேர்ந்த மீனாட்சி சுந்தர மூதறிஞன்றன்
பால், தொன்னூல்கள் பயின்றவருட்டா ளொருவனாயத்துலங் குந்துகளி
ல் சீரான்..........................................................(௩)

பொலிவேறு பல்லுலகும் பூத்தருளு மொருமுதலாய்ப்புவனம்யாவு
ம், மலிவேறு மாறருளு மொருநடுவாய் வளிவழங்கு மண்ணும் விண்
ணும், நலிவேறுமாற வொருகடையாயிம்முத னடுவீறணுகிலாதாய்
வலிவேறு பேரொளியாயுளதெதுவோவதைப்பணியுமுத்தமாங்கன்.(௪)

மண்முதலாம் பூதங்க ளணுத்திரளான்வந்தன வாதலினால் வேறோர்
எண்முதலாம் பரமுளதோ வெனவுரைப்போர் மொய்மொழிகட் கிடங்
கொடாமல், விண்முதலா மெப்பொருட்கு மொருமுதல்வனுள னென
வே விளங்கவோதும், ஒண்முதலா மெய்மொழிகள குடியேறவிடங்
கொடுக்கு மொளிர்பொற்காதான்..........................................(௫)

தெள்ளமுதோ நறவும் பாகோ கற்கண்டோ செங்கரும்போ சீனிதா
னோ, விள்ளமுதத்தீம்பாலோ முக்கனியோ வெனப்பலரும் வியந்தயி
ர்ப்ப, எள்ளரிய வொருபெரியோ னியம்பிய தேம்பாவணியினிசை தே
ம்பாவத், தள்ளரிய பிரசங்கத் தேன்வெள்ள முவட்டெடுக்குந் தனிச்
செவ்வாயான்..........................................................(௬)

எண்ணிய பற்பலரு முவர் நீருலகினிரும் பொறையோ விசையோ
வன்றித், தண்ணிய நற்றயையோ யிவ்வடி வெடுத்த தெனவுரைப்ப த
யங்குமேலோன், நண்ணிய சீர்க்கிறீஸ்து வின்பாலன் புளோற் பரலோ
க நணுகுவானொன், றண்ணியவோர் நெறிதழுவி யந்நெறியோர்க்கணியா
ய வமைதியுள்ளோன்..........................................................(௭)

இணையனா யொழுகு சவராயலு நாயக வலவ னிரு நீர்வைப்பிற்.......
றணையனார் மனம்வியப்பத் தன்றிறத்தைப் புலப்படுத்துந் தன்மைபோ
ல, வணையணி சேர்பல செய்யுட்டிரட்டுணைத்தான் மற்றவர்க்குந் தமர்க்
குமேவ, அணையதனி னுயர்ந்தோர் தங்கவிப்பலகா லமுக்கழுத்து நோக்
கவன்றே..........................................................(௮)

வறியனிரவலர்க்குதவ லொருவியப்போ வசையில் பொருள்வாழ்க்
கைமேய, நறியபெருஞ் செல்வருதவு தலோர் வியப்போவி தனை நாடும்வ
ல்லீர், சிறிய கவி நூலுதவ லொருவியப்போ தெரிசவரா லுப்பேர்ச்செம்
மல், அறியவொரு நூலுதவ லொருவியப்போ மெய்மை பெறவறைமி
னன்றே..........................................................(௯)

புத்தமுது திரட்டிவைத்த பொற்கலசமோ நறுந்தேன் பொலியக்கூட்டி, வைத்தசுவைப் பாகுபெய்த மணிச்செப்போ கண்டிஞெடு வடித்ததீம்பால், வித்தகமாக்கிய பொற்றட்டோ சவராயலு விரகன் விருப்பிற்சொன்ன, மெய்த்தகைமைப் பொருள்செறிந்தகவித்திறம்யாதென வுணர்ந்து விளம்புகேனே................................(௰)

---

ஷை ம. ா. ா. மீனுட்சி சுந்தரம்பிள்ளை யவர்களின் மாணுக்கருளொருவரும் கும்பகோணம் பிரவின்சியால் காலேஜ் தமிழ்ப் பண்டிதருமாகிய.

## ம. ா. ா. தி. தியாகராசசெட்டியாரவர்கள்

இயற்றியது.

# இரட்டைமணிமாலை.

தெய்வ வணக்கம்.

எவன்முற் பணிந்தோ ரியற்று தொழின் முற்று.....................
மவன்முற் பணிந்தே யறைவன்-சிவமே..............................
திரட்டைமணிநேர் சவராயலு மால் சீர்கொ........................
ளிரட்டைமணி மாலை யினிது......................................

குருவணக்கம்.

மன்னுமறிவானமைந்தோர் வைகுமவைக்கண் ணேயுந்..............
துன்னுவித்த மீனுட்சி சுந்தரமான்-றன்னை......................
நினையேனென்னுது நினைப்பே னென்பேனே........................
லெனையா ரிகழாதாரீங்கு.........................................

நூல்.

பூமேவு சோலைப் புதுவையாம் பொன்னகர்க்கோர்..........
தேமேவு செல்வச் சிந்தாமணியாம்-பாமேவு................
நற்ற ரணிதோட் சவராயலு நற்சீர்.......................
கற்றேறோ யற்றுர் கலி.................................(௧)

கற்றர்குழுவுளடு நடுத்திங்கள் கடுப்பவனும்..................
பெற்றர்தவமலைமேற் சுடர்போலப் பிறக்குவனுஞ்.................
செற்றர் நடுங்கியடி வீழப்புன்னகை செய்பவனு.................
மற்றர் முற்றேர் சவராயலுமாலன்றி மாநிலத்தே..............(௨)

மாவார் சவராயலு நாமவள்ளலைவான்.....................
பூவார்சந்தானம் புரையுமாற்-றவா.......................
மலையென்ப தொன்று முலைமாதே யதன்பா...................
விலையென்ப தொன்றுமிலை யேல்............................(௩)

இல்லாதவரும் பசுந்தேனசும்பு மினியதமிழ்.
கல்லாதவரு மிலராகத் தோன்றினன் கற்றுணர்ந்த
நல்லார்புகழ் சவராயலு வள்ளலிஞ் ஞாலத்தினிப்
புல்லாவறுமை மடமைகட்கேது புகலிடமே (௪)

புகரில்புவியென்றும் புரப்பதற்குவல்லா
னிகரில் சவராயலுப் பேர்நேயன்-பகரி
லொருவனெனிற் காருமுண்டென் றேதுவர் மற்றைந்து
பருவமுணராரிதுவோ பண்பு (௫)

பண்ணேயந்தீந் தமிழ் நூன்முழு தோர்ந்தநற்பாவலர்தங்
கண்ணேயன சவராயலு பூபனைக் கண்டவரும்
விண்ணேய் தருவை விழைவா ரெனிலங்கை மேவுநற்பா
லுண்ணேய மோவிப் புளிங்காடியு முணவுன்னுவரோ (௬)

உண்டார்பசிபோற் கெட்டோடும் பரிந்துதனைக்
கண்டாரைக்காணுங் கருத்தினன் - விண்டாரைத்
தாழ்த்தினனந்தஞ் சவராயலு மால்சீர்
வாழ்த்தினர் வெப்பவறுமை (௭)

மையேந்துவாள் விழிமாதே பொய்யாது பெய்மா முகிலைக்
கையேந்துநஞ் சவராயலு நாமங்கொள் கற்பகத்தி
னையேந்து சீர்புகறுவிற்கு மற்றோரமை தருசீர்
செய்யேந்து கன்னலுண்ணு விற்குவேட்பு சிவணுறுமே (௮)

சிந்தையிலும் வள்ளன்மை சேரார்க்குச் செய்யபுகழ்
வந்தணுகு மென்றலிம் மானிலத்திற்-கந்தஞ்
செறிதார்ச் சவராயலு மால்சீர் செப்ப
வறியாரிடுக்க ணறும் (௯)

அற்றார்க்கருள் சவராயலு நாமவதிபனெல்லாங்
கற்றார்ந்தவனென்றியான் சொலக்கேட்டகவிப்புலவ
ருற்றார்முன்னில்லையென்றேதல்கற்றான்கொலுணர்வுடைமை
பெற்றார்ப்பிரிவுறல் கற்றான்கொலென்றெதிர்பேசுவரோ (௰)

பேசிலினிக்கும்புகழே பெற்றசவராயலுமா
லேசில்புலவோரெங்கிருந்தாலும்-வீசிடுவன்
பொன்னுமணியு மிறும்பூதென்கதிர்கமலந்
தென்னுற் றொளிரச்செயும் (௧௧)

செய்யுந்தவமுடையார் குறிப்போர்ந்தென்றுஞ் செம்பொன்மழை
பெய்யுஞ் செங்கைச் சவராயலு பூபனைப் பெற்றுமகிழ்ந்
துய்யுந் தமிழ்ப்புலவீர் நீவிரோசென் றுரைக்கத்தருங்
கொய்யுமலர்த் தருவைச்சார் புலவரோ கூறுமினே (௧௨)

கூறுமொழி நாவினுக்குங் கொள்செவிக்கு நன்றோர்ந்து
தேறுமனத்திற்கு மின்பஞ் செப்புஞ்சீர்- நாறுமலர்த்

தார்பெற்ருர் திண்டோட் சவராயலு மனன்றி.............
யார்பெற்ருர்தோகா யறை.......................(௧௩)
அறைவார் முற்றோர்ந்தவ ரீத லொன்றே யுளனம்பொற் செல்வ....
நிறைவார் சவராயலு பூபனென்று நிலவவவ...................
னறைவார்தரு செந்தமிழ்மாலை யேற்ற னவிற்றுகிலார்............
மறைவார்மறதி யெலார்க்கும்பொது வென்றல் வாய்மையன்றே..(௧௪)
வாயாறச்செந்தமிழால் வாழ்த்தியுலகினுக்கோர்..........
தாயாகவந்த சவராயலுமா-றாயபுகழ...................
பாடினர் முன்னும் படருறு மேற்செங்கதிர்முற்...........
கூடியிருளுமிருக்கும்..........................(௧௪)
குருவார்சிந்தாமணியோதேனுவோ குறையா நிதியோ............
கருவார் தருமுகிலோ புலவோர் செயகவின்றவமோ..............
வுருவார்ந்துயர் சவராயலு நாமமொன்றுற்றதெது..............
மருவார் குழன்மடவா யினிதோர்ந்து வழுத்துகவே............(௧௬)
வழுத்துசெயகாணும மான்மாதவமே...................
பழுத்த சவராயலு பூபாலன்-கொழுத்தபுகழ்............
பாரொன்றெண்டிக்கும் படர்ந்து நடிக்கும் புலவ.........
ரோரொன்றெண் பாவிலிசைந்து....................(௧௭)
இசையார்தரு சவராயலு பூபனுமேற்றபெரு......................
வசையார் தரு மிந்திரனுமொப் பென்பவர் வான்றடவு...........
நசையார் பொன்வெற்பு மணுவுமமுதமு நஞ்சமுமெண்...........
டிசையுாறொன்றாமுங் கச்சொதமு மொப்பென்று செப்புவரோ...(௧அ)
செப்பார்ளமுலையாய் செந்தமிழோர்ந்தாருமவர்..........
வைப்பாஞ் சவராயலு மாலு-மொப்பரவர்..............
பாமாரி பெய்வரிவன் பன்னருள் சூழ்கொண்டு செம்பொ....
ஞமாரிபெய்வனிதனல்..........................(௧௯)
ஆதாரஞ் செந்தமிக் கானேன் புதுவைக் கரையன் மலர்த்...........
தாதார்தொடையலணி தடந்தோட் சவராயலு மால்..............
கோதார்தரா து குடிகொள்பொன்மாட மென்கோகனகப்............
போதாயப் பெலிகவெஞ் ஞான்றுந் திருவென்னும்பூங்கொடிக்கே(௨௰)

---

மாமேவு குருமணி குயிற்றியொளிதரு தவளமாடந்தொறுந் தவழும் வெண்-மதியை யன்புறுதங்கண் வதனமென முத்திட்ட மகிழ்நர் தலை சாய்த்து நாணப், பூமேவு திருவனைய மடமகளிர் புரிநகைப் புதுநில வருந்தவந்தப் - பொலிசகோரப்பு ளவர்நகில்கண்டு நாணுறும் புதுவை யம்பதியில்வாழ்வோன், றாமேவு பொறை வாய்மையருளினைய சுகுண மொடு தோன்றினே னூல்கள்யாவுந் - துகளற வுணர்ந்த சவராயலுமகீ பனித்தொல்புவிவியப்பவினிய, பாமேவுமதுரம் பழுத்தொழுகு நறிய தேம்பாவணிக்குரைவிருத்துப்- பகரிவன் பெருமையை விரித்துரகவர சனும் பன்னுதற் கரிதரிதரோ.......................(௨௧)

வேறு.

மருவிருக்குங் குழன்மடவார் மடலெழுதும் புயசயிலன் மகிழ்ந்து நாளுந், திருவிருக்குஞ் சோலையப்பாசாமி முகிலெழின்மனையிற் சிறப் பக்கூடுங், குருவிருக்குஞ் சபைகளிப்ப வியற்றேம்பாவணிக்கருத்தங் கூறினன்பூந், தருவிருக்கும் பொழிற் புதுவைவளர் சவராயலு மகிபன் றழைப்பமாதோ..........................................(உச)

வேறு.

பூமலிகுழலார் மடலெழுதழகன் பொருணயஞ் சொன்னயமார்த்திப் பொற்புறப்பற்பல்கவிபுகல்புலவன் பொழியமுதிசையுணர்மேலோன் தூமலிவாய்மைப் பூம்புனன் முழுகித்துகளிலாப் பொறையுடைபுனைந்து தொன்மையாம் புகழப்பூணணிந்து நாவலர்தந்துதிக்கு நாப்பீடத்திலமர்வோன், தேமலிபொழில்சூழ் குடந்தைமாநகரிற் செழிப்புறவாழ்ந்திடுசீலன் -திருவெலாமொருங்கு சேர்ந்துறப்பொலிந்து திகழ்துரைசாமிபூபாலன், பாமலிமனையிற் புதுவைவாழ்புலவன் பகர் சவராயலுவலவன் - பன்னூறு தேம்பாவணிப்பிரசங்கம் பார்புகழ்ந்திடப் புரிந்தனனே..........................................( உரு )

மதிவளரும்பாத மதிவளரவைத்தோன்................
துதிவளருஞ் சீர்சான்றதூயன்-கதிவளரப்................
பாடுகவிப்பாவலன் பன்னுசவராயலுவேள்................
நாடுகவிப்பாசுரத்தை நன்கு..........................( உசு )

கூனியலும் பிறைநடுவட் குடிகொண் மனைமலர்நிரதங்கும் பிட்டந்த வானியலு மலர்ப்புகழ்நாத்தழும்ப நனிவழுத்துபுநன்மாட்சி சான்ற தேனியலுந் தமிழ்ப்புலவர் நாத்தழும்பப் புகழ்வளர்க்குஞ் சீலவாரி கானியலும்பொழிற்புதுவைவளர்சவராயலுமகிபன்களித்துநோக்க.(உஎ)

மன்னுஞ்சிநேகப் பயிர்வளர்க்குமாமாரி ................
என்னுஞ் சவராயலுவேந்தன் — முன்னுக................
விக்கடித நன்குசெலு மின்பமவனுக்கீயுந்................
தக்க பதிலுந் தரும்..........................(உஅ)

சீர்மலிநஞ் சோலை யப்பாசாமிமால்புகழ்நூலிற் றெரிந்து கோத்த வேர்மலிசெந்தமிழிரட்டைமணிமாலைதனைமதிக்குமியல் பின்மிக்கோன் கார்மலிசெங் கரதலத்தா னற்குணங்கட் கீன்றதாய் கடுக்குஞ்சீரான் தார்மலியின் பொடுசவராயலு மகிபனிக்கடிதநன்குகாண்க.....(உகூ)

வல்லார் பலர்புகழ்ந்து வாழ்த்தப்புதுவை வதி................
நல்லான் சவராயலு நாமன் — கல்லா................
மடைமருவான் மருவான் சிறிது................
மிடையிஃதோர்வா னியைந்து..........................௩௰

நுண்ணுணர்வுடையோ ரொடுமரீஇயின்ப நுகர்வுறு தன்மையிவ்வுலகில் விண்ணுல கொக்கும் விழைவினதென்று மேலையோருரைத்ததன்கா

ட்டா, யண்ணுமாபுகழ்போர்த்தாய்ந்த நுண்ணுணர்வினமைந்தடைந்த வர்க்கெலாமின்ப, நண்ணுறப்புதுவை யமர்தருசவராயலுவெனு நாம வேள்காண்க ........................................(கூக)

வேறு.

சீர்வளருஞ் செயகானுமைப்பேர்வள்ளல் செய்தவத்தால் நன்குதித்து த்திருந்துங்கல்வி, ஏர்வளருங்கனதன நற்குணமுஞ்சார்ந்திங்கிலங்கு சவ ராயலெனுமதனவேட்குத், தார்வளருங்குழன்மடவீரமலன்றன்னைத்தனை யனுவீன்றமரிமாதுதண்ணார், தார்வளருங்கமலமலரடியைப்போற்றி நல் லன்புகொண்டு நலங்கிடுவீர்மாதோ ..............................(கூஉ)

நலந்திகழுஞ் சின்னையவேள் சந்திரம்மா ணற்றவத்திலினிதுதித்து நயமார்ந்தோங்குங்; குலந்திகழுங்கற்பு முதற்குணங்கள்வாய்ந்துகுலவுமெ ழிலிரதியெனும் ராசம்மாட்குப், பலந்திகழு மரியம்மாள் சுதனைவந்தப ரன்கமலமலரடியைப் பணிந்துபோற்றிக், கலந்திகழு மெழின்மடவீரு வந்துகூடிக்கலந்து முகமலர்ந்து நலங்கிடுவீர்மாதோ............(கூரு)

சீராருங்கல்விநலஞ் சிறந்த சவராயலுக்குங் ..............
கூராரும்வேற்கருங்கட்கோல விராசம்மாட்கும் ..............
ஏராருமரிசுதன்ற னிணைக்கமலப்பதம் போற்றித்..............
தாராருங்குழன்மடவீர் சார்ந்துநலங்கினையிடுவீர் ........(கூச)

## பதம்.

### இராகம் சாவேரி தாளம் ரூபகம்.

அலங்காரமெய்ம்மடவீர் நலப்புனைந்தே நலங்கிடுவீர் நல்..............
அமலன் சேசுகமலபதத்தன்பே புரியிவற்கே...............அலங்
தேசம்புகழ் புதுவைப்புரி செயகானருள் பாலன் குல..............
சீலன்மனதின்பமுறச் சிறந்தே நலங்கிடுவீர் ..................அலங்
துங்கந்தருகல்விப்பிரசங்கம் வளர்சுகுணன் மிகு..............
சுகமேபெற மதுரந்தருசொல்லீர் நலங்கிடுவீர்..................அலங்
சேலோகதிர்வேலோவெனத் திகழ்கூர்விழி மடவீர் புகழ்..........
சேருஞ்சவராயலு செவ்வேட்கு நலங்கிடுவீர். ..................அலங்
தேனோசுவையமுதோ செழுங்கனியோ வெனுமொழியீர் துரை......
செயகானருள் சீவரத்னஞ் சிறக்கநலங்கிடுவீர்..................அலங்
சித்தசனும்பரவும் வடிவொத்தபிரசித்தன் அவன்..............
சீர்கொண்டிடமலர்போன் முகந்திகழ்வீர் நலங்கிடுவீர்..........அலங்
வேதம்புகல் புனிதப்படிவிரும்பிச் செலுமேலோன் அன்பு..........
விரியும்புகழ்ச் சவராயலுவேளுட்களி கொளவே...............அலங்
மன்னுந்தமி ழென்னும்பொருள் வளருங்கிளர்வுடையோன் நிறை....
மகிழ்வேபெற மலர்மாமகள் வளருமன்னவனுக்கே...............அலங்
சீர்கொண்டொளிர் செயகானருள் செயமீறுயர்புதல்வன் மின்னுந்....
தேசம்பரிமளஞ்சேர்தரச் செஞ்சந்தனந் திமிர்ந்தே ..........அலங்

குற்றந்தவிர் புதுவைப்புரி குலவுந் தமிழ்ப்புலவன் எழில்..........
கொள்ளுந்திருமணக்கோலத்திற் கோலிநலங்கிடுவீர்..........அலங்
உலகம்புகழ் மரியம்மைதன் னொளிர்செம்பதம் பணிவோன் தூய....
உள்ளங்களி கொள்ளமிகவுகந்தே நலங்கிடுவீர்..............அலங்
மானார்விழிமடவீர்புகழ் வாய்ந்தசிரகிரிவாழ் எங்கள்..............
மீனாட்சிசுந்தர தேசிகன்மெச்சுங் கவிஞனுக்கே............அலங்
தழையும்புகழ்சோலை யப்பாசாமிமகிபதியா மிக்க..............
தனதனன்பு கொண்டவெங்கள் சவராயலு துரைக்கே...........அலங்
சுபசோபனஞ் செயமங்களந் துலங்கநலங்கிடுவீர் நலஞ்.............
சூழ்வோர்புகழ் சவராயலுதுரையோ னென்றும் வாழ்க........ அலங்

---

காஞ்சீபுரம்

## ம. ா. ா. கச்சபாலய ஐயரவர்கள்

### இயற்றியது.

எங்கள் சிவப்பிரகாச முனிவனுக்கோ ரிணையிலையென் றிருந்தேன்யா
ருந், தங்கள்கருத்திடையவ்வாறமைத் திருந்தார்புதுவைநகர் தழைக்க
வாழுந், திங்கள்புரை முகச்சவராயலு மகிபாநின் கல்வித் திறமைதேர்ந்
தே, நங்களறியாமை யெனவவரிசைத்தார் யானுமுள நாணினேனே (க)

வேறு.

திருவளரும்புதுவைநக ரதனின்மேவுஞ் செயகான்பூபதி புரிநற்றவ
த்தில்வந்த, மருவளருந்தொடையணிதிண் புயத்தன்வாட்கண்மகளிர் ம
டலெழுத வெழில் வாய்ந்தசீலன், தருவளருங் கரச் சவராயலு வேளுக்
குந் தழைபுகழ் சின்னைய மகிபன் தவத்தில்வந்த, குருவளருங் கவின்றி
கழும் ராசம்மாட்குங் கூறுவீர் சுபமங்களங்களமாதோ.........(உ)

## பதம்.

### இராகம் தோடி தாளம் ஆதி.

சுபமங்களம் மங்களம் நித்ய ஜெயமங்களம் மங்களம்- நல்ல
சொற்பெறுமுத்தமிழ் விற்பனனற்புத
தோயஜநயனன் சவராயலு மகிபதிக்கு. (சுபமங்களம்)

விபவமலி புதுவைநக ரிலகும்ப்ரகாசன்
விஜையன்குபேரன் கர்னன்விழை கௌரிகுலேசன்
செபமிறைவனைநோக்கிச் செயகானுலாசநேசன்
செய்துதரும்புத்ர சிகாமணியாம் விசுவாசன்

சித்தமதிற்பிர மத்தைநினைத்துசெபித்துதெறிப்படுமுத்தமர்பற்பலர்
விற்பனமுற்ற சுபத்வமிகுத்திடு பொற்பொடுகற்பமைமாதர் - ஜெய

மங்களஞ்சொலு மதிகயோகன் வரு
திங்களைநிகர்வதனமோகன் மிகு
பொங்குகுழங்கலை தெரிவிவேகன் மட
மங்கையர்தொழும் புனிததேகன் மிக

வாசமாரளக வனிதாமணி துதிக்கும் ராசம்மாளுடனே சவராயலு திதிக்கும். (சுபமங்களம்)

வாழையடி வாழையாய் வாழ்க வென்பாரோர் கோடி
மன்னும ல் போல்தழைத்து மலிகவென்பாரோர் கோடி
பீழையில்லாத செல்வன் பிறக்க வென்பா ரோர் கோடி
பெருங்கால மிவர்க்காயுள பெருக வென்பா ரோர்கோடி

பெட்பொடுநட்பமைசுற்றமனைத்துமனக்களியுற்று வழுத்தவிழுத்தகு நற்குண நற்செய்கையுற்ற மணத்தை தயலைக்கைப்பிடித்திடுநேசன், மிகு

| | |
|---|---|
| மதுரவசன முணர் போதன் | சழை |
| மதனை நிகருமெழில் நாதன் | உல |
| கதனி லிணையில் கலை நீதன் | வரு |
| சதுரனிலகு மதி கியாதன் | கலி |

தீர நாவலர்கள பாடுமற்புதகவிக்குத் தாருபோலுத வுதாரமுற்றிடு துரைக்கு. (சுபமங்களம்)

சீரிலகும் புதுவை நகரில் மருவுந் தூயன்
செயகான் மகிபன் முன்னஞ்செபதவ மென்னுஞ் சேயன்
பாரதனிலே கச்சபாலயன் தமிழ்நேயன்
பண்பினனைவருக்கும் பகரும்பெருஞ் சகாயன்

பத்மமலர்க்கிணை யொத்தழகுற்றுறு பத்தர்மனத்தில் நடித்துளவத் தையனைத்துமொழித்து நலத்தபதத்திமரிப்பெயரைப்புனைதேவி, தனை

| | |
|---|---|
| மன துற வழிபடு சீலன் | தன |
| தனைநிகர் தருதனபாலன் | எதி |
| ரிலையெனவருமதிமேலன் | வரு |
| மெவர்களுமகிழனுகூலன் | அன்னை |

நேசம்யாருக்கும் பொங்கமனதாயிருக்கும் ராசம்மாளுக்கும் எங்கள் சவராயலுக்கும். (சுபமங்களம்)

---

## தருமதானபுரம் பாரதபிரசங்கம்
## ம௳ ௱௱ கண்ணுவைய ரவர்கள்
## இயற்றியது.

பூவார்ந்த பெரும்புகழ்கொள் புதுவைநகரரசாளும் பூமான்கோமான்
காவார்ந்த கரதலன் தூப்ரான்துபுராயெனுங் குவர்னர்களிக்க நாளும்
நாவார்ந்தவின்சொனடைச் செந்தமிழோர் சிரமசைக்க நவின்றவின்பப்
பாவார்ந்த புகழ்ச்சவராயலு மகிபன்பிரசங்கம் பகர்ந்திட்டானே. (௧)

தவராஜர்மகிழ்தருநற்றருமம் வளர்புதுவைநகர்ச் சான்றோரியாரும்
எவராலு முடிப்பரிய தாயதேம்பாவணிப் பேரிந்நூலுக்குக்
கவராதமணிகொழித்த தெனவுரையிட்டா னிவனேகல்விவல்லோன்
சவராயலுப்பெரிய புலவனென்றார் யாமினியென் சாற்றுமாறே. (௨)

விரியொளிமாமணி கொழித்தவாரிதியி னரிதாக வியன்சீர்மேவி
யுரியபலவளநிறைந்த புதுவையில்வா ழறிஞரெலா முளம்பூரிக்கத்
தெரியவருவளனெனு மாமுனிவனணி சரிதத்தேம்பாவணிக்கே
அரியவுரைவெளிப்படுத்தி நஞ்சவராயலு மெதாலணிபெற்றனே. (ரு)

சந்ததமும் புகழோங்கப் புதுவைவளர் செயகான்செய்தவத்தில்வந்த
எந்தமனிதருள்வியக்குங் குனச்சவராயலு வென்னுமியற்பேர்மேலோ
னந்தமிகுசீர்வாழ்க வரும்புதல்வர் மனைவாழக வணிநாவாழ்க,வைந்தமி
ழ்ப் பாவினம்வாழ்க வினம்வாழ்கவென்றுசிபண்ணுவேனே. (சா)

---

## கோயமுத்தூர்

## ம. ரா. ரா. நாகலிங்க சுவாமிகளவர்கள்

## இயற்றியது.

மருமலர்ப்பொதும்பரின் வழீஇயபிழியும், வருக்கைமுட்புறக்க
னி மல்கியமதுவும், செங்கதலிக்கனி சிதறியசாறும், வானமளாவிய
மாங்கனிரசமும், பெருஞ்சினையுறுமிறால் பெருக்கியதேனு, மொன்று
பட்டாற யுயர்குணமியாவுந,துன்றியபெரியோ ரொருவனிவ்வுலகி
னன்றிசெயவரூஉ நலமெனப்பெருகிச், சுலவியபுதுவையந் தொ
ல்பதியுறைஇச், செயமுறுசெயகான் செய்தவத்தாலுதிக், திலக்கிய
விலக்கண மினிதுற மிகக்கற், றவ்வழிநிற்பா னருமைசால் கற்பின்,
மனையொடுமரீஇ மனையறக்கிழவனு, யன்புடனினியவை யறைந்து,
விருந்தோம்பலொடு, நன்றியறிதலு நடுவுநிலைமையு, அடக்கமோ
டொழுக்க மழுக்காறமையும்,பிறனில்வெஃகாப் பெற்றியும்பயனில,கூ
ற்றுனாயாமையுங் கோளாடாமையுந, தீவினைக்குளஞ் சிறிதுமொவ்
வாமையு, மொப்புரவறிதலோடு புதக்கொடையு, மெவ்வுயிர்சுகண்ணு
மிரங்கிடுமிரக்கமும், பூணெனக்கொண்டு பொ புறநடப்போன், ஐம்
பொறிபிடனுறீஇ யைம்புலனுகரு, மனத்தினைவாங்கி மத்தகத்திருத்
திச், சகலகேவலந் தாண்டியைந்தவத்தைக், கப்பாற்பட்டங் கறிவினி
லறிவாய்ப், பூரணப்பொருளைப்புவனகாரணனை, யாரணமுடியு மளப்ப
ருஞ்சோதியைக், காணுதுகண்டு பூணுதுபூண்டுச், செம்மாந்திருக்குந்
திருவுடையோர்க்கு, வழிவழியடிமை யாகியமாண்பன், சவராயலுவள்
ள லெனும்பெயருடைய வேநதல்பராபரம், கன்பாலருங்கவி யமைத்
துப்புகழ்நிறீஇ, இம்மையிலரசரா லெழில்பெறச்செயும், பரிசுபெ
ற்றுலகிற்பாவலர்நாவலர், புகழ்ந்திடப் பெற்றனன்போலும்,அவன்புக
ழுரைக்கு மாண்டகையுடையோ, ரிவணிலையவணில யெவணுமின்றே.
(க)

---

திருநள்ளாத்து தேவஸ்தானத்தின் தருமகர்த்தராகிய

## ம. ா. ா. சோமசுந்தரதம்பிரானவர்கள்

இயற்றியது.

செய்யசவராயலுவேள் செய்பிரசங்கத்தவையிற்
பையவெதிர்த்துப்பலர்தோற்றார் - மெய்யே
சொலல்வல்லன் சோர்விலனஞ்சானவனை
யிகல் வெல்லல்யார்க்கு மரிது. (க)

---

சித்திலிங்கமடம்

## ம. ா. ா. தி. அ. சிவானந்தசுவாமிகளவர்கள்

இயற்றியது.

பூமேவுபொய்கையும் பொங்கருஞ்சூழ்ந்திலகு புதுவையினி லோங்கு செயகான்- புரிதவப்பயனின்றுசவராயலென்றோர்புதல்வனைப்புலமை மிக்க, தேமேவுசெவ்வந்தியலர்சிரகிரிக்கண்வரு சிவனடியரிற்சிறந்து-தி கழுமீனாட்சி சுந்தரதேசிகன் வயிற்செந்தமிழெலா முணர்ந்து, தூமே வுமத்தேயுமார்க்குலூக்காயோவான் சொன்னசுவி சேஷமாய்ந்து-சுகிர்த மாமுனிவர்மேற்றிராணியர் துதித்திடச் சுதனெனுஞ் சேசுபரன்மேற், பாமேவுநற்கவிகள் பாடிப்பரீசரசர் பால்விடுத்தளவிறந்த- பாவலர்கள் மெச்சவவ்வரசர் தருசெம்பொற் பணீஇ யணிந்தோங்கினனரோ. (க)

---

பொம்மையபாளையம் சிவகஞ்சி மயூராசல நிவாசவெதிஸ்வர கர்த்தரான சிவக்யான பாலயசுவாமிகள்மடத்துத்திருக்கூட்டத்தாருளொருவாகிய

## ம. ா. ா. பாலசித்தானந்தசுவாமிகளவர்கள்

இயற்றியது.

மீனாட்சி சுந்தரப்பேர் மேவுதமிழ்க் கடலிற்
றானாட்சியாமமிர்தந் தானுண்டு - வானுள்
புரந்தரனை மீறு சவராயலு போற்பார்மால்
புரந்தருளு மென்னுமாயும் பூண்டு. (க)

மணிவளர்கடலிற் கண்டுயில்நெடுமால்மலரயன்வானவர்பணிய-வரங் கண்மிக்களிக்குஞ் சிவபெருமானை மனத்துறவிருத்தி யாவருக்கும், அ ணிவளர்கல்விப் பெரும்பொருளளிக்கு மன்னையெப்பாகிய வினியா னற்புதக்கவிஞர் பற்பலர்புகழுமாசின் மீனாட்சி சுந்தரவேள், பணிதனை முடியிற் கொண்டுமெனையிற் பணியின் வாதனையுறதந்தப் -பணிமு டித்தருளப் பரவைசூழுலகிற் பணித்ததையின் றெனக்களிப்பாய், தி ணிமிகுமள்ளர் குரவைகொண்டாடுஞ் சிறப்புறும் பண்ணை சூழ்பாகூர் செழித்திடுஞ்சவராயலுவெனுஞ்சுகுணசெயசெயகான்வரோதயனே(உ)

திருவாரூர்

## ம. ா. ா. சிவசாமிசாஸ்திரியாரவர்கள்

இயற்றியது.

மாமேவுமணிமார்பன் நமசிவாயம்பிள்ளை மகிழயாரும், பூமேவுபொழிற்றிருவாரூரின்முன் சீபதிகாரம் புரியுநாளிற், றூமேவுமெழிற்றேம்பாவணிக்கும் பன்னூற்குமுரை சொற்றான்கட்டோர், நாமேவு தம்புதுவைவாழ் சவராயலு சுகுணனன்குமாதோ ....................(க)

---

ஷ. ம. ா. ா. மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களின்
மாணாக்கருளொருவராகியதிருவீழி மிழலை இராமாயணப்பிரசங்கம்

## ம. ா. ா. சாமிநாதக்கவிராயரவர்கள்

இயற்றியது.

செங்கமலத்தடப் புதுவைமேயசெயகான் மகிபன் செல்வனை, துங்கமிகு தமிழ்ப்புலமைத்தூய சவராயலுமால் சொற்பாவைப், பொங்கமுத மெனிற்றேவரொமதென்பர் கரும்பெனிலோ பொருவிலோர், ரங்கசவேடனதென்பா னெனிலினியா முவமையெடுத் தறைவதென்னே (க)

விண்மணக்கும் பொழிற்புதுவை மேயசெயகான்மகிபவேளளித்த, வுண்மணக்குந்தமிழ்ப்புலமை யுயர் சவராயலுபுலவனுரைத்த நூலை, எண்மணக்கு மறிவுடையோ ரிசைத்திடக்கேட்கக் தொடையினியலை நோக்கக், கண்மணக்குஞ் செவிமணக்கு நாமணக்குமெனிலினியான் கழறலென்னே ................................ (உ)

விடைக்கு நிகரொனும் புதுவைச் செயகான்மன்னவன் புரிந்த விழுத்தவத்தால், கிடைக்கு மருமான் சவராயலு புலவன்றிருவாயாற் கிளர்ந்ததுரன்னூ, னடைக்கு மிலக்கணத்தொடைக்கு முயர்கவியிலொருகவியை நவின்றாற்றுன்பற், றுடைக்கு நலம்படைக்கும் வினையுடைக்குமெனிலிதன் பெருமை சொல்லற்பாற்றே ............................(ங)

பூவலயம் புகழ்புதுவைச் செயகான் மாலருள்புதல்வன் புலமைமிக்க, பாவுலவு மெழிற்சவராயலு புலவன்சொலு நூலைப்பகரக்கேட்டுத், தாவிலரவுக்கிறைவன் பரிபவத்தான் மெலிந்துமிகத் தண்ணீர் வற்றி, நாவிரண்டாய்வெடித்து மண்புகுந்தா னெனிலினியானவில்வதென்னே(ச)

மங்களஞ்சேர் புதுவைநகர் செயகான்மாலளித்தருளுமைந்தனை, வெங்களசவராயலு நற்புலவனியற்றிய தமிழினியலைநோக்கிச், செங்கயனேர் விழிவாணிவேதனையுற்றுடல்விளர்த்துத்திகழநாளுந, துங்கவனமிறங்காமலிருந்தனளென்றா லினியாஞ்சொல்வதென்னே............(ரு)

கற்கண்டோ செந்தேனோ கார்கோளிடத்தமரா்................
முற்கண்டதெள்ளமுதோ முக்கனியோ- சொற்கண்டு ........
தேம்பாவணிபுதுவைச்சேர் சவராயர்ப்புலவன்...............
தேம்பாவணியுரைக்குஞ் சீர்.................................(சு)

தனத்தையனங்கன் சரத்தாற்றுளைக்க மனமயர்ந்துளைந்து தளைவிழ்ந்
தேன்வி, தனத்தையனங்காளவற்குச் சார்றென்றுண் மடமகளித்தரணி
யோரோத், தனத்தையணிகரத்திருமா றனைநிகருஞ் செயகான்மாறனை
யாநற்சந், தனத்தையணை திண்டோளாய் தக்கசவராயனு செந்தமிழ்ச்
சிங்கேறே..........................................................(எ)

தூயசனந்திகழ்புதுவைச் செயகான் மன்னவனருளுஞ் சுகுணன்கல்வி
நேயசவராயனு மாறேளணிநற்றெரியலன்றி நினையுந்தோறும்......
வாயசனங்கசந்தமளி மிசைத்துயிலா தமருமடமாதுக்கிந்தப்........
பாயசமோதவிர்க்கு நெடுந்தடனு புகர்வாளனகட்பாவைமீரோ......(அ)

---

## கும்பகோணம்
## ம. ா. ா. சா. துரைசாமிமுதலியாரவர்கள்
### இயற்றியது.

வளமலிபுதுவை மாநகர்க் கணிப்ய வயங்குறு மெனது கண்மணியே.
களமலியுளத்தார் கலப்புறச்சீலா கவின்செயகானருள்பாலா.........
தளமலிமலர்த்தே னெனமொழிவாயாசற்சவராயனுநேயா..........
உளமலிகளியானுறப்பிரசங்கமுரைத்தனையதற்கென்கைம்மாறே...(க)

---

## கும்பகோணம்
## ம. ா. ா. குமாரசாமிக்கவிஞரவர்கள்
### இயற்றியது.

நிதியாலளகைப்பதிவேந்தும் நிறைகல்வியினு லரவாகும்..........
மதியாலமரர்தொழுங்குருவும் வனப்பால் வேளும் வயங்குவரால்......
துதியான்மிக்கவவையொருங்கே துதைந்தசவராயனுமாற்கு..........
முதியாரவனைத்தனித்தொப்பா மொழியவென்று முன்னுவரோ...(க)

பொய்யினுக்குப் பேரிடியாய்ப் பொலிவானுமெஞ்ஞான்றும்புகரிலாத
மெய்யினுக்குப் பெற்றுவளர்த்திடுந்தாயா யன்புடனே விளங்குவானுங்,
கையினுக்குவனப்புதவுமணிகொடையென்பானுமெழில்கதிப்பவன்ன
ஞ், செய்யினுக்குத்தரும்புதுவைவாழ்சவராயனுநாமச்செயவேடானே.

---

## கொட்டையூர். ம. ா. ா.
## சாமிநாதக் கவிராயரவர்கள்
### இயற்றியது.

நாவெனுமுறத்திற் கவிகளைநினைத்து நன்குறப்புடைத்ததிற் பதராய்
ஓவுறுமவற்றை யொழித்துநன்மணியா யுற்றநற்கவிகளே கொள்ளும்
பாவலன்சவராயனுப் பெயர்பூண்டோன் பல்பெருமேஸ்முனிமுதலோ
ர், மேவியின்புறத் தேம்பாவணிக்குளாயைவிளம்பினன் குடந்தையின்
மாதோ..........................................................(க)

வேளார்காணியிலிருக்கும் தன்னிலப்பாடி இராசகோபாலப்பிள்ளை
யவர்கள் குமாரர். ம. ள. ள.

## நடராசப்பிள்ளையவர்கள்

இயற்றியது.

கலைமகளேயுனையுமினி வருந்துவதிற் காரியமென் கலைவலோரில்......
விலைபகராமணி சவராயலு வலன்வேளார்காணிமேவி யந்தத்........
தலைமதின்வாழனை மரியைத்தரிசித் தெங்களுக்குச்செந்தமிழையெல்லா
மலிதரஞானதிக்கத்தேவனில்லி லின்பமுடன் வழங்கினனே.......(௪)

---

தஞ்சைமாநகரம்

## ம. ள. ள. கிஷ்ணசாமிக்கவிராயரவர்கள்

இயற்றியது.

பொன்னைப்படைத்துக் கவிவாணர் யார்க்கும் புரிந்துதவ
வுன்னைப்படைத்துச் சவராயலுவெனு மொப்பில்பெயர்
தன்னைப்படைத்தமகிபா வொருபயன்றானுமிலா
தென்னைப்படைத்த வொருவனடுநிலை யேயந்தவனே. (௧

தேனேயெனக்கவி சொல்லவு மக்கவிச்செயயபொரு
டானேவிரித்துரை கூறவு மேற்றவர்தம்மைப்பிறர்
கோனேயெனச் செயவுஞ் சவராயலுக் கோவிருக்க
யானேபிறந்து பயனென்னையோ புகலாயிழையே. (௨)

---

தஞ்சைவெண்பாப்புலி

## ம. ள. ள. அரங்கநாதக்கவிராயரவர்கள்

இயற்றியது.

பொற்றகடாம் பூணார் புயாசலனே புண்ணியனே
நற்குணனே மெச்சுசபா நாயகனே- சொற்குளுயர்
வாணர்க்கிரங்கு சவராயலு வள்ளாலுன்னைக்
காணக்களிக்குமிரு கண். (௧)

உள்ளமுவந்தியாவுலுத்தப் பசாசுகளை
வள்ளலெனப்பாடி மதியாதே - தெள்ளியசீர்
வித்தைத்திறனறியும் வேள் சவராயற்குண
ணத்தத்தைக் கண்டோ ரகம். (௨)

மஞ்சுமிருநிதியு மாமணியுந்தேனுவுமே
யஞ்சு மஞ்சியப்பா லகலுமே - மிஞ்சும்
வடிவுறு நற்பூம் புதுவை வாழ்சவராயற்கோன்
கடிகமழுந் தாமரைப்பூவ லைக்கு. (௩)

வட்டமதி முகத்தாள் மத்தகெஜ மாமுலையாள்
கட்டழகுமேவுமொரு காரிகையாள் - இட்டமதாய்த்
தேடிமயலுறவே செல்வ சவராயலுனை
நாடிமடலெழுதினாள். (௪)

மண்ணோங்கு நம்புதுவைச் சவராயலு மாவலவன்
திண்ணோங்கு செம்பொற் றகடுபெற்றானிச் செகமதனிற்
கண்ணோங்கணிகவுரிக்குலமுஞ் செயகாணலமும்
விண்ணோங்கிருசுடர் போலே யெந்நாளும் விளங்கிடவே. (௫)

---

தஞ்சைவித்துவான். ம.ா.ா.

## அருளப்பமுதலியாரவர்கள்

இயற்றியது.

புதுவைச்சவராயலு வல்செய்வேலைப்பொருவு கண்ணார்.............
புதுவைச்சவராயலு க்கோதைத்தேவிக்கார் பொற்பரிணம்............
புதுவைச்சவராயலு த்தென்னை நின்னிடம் போக்கினர்வா............
புதுவைச்சவராயலு மாலவரின்பம் புல்லுதற்கே................(௧)

வாசவரவிந்த மலர் வாசமாதன்னவெம்மின்................
வாசவனேருன்மயலா வாசமைந்த - வாசடமா................
வாசவராயலு வாசசியானைந்தாராள்......................
வாசவராயலு மன்..............................(௨)

---

காஞ்சிபுரம் காந்தப்பிரசங்கம். ம.ா.ா.

## குமாரதேவரவர்கள்

இயற்றியது.

ஓது புதுவாபுரியி லுற்ற செயகானிநிய......................
மாதவத்லால் வந்து தமிழ்வாணருக்குச் - சீதமுறுங்...............
கோணுதளிக்குங்குரிசில் சவராயறனைக்......................
காணுதகண்ணென்ன கண்..............................(௧)

யோவான் முதற்பெரியோ ரோதுஞ்சுவிசேஷம்............
ஓவாதே தேர்ந்திருக்கு முள்ளத்தான் - பாவாணர்..........
சந்ததமும் வாழ்த்துஞ் சவராயற் பூபனென்றும்...........
வந்தவனைக் காப்பான் மகிழ்ந்து....................(௨)

சீரிருக்குங் கற்பகம்போற் செந்தமிழ்வாணர்க்குதவும் ..............
வாரிருக்கும் பூண்முலையார் மடலெழுது மன்மகனே ..............
காரிருக்குங் கைத்தலத்தோய் கள்ளிருக்குஞ்செப்யமலர்த்..........
தாரிருக்குந் திண்டோட் சவராயலு துரையே....................(௩)

திருப்பாதிரிப்புலியூர் இயற்றமிழாசிரியர்

## ம. ள. ள. க-ா- சிவசிதம்பரமுதலியாரவர்கள்

இயற்றியது.

அரசங்க மிருபுதுவை யெனுமவனிதனிற் பொங்குசெயகானுன.........
விரசங்கமலி நளிர்பாற் கடலீன்ற சவராயலெனும் பேர்பெற்ற........
வரசங்கநனிகொழிக்குமுயர்தேம்பாவணியெனும்பேர்வாய்த்ததண்ணம்
பிரசங்கவியன்முத்தம் விலைமதிப்பாரோவரிந்தப்பிரபஞ்சத்தே....(௧)

---

தருமநாதபுரம் வித்துவான்

## ம. ள. ள. ஜெகநாத பிள்ளையவர்கள்

இயற்றியது.

உல்லோருறுபுதுவை வாழ்சவராயற் சுகுண....................
நல்லோனே நாவலர்க ளுயகனும்- அல்லோர்...............
இணைருழ்த்து நாறு மலரனையனென்றே ...........................
யுணரவுணாக்கு முலகு ..................................(௧)

தெள்ளுந் நற்பதவண்ணமுங் கோவையுஞ் செப்பியேவுதவாதவு ளுத்தர்மே, லுள்ளம்வாடித்திரிந்தலைகின்றதேனுங்கு நஞ்செயகானனுமுத்தமன், பிள்ளையாகவுதித்துநற்பாவலர் பேணவேகலி மாற்றுமுதாரனும், வள்ளலாஞ் சவராயலைச்சந்ததம் வாழ்த்துவீர் வாழ்த்துவீர்கவிவாணரே.

தேடித்தனத்தைத்தமிழ்க்குக்கொடாமற் றிருடருக்குங்........
கூடித்தழுவும் விலைமாதருக்குங் கொடுப்பதல்லால்............
நாடித்திருப்புதுவைச் சவராயலு நாயகன்போற்..............
பாடித்தனிவரும் பாவலர்க்கீபவர்ப் பார்த்திலமே..........(௨)

---

ஷை ம.ள.ள. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின்மாணக்கருளொருவரும் திரிசிரபுரம்சிதம்பரம்பிள்ளையவர்கள்குமாரருமாகிய உபாத்தியார்

## ம. ள. ள. சுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

துங்கமிகு நித்யபரிபூரண சதானந்த தொன்மையனிருஞ்சரிதமுன்-றேமறவுணர்ந்தவுயர் வீரமாமுனிவனாற் சொற்றதேம்பாவணியெனும், பங்கமறு நூலையிந்நிலமுனுற்றிய தவப்பயனுவுதித்துலைவிலாப்- பண்பினின்றெல்லாவுயிர்க்குநற் புகலிடப்பான்மையா யரசர்போற்று, மங்கலமுயங்கவிக் கருடிவானெனிர் சோலைவள்ள லப்பாசாமிவேள்-மன்றத்திலறமுறைப்பொருள்கருதிவானளா மாடமலி புதுவைநகர்வாழ், திங்களன செயகா னளித்தசவாயலு சிகாமணிப்புலவனன்பாற்- றோர்ந்துபிரசங்கிப்ப தோர்ந்தனந்தன் பெருஞ் சேட்பிலம்புக்கினனரோ......(௧)

திரிசிரபுரம் உபாத்தியார்

## ம. ரா. ரா. குப்பமுத்தாபிள்ளையவர்கள்

இயற்றியது.

ஏர்செயும்புலவராதி யுற்றுணர்வரொவருளுமின்பமூற்றெடுப்பச், சீர்செயு ந்தருமமுதலொருநான்குஞ்சிறந்ததேம்பாவணிநூலிற், கூர்செயும்பொ ருளகள் விரித்துரைபுனைந்தான் குறைவறமகிழ்வு கூர்ந்துன்னிப், பார் செயுஞ் சீர்த்திப்பரவுநற் சவராயலுவெனு நாமப்பண்பினனே. ( க )

நற்றவனுகுஞ்செயகா னுயகன்சேய் தானிலத்தின்..........
முற்றுநந்தமிழ்புலவர் முன்னுகுணன்-அற்றமில்சீர்.........
பூணுசவராயலுபூபன் புகறேம்பாவணிநூன்..............
மாணுரைகேட்டுண் மகிழ்ந்தோமால் ................(உ)

தேம்பாவணியென்னு நூலியலோர்ந்துயர்சீர் புதுவைப்...........
பூம்பாவலன் சவராயலுபூபன் புகழ்புலமை ....................
கூம்பாவரனின்று செய்பிரசங்கம்விண்கூடமுதும்..............
வேம்பாவதியக் கரும்பாயினிமை விளைத்ததுவே.............( ௩ )

கற்றவருள்ளக் கமலக்கன்னியன்ன மென்னக்கா..........
முற்றவமினற் றமிழ்தேர் முற்றறிவன்-கொற்றச்..........
சவராயலு நற்பேர் சார்புலவ னன்பே....................
எவராலுங் கூறற் கிதம்..................................( ச )

---

திரிசிரபுரம். ம. ரா. ரா.

## சரவணப்பெருமாளுபாத்தியாயரவர்கள்

இயற்றியது.

சீர்கொண்டமேகலை சுமந்துநனியொசிகின்றசிற்றிடைப் பொற்பார்முலை த்தேங்கோதைமாதர்முகம்விழி காதுவாயிதழ்செறிவெணகைபசியகண் டம்- செய்ய தாளிவைகட்கு நாமனுதினம்புலவர்செப்புமுவமானமாகத் திகழ்வரங் கொள்ளவொரு தாணின்றும்முழுகியுந் தெளிவுமிகவைந்தடை த்தும், பேர்கொண்டதவ முஞற்றற்கறம் வழாநிலம்பேருலகினம் புது வையே - பெரிதுநன்றெனவந்துமுளரிநீலம்வள்ளை பெட்புறுங்குமுதமு தலை- பிரபைதருதாளநந்தாமை செய்தென்னவொளி பெருகு நீர்வாவி சூழ்ந்த- பேசரியவந்நகர்தனிற் செல்வமியாவுநிறை பிரபுசெயகாயக ன், ஏர்கொண்டதவவூதியங் கவியிராசர்களெடுத்துரைதமிழ்ச்சாரம் - ஈ கைநன்மொழிதேவ வேசுநாதன் வேதவினிய நூனெறியிவையெலாம் எவருங்களிப்புறக் கற்றபுண்ணியபுருடனெங்கள் சவராயலுமுகில் - எண் ணில்கலையுணர் தெரிவல்வீரமா முனிவன்மு னியற்று நற்றேம்பாவணிக் கார்கொண்டவாரிதிகளித்துண் டதிற்பரவு கன பொருள்களுள்ளனவெ லாங்- கருதித்திரட்டியும் விரித்துமினிதினிதென்று காதினன்மாந்தி

மாந்திக்-கற்றுணர் விவேகியர்களின்புற வுதாரணங்கருவிநூல் விதிக ளெல்லாங்-காட்டிப்ப்ரசங்கமழை பெய்தனன் புலவர்நுகண் மணியெ னச்சிறந்தே..................................................(க)

திரிசிரபுரம்

## ம. ரா. ரா. சதாசிவ நாவலரவர்கள்

இயற்றியது.

தேங்கு பெருங்கல்வி யறிவொழுக்கம் பாற்சுவையேபோற்றிகழ்ந்து மேவ, வோங்குபெருங்கொடையே மானிடவுருவாய்ப் புதுவைநகருதித் தென்னூன்றும், வீங்குபெரும் புகழ்ச்சவராயலு நாமம்புனைந்தினிது விளங்கப்பெற்ற, வாங்குபெருங் கடற்புடவிக் கைந்தருவிலாமையினால் வழுமையென்னே..........................................(க)

விண்ணுலகுமண்ணுலகுமோர்ந்திதனினிதுசிறப்புமேவிற்றென்ன வொண்ணுறுமோ விண்ணுலகு புலவரொடுமகபதியுமுளதேயென்னி னண்ணுறுமிம்மண்ணுலகும் புலவரொடு புகழ்ச்சவராயலுநன்றம, ம ண்ணுறுவள்ளலையுளதுமருங்குலிற நெருங்குமுலையலங்கன்மாதே. (உ)

திரிசிரபுரத்தைச்சார்ந்த சிந்தாமணி. ம. ரா. ரா.

## க. பெரியண்ணப்புலவரவர்கள்.

இயற்றியது.

பூவிருக்குமலர்ப்பொதும்பர் புடையிருக்கும் வண்புதுவைப் பூபன் றெய்வக், கோவிருக்கு மலர்க்கரத்தான் குணமிருக்குமின்மொழியா ன் கூறுநல்லோர், பாவிருக்கும் புகழ்ச்சவராயலுநாமவேளபெருஞ் சீர் பகர்ந்திடப்பன், றுவிருக்குமனந்தனுக்கு மரிதென்றலியா னென்னேந வில்வன்மாதோ............................................(க)

பொன்னுமணியுந் தமிழோர் புலவரொனும் பயிர்தழையப் பொழி யுங் கொண்மூ, வென்னுமதிமிக்க சவராயலுவேள்புகழ்ப்பெருக்கா லெ லாம்விளர்ப்பத், துன்னுபுவியிலெனுரொலாந் துயருறுவர் தமக்கின்பந் துயமதல்கு, மன்னுமெழிலிள்மாதர் கருங்குழலும் விளர்க்குமென மதித்துமாதோ..........................................(உ)

கற்றோர்களசிலர்புதுவை மாநகருக் கணியாகக் கவினமேவி, யுற்றோ ர்கட்குதவு சவராயலுமால்பெரும்புகழை யுரைத்திடாமன், மற்றோரை ப் புகல்வதெல்லாம் வண்சோலைமாங்கனியை வாஞ்சியாது, சிற்றோகை யொடுநிம்பக் கனிகவருங் கொடிச்செயலேசிவணுமாதோ.......(ரு)

மாமேவு புதுவைநகர்வாழ்சவராயலுவள்ளல் வறிஞர்யாருந்....... தேமேவுசெல்வமுறச் செயச்சில்லோர் கொடுவறுமைதீராரந்தோ... கூமேவுமுயிர்விழிகட் கொளியருளுமிரவிமுனங் கூகைக்கூட்டந்... தாமேவுவிழிகளிரு ளகலாமைக் கென்செயலாந் தரணியோரோ....(ச)

வேறு.

அடுத்தார் மகிழச் சவராயலுப் பெயரண்ணலின்பங்...............
கொடுத்தாலுந்துன்பஞ் சிறிதுமெஞ்ஞான்றுங் கொடாமையெண்ணு..
ரெடுத்தாய்ந்து முற்றுணர்ந்தார்களெல்லாருமிடைபுகுந்து.........
தடுத்தாலுமெல்லாங் கொடுப்பனென்றேகவி சாற்றலென்னே....(ரு)

வேறு.

திண்டிறற் செயகானுமைவேடவமோ சேர்புலவோர்கள்செய் தவமோ
பண்டருந்தமிழ்செயமாதவந்தானோ பாருளுற்றியதவந்தானோ, தண்ட
ருப்பொழில்சூழ்புதுவை மாநகர்செய்தவஞ்சொலோவவணவதரித்துக்,
கொண்டனுறவே பொன்மழை பொழியுங் கோச்சவராயலுமாமே.ல

---

திரிசிரபுரம். ம. ா. ா.

## மருதநாயகம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

புவிராசர்போற்றுஞ் சவராயலுவிந்தப் பூவுலகிற்..................
கவிராசருள்ளங்களிக்கத் தேம்பாவணிக்காவியத்தைச்............
செவிதாப்பிரசங்கஞ் செய்தனன் சேடனுந்தேமலருற்............
பவிமாதுங்கண்டு சபாசெனுந் வார்த்தைப்பகர்ந்திடவே........ (க)

---

திரிசிரபுரம். ம. ா. ா.

## வயித்திலிங்கப்பத்தரவர்கள்

இயற்றியது.

மதிவளர் வீரமாமுனியன்பால் வகுத்ததேம்பாவணியென்னுந்.....
துதிவளரமுதை யன்பினர்செவிவாய்த் துகளறப்பூட்டினன்புதுவைப்.
பதிவளர்செயகானரபதிதவத்திற் பண்புறத்தோன்றியகல்வி ........
நிதிவளர்சவராயலுகவிராஜ னிகழ்பிரசங்கத்தான்மாதோ .........(க)

---

வரகனேரி சங்கீதவித்துவான். ம. ா. ா.

## மகாலிங்கவாத்தியாரவர்கள்

இயற்றியது.

கட்டிப்பணயத்தை வேசையர்க் கீந்தவர்காலில் விழு........
மட்டிப்பிணங்களைப் பாடிலென்னுமிசை வான்முழுது......
மெட்டிப்பரவுஞ் சவராயலுமன்னை யேத்திநகா...........
லட்டிப்படுவதுண்டோ புலவீர்வரு மாடகமே..........( க )
பொருளாகுமொன்றைத் தெளிந்தப் பொருட்பரன் போதித்தமெய்த்.
தெருளாரணநெறி நீங்காதவுன்னைத் தெரிசிப்பதே...............
யிருளான சஞ்சலந்தீர்க்கின்ற நன்னிலையென்றடுத்தே............
னருளாய் புதுவைச்சவராயலு வெனுமற்புதனே..............(உ)

## சென்னை

இராஜதானி பிரஷிடென்ஜிகல்லீஷ் தமிழ்ப்புலவர்

## ம. ா. ா. பொன்னம்பலமுதலியாரவர்கள்

இயற்றியது.

கயலாடு பைம்பணைசூழ் புதுவைநகர்மேய கலைவல்லோன்செயகான்பூபதிதவத்தால்வந்தோன், இயலாடு தமிழ்ப்புலமைக் கொருதிலகமாகி இலங்குமீனாட்சிசுந்தரமேலோன்றன்பால், செயலாடுபன்னூலுந் திரிபறவோர்ந்துணர்ந்த சீராளன்சவராயலேந்திரன் மூதறிவால், வியலாடு பலசெய்யுட் டிரட்டென வொன்னூலைத்தான் மேதினியுள்ளோருள்ளம் வியந்துவப்பமாதோ.................................(க)

சென்னை இராஜதானி பிரிசர்ச்சிமிஷியன் தமிழ்ப்புலவர்

## ம. ா.ா. தெய்வசிகாமணிமுதலியாரவர்கள்

இயற்றியது.

சீர்மருவு கற்பகநறுந்தேன் கொணர்ந்துதன் தேன்புலவிதீர்த்தருத்திச்-சிறையளிதமீஇத்துஞ்சுபைந்துணர்ப்பொழில்சூழ் திருப்புதுவைநகரின்வாழ்வோன், கார்மருவுகரதலச்செயகான்மகீந்திரன்கருதருதவப்பேற்றினாற் - காசினிகளிக்கவந்தோன் பலகலைக்கடல் கடக்கவொருபுணையதாகப், பேர்மருவு மீனாட்சி சுந்தரவரோதயப் பெரியோனையே பற்றியோன் - பேசுசற்குணமேரு கவிராசர்சேகரன் பீடுபெறு சுகிர்தசீலன், பார்மருவுநேயசவராயனு நன்னாவலன் பன்னுபாத்தேன்பெருக்குப் -பாவலரகஞ்செவி மடுத்துள மடுத்தலை பரப்புபு நிறைந்ததன்றே.

சென்னை இராஜதானி

சூளைசெங்கல்வராய நாயகர் பாடசாலைத்தமிழ்ப்புலவர்

## ம. ா.ா. சுப்பிரமணியப்பிள்ளையவர்கள்

இயற்றியது.

சீர்மருவுமேதினியி லென்றோன்று மொரூலாச்சிறந்துமேவ........
ஏர்மருவுமணிமாடப் புதுவையெனப்பெயர்மேற் கொண்டிலங்குநல்ல.
கார்மருவுதண்டலைசூழ் கன்னிநகர்தனிற்செயகான் கரிசிறுய்ய.......
நார்மருவுசுதன் சவராயனுநாமநாவலவ னவின்றிட்டானே........(க)

மணிகொண்ட சொற்சுவையும் பொருட்சுவையுங்கனிந்தொழுகுப்வளஞ்சேர்செய்ய, அணிகொண்ட நறுந்தேம்பாவணி விளங்க வறைகின்றவாசினவான், பணிகொண்டபூவுலகிற் குரிசலங்காரக்கொடியோன் பாதப்போதிற், றிணிகொண்ட வுளச்சவராயனு மேலோ னந்தமக்கோர் சேமமன்றே.................................(உ)

சென்னை இராஜதானி பிரிசர்ச்சிமிஷியன்ஸ்கூல் தமிழ்ப்புலவர்

## ம௳ ஸ்ரீ ஸ்ரீ சின்னுச்சாமி பிள்ளையவர்கள்

இயற்றியது.

திக்கனைத்தும் புகழ்நிறுவுங் கவிவாணர் செவிக்கின்பஞ் செறியத்தேக்கி மைக்கடற் பூவுலகின்மிசை நிலவியதால் வயல்புடைசூழ் புதுவைவாழ்வோன், கைக்கடக்குஞ் சரநிகர்த்த சவராயலெனும் புலவன்களுலக்கூறு ம், இக்கனைத்துந் திரண்டனைய பலசெயுட்டிரட்டெனு மோ ரியனூல ன்றே................................................... (க)

---

சென்னை இராஜதானி பிரிச்சர்ச்சி மிஷியன்தமிழ்ப் புலவர்

## ம௳ ஸ்ரீ ஸ்ரீ ரங்கசாமி ராசாவவர்கள்

இயற்றியது.

கலகலவென்றுலகினுள்ளோர்கூயத்திரியாதுளமடங்கிச்சதிர்ப்பவிந் நூல், நலநலவென்றுவந்து நல்லோர்கொளப் பலசெய்யுட்டிரட்டை நய ந்துசொன்னன், சலசலவென்றிருங்கடாம் பொழியானையுலாம் புதுவை தன்னில் வாழ்வோன், வலவலவென் றெவருமுணர் சவராயலெனும் புல மைவல்லோன்மாதோ.......................................... (க)

---

சென்னை

## ம௳ ஸ்ரீ ஸ்ரீ வீராகவசுவாமியாரவர்கள்

இயற்றியது.

கிரணப்பரிதி புனைமாமரிக்கன்னி கேழ்மதியச்............
சரணத்தருளுருவேயோ தேம்பாவணி தந்தமுனி.........
மரணத்துயிர்ப் புற்றிங்கெய்தினனே வறியேன்மனுயிர்த்....
திரணத்தரும் புகழ்சேர் சவராயலு செவ்வியனே........(க)

சேடனென்றாலு மிராமாயணந்தமிழ் செய்தகம்ப..............
நாடனென்றாலு மொவ்வாது கண்டாயுன் னளிர்தமிழ்வி.........
சேடநன்னீர் மைக்கிணை நீ யலதொன்றைத் தேடமனம்..........
நாடலன் சீர் புதுவைச்சவராயலு நாயகனே.................(உ)

சொல்வர்பல்வாறருங் கற்பனையாய்ந்துன்றன் றேழமையைப்.
புல்வர்பொய்யே சவராயலுன் கல்விப்புலமை தந்த........
வல்வாய்த்திறமைக்கு நேரிலைபானு வயங்கொளிக்கு........
மில்வாய்த்தபேரொளி சொன்னேனிது மெய்யிருநிலத்தே(௩)

அன்னையொப்பாய் நிறையார்வத்துலக ரருத்திக்குச்செம்.........
பொன்னையொப்பாய்ச் சுகுணத்தினிற் கல்விப்புலமையிலே........
நின்னையொப்பாய் சவராயலுன்னூற்றற் கிணைநிறுவப்............
பின்னையொப்பாரை மதிப்பதென்னெஞ்சகம் பேதைமைத்தே...(ச)

கலையுமுணர்வுமளித்தாளு மாமரிக் கன்னியொற்ற...........
ணிலையுமகிழ்வுங் கொடுன் சவராயலு நீர்மையின்பச்........
சொலையும் ப்ரசங்கத்தையுங்கேழ்க்கிலாங் செதிர்தோன்றுலுகர்.
சிலையுமிலக்ஷந்தரஞ் சிரகம்பிதஞ் செய்திடுமே...........(௫)

பணம்படைத்தாருண்டு பார்படைத்தாருண்டு பாய்பரிமா..........
கணம்படைத்தா ருண்டவர் களுக்கேதுண்டு காணுலகில்...........
வணம்படைத்தோங்கு செயகான்றவத்தினில் வந்துநல்ல...........
குணம்படைத்தாய் சவராயலு கௌரிகுலோத்துங்கனே........(௬)

தண்டாமரையும் ரவிகண்டலருந் தடத்திலுறை...........
வண்டார்குமுத மதிகண்டலருமிவ் வையகத்தார்..........
கொண்டாடும்பூம்புதுவைச் சவராயலு கோன்முகத்தைக்.....
கண்டாலரும்பும் புலவோருளக் கமலங்களுமே.........(எ)

காதுக்கினியவிசையாளன் புண்ணியன்காமன்மலர்...............
மாதுக்கிசைந்த புயனடைந்தோர்தம் வறுமைகண்ட...............
போதுக்குதவிசெயுஞ் சவராயலைப் போயணுகா................
தேதுக்கலைந்துழன்றீர் புலவோரென் திருப்பவரே..............(அ)

வேறு.

காருறுமளவும் வானிற்கதிர்க ளுள்ளளவும் வேலை ..........
நீருறுமளவுமிந்த நிலமுறு மளவுமேதன்.................
பேருறும்படி பாகூரிற்பிறங்கு மாலயஞ்செய் வித்தான்...
சீருறுசெல்வங் கல்விதிகழ் சவராயலம்மா..............(௯)

---

சென்னை வித்துவான்

## ம௱ ௱ அரங்கசாமி பிள்ளையவர்கள்

இயற்றியது.

ஸ்ரீரங்கட்வெண்டாள மஞ்சிறைக்ள்ளை பணிதிருவலஞ்சுழிமயூரந் - திக
ழ்குழ னுசுப்புநகைமொழியல் குன்முலையுந்திசாய லெழிலரிவையின்
று, பேரங்கசன் கணையினுலரவினுண வாற்பிறங்குகமலப் பகையினுற்
பெற்றதாய்பிள்ளைக்கு முதவாதபுள்ளினுற் பெருகுமம்போதிதன்னுற்ச்
சாரங்கவம்பகத் தாரங்கண்மலிதரத் தகையங்கமீதுறுமற் - சற்றுணவு
மற்றுமயல் பெற்றனங்கற்றநடைதத்தநிலைவற்றுநின்றாள், தாரங்கமட
மாதர் நோக்கமான்மேவிவளர் சந்ரவதனவந்து கொஞ்- சவராயலதனின்
மாதவராயனெனவோங்கு சவராயலினிய முகிலே..............(க)

வேறு.

அன்னைமரியிருசரண வம்புயத்தாடொழு செயகாருய கோமான்.....
முன்னமியற்றிய தவத்தாலுதித்த சவராயலெழின் முகிலேகேண்மோ
உன்னதஞ்சேர் கன்னிகைக்குக் கண்ணுலுந்தனமஞ்சு நடையுமுங்கால்
கன்னமொருநாலுமுகமிரண்டுமஞ் சோதியையுங் காண்சளிக்கசீதானே

சீர்கொண்ட புதுவைமா நகரிலகுதெப்வீக செயகான் செய்யருமாதவச்
செல்வனென வந்தோங்கு சவராயலினிய நற் செல்வனேவொன்றுகேண்
மோ, தார்கொண்டவன்னந் தனந்தனஞ்சந்தனந் தந்தனம்வனசந்தனம்
தருகளநிதம்பமந்தாரை யெழிலுறுமேனி சந்தவிடை நடையானனம்
வார்கொண்ட வொளியாரம் வடவிலைப்பிறை தந்தம்வயறுநுதலானவிந்
த- மையலார்குழன் வனிதைமையலா ஞளினியுமையலா லொருவரிலை
காண், ஏர்கொண்டவனமிறங் காவிந்தவேளைதனி லிகலனங்கனுமிரங்கா
ன், இந்துசிந்தனையாலு நொந்துசிந்தனையுருதிதுசமையம்வந்தருள்கவே

வேறு.

தவராயவனி தனினின்றமுத்தர்கடாம் வணங்குந்...............
துவராயனகந்துடியிதழ் கூந்தலஞ்சொர்க்கமிடை...............
தெவராவகற்கு மரிகளிகூரருள் சேர்ந்ததிவ்ய...............
சவராயலுக்குநவின் மயிலேயெஞ்சசஞ்சலமே...............(ச)

அத்தனஞ்செய் முகிலங்கமதர் விழியாய் குழல்காந்...............
திக்தனஞ்செய் யம்புயமாதுமையல் தெளிந்திருக்க...............
நித்தனஞ்செய் யென்பதைநீரழிக்கநிகர்ந்ததென்னே...............
சத்தனஞ்செய் சவராயலன்பாய்வரச் சாற்றுவிரே...............(ரு)

வானத்திலகு குபேரனன் மாலரிவாட்கமல...............
மீனத்திகந்தர மானனமோதிவிழி மடவாட்...............
கேனத்திமேமுனைக் கொல்லவிசையு மெழின்மடவீர்...............
ஆனத்தினஞ் சவராயல்வந்தாலிந்த வாயிழைக்கே...............(சா)

துறந்தாலும் பட்டணச் சாமிகள்போலத்துறத்தனன்று...............
சிறந்தாலு மந்தநற்கன்னனைப்போலச் செழித்தனன்று...............
அறந்தானியற்றித் தமிழ்ப்புலவோரை யளிப்பதற்குப்...............
பிறந்தாலு நற் சவராயலைப்போலப் பிறத்தனன்றே...............(எ)

நாற்றிசையெங்கும் புகழ்சவராயலு நாயகன்றன்...............
கீர்த்தியைக்கண்டு முன் மூவேந்தராசச்சொற் கேண்மையுற்ற...
பார்த்திபர்பெற்ற நற் கீர்த்தியெல்லாமொளிர்பார்க்கரன்மு.....
னீர்த்திரையுற் றெழுசந்திரன்போலொளி நீங்கியதே.......(அ)

இரும்புங்கனிந்து செந்தேனுகக் கல்லுமிளகமன்னர்...............
விரும்பும்ப்ரசங்கஞ்செயுஞ்சவராயலை மேவுதற்குக்...............
கரும்புங்கதலியுமாவும் பலாவின்கனியு மின்ப...............
மரும்புஞ் சுரும்புங்கொண்டோடிவந்தாளிந்தவாயிழையே.......(கூ)

வேறு.

புண்ணியந்திரண்டயாக்கைப்பூபதி செயகான்முன்னம்...............
பண்ணியதவத்தால்வந்த பாவலன்சவராயற் கோன்...............
எண்ணியிங் கமைத்ததிவ்யவெழில் கொடேவாலயத்தில்...............
தண்ணிய பரமதாயினல்லெழிற் கிணையேதம்மா...............(ய)

# புதுவைவித்துவான்களின் பாடல்கள்.

சங்கைக்குரிய இராஜரிஷி குரு சுவாமியாரவர்கள்

## அ. அருள் நாதசுவாமியாரவர்கள்

இயற்றியது.

நற்றவர்வேதியர் துரைமாரறிஞர் மடாதிபர்வாணர் நன்குபன்னூல், கற்றபலசமையர் நிதங்களிக்கப்ப்ரசங்கஞ்செய் கவிஞனென்றிங், குற்றசவராயலு தேவாலயத்திலாண்டவரா லொளிர்மெதாயில், பெற்றபெரும்பேறுலகிற்பிறந்தவரிற்பெற்றவர்யார்பேசுவீரோ.

பெருந்திறஞ்சால் நஞ்சவராயலு வலவன்றனைப் போல்யாம் பிரசங்கிக்க, அருந்தமிழைக் கற்பினுஞ்சொன்னயமுறுமோ வுறினும் போனவைக்கஞ்சாமைப், பொருந்துமோவுறினுமின்னிசையுறுமோ வுறினுஞ் சொற் போர்செய்தற்கு, வருந்தமிழ் நாவலவரொடு வாதுவெல்லுந் திறமுறுமோ வழுத்துவீரோ...........(உ)

சொன்மாட்சி பொருண்மாட்சி யணிமாட்சி யொடுபுலவர் தொகுத்துக்கூறும், பன்மாட்சிகளுமமைய வருண்மாட்சி குதிகொளப் பல்பாச்செய்தோவா, வன்மாட்சி யறப்பிரசங்கஞ்செயு நின்வலிக்கொப்பாராரோர்நீயே, நன்மாட்சிவளப்புதுவை வளர்சவராயலு சுகுண நாவலோயே ..................................(௩)

---

சங்கைக்குரிய இராஜரிஷிகுருசுவாமியாரவர்கள்

## அந்தோனி நாதசுவாமியாரவர்கள்

இயற்றியது.

தண்டமிழ்க்கவிஞர் சவராயலு நாயகருக்.........
கெண்டவிராசியை யீயுமோர்முனி...............
விண்டவிற்பன்னம்..................................(க)
தவராமலருண்மறைசாற்றியமா ...............
தவனல்வனைதாரணிசார்மணமே................
எவர்வாயினுமின்புறவேநவிலுஞ்...............
சவராயலுதண்மொழிசாலகனே...............(உ)
நினையானவண் விட்டிவணேகியகா ...............
லெனைநீமறவா யெனவேயொருவாய் ...............
தனையேசொலினேன்மறந்தாயிலையே...............
நனைநேரிசைநாவலநன்மணியே ...................(௩)

இருசக்கரமொண் டிரிபந்தமவை.................................
தருமக்கரவாசகந்தன்னிலுள..................................
பொருளைக்கிரமத்தொடுபூரணமா...............................
யருளைத்தருமாண்டவனுலுணர்ந்தேம்...........................(ச)

மதுவாயினனீ சிலமானிடரோ...........................
பொதுவாயினபொன்னிலேபோக்குவதா.....................
யெதுவாயினுமிந்நிலமீந்திடுக ........................
முதுவாயினர் காட்டிய முன்றடமே.....................(ரு)

தனிநாயகனேற்றிய தத்துவனே...................................
யினிநாளுநீ யின்புறவாழுதியே..................................
நணியாண்டு பிறந்ததி னுவலவா..................................
தொனிஞவொடு தோத்திரஞ்சொல்லுதியே.........................(சா)

நிலையாகிய நூல்பல னெஞ்சிலுளோய்........................
கலையானறியே னதுகண்டெனபா..............................
மலைபோலுநின்மா மதியாலிகழேல்............................
சொலையேற்றிய வழ்த்திய சூசகனே............................(எ)

---

சங்கைக்குரிய இராஜரிஷி குருசுவாமியாரவர்கள்

## தாவீது நாதசுவாமியாரவர்கள்

இயற்றியது.

சீரார்ந்த வீரமாமுனிசெய் தேம்பாவணியாந் திவ்யநூலை, ஏரா ர்ந்த கலைகளொருங்குணர்ந்த சவராயலுவேளென்னுங் கோமான், பாரார்ந்தவெவர்களுமின்புற்றிறும்பூதுறவிரித்துப்பயன்றெரித்து ப், போரார்ந்தபெரும்புகழ்பெற் முண்டவராற்பொற்றகடும் பெற்று ன்மாதோ...........................................(க)

காவியங்கள் புனைவர்மிறைக்கவியுரைப்ப ரியல்விரிப்பர் கற்றோ ர்மற்றோர், மேவியிறும்பூதுறப்பண் ணுய்ந்துபிரசங்கிப்பர் விந் தையாக, ஓவியக்குஞ்சீர்த்தசவராயலு நாயகவலவனுழை கற்றோ ரோ, தாவிலவனேபலபாவினம்புனையி லன்னவையின்றகையென் சொல்வாம்...........................................(உ)

---

சங்கைக்குரிய இராஜரிஷிகுருசுவாமியாரவர்கள்

## சி. ஞானப்பிரகாச நாதசுவாமியாரவர்கள்

இயற்றியது.

தேவசுதன்கைத்தாதை சீர்த்தகன்னிமாமரியின் ...............
காவலனஞ்சூசைக்குக் காதலுடன்வீரமுனி...................

தேம்பாவணியென்ற்ரோர் சீர்மிகுத்தகாப்பியத்தை..............
நாம்பாடிமெச்ச நவின்றிட்டாரஃதின்..........................
பயனறியாதேங்கிநின்ற பல்லோர்துயர்போய்....................
வியப்பச்செயகான் மிகவன்பாயீன்ற...........................
தவப்புதல்வன்மெய்யான சாத்திரங்கடேர்ந்தோன்...............
சவராயலுமால் சமர்த்தாவிளக்கஞ்...........................
செயக்கேட்டவன்றன் றிறமதனைக்கண்டு.......................
நயந்தார்புதுவை நகர்வாழ்துரைகள்..........................
கலைதனிற்றேர்ந்த கனவான்கள்பலபேர்.......................
உலகினிற்சத்தியவொண்மறையோதுங்..........................
குருப்பிரசாதிகள் கூடியசங்கத்.............................
தரசாய்விளங்கிய ஆண்டவராங் கொதேல்........................
மாமுனிகையால் மகிமைமெதாயில்.............................
எமமாயன்னவற் கீந்தனரன்றே................................
அப்புலவன்றனை யடியேன்புகழ்ந்திட.........................
இப்புறமேதுண் டெனக்கு.................................(க)

---

சங்கைக்குரிய இராஜரிஷி குருசுவாமியாரவர்கள்

## மரியப்பிரகாசநாதசுவாமியாரவர்கள்

இயற்றியது.

மாண்டவத்திலுயர்வீர மாமுனிதேம்பாவணியைமகிழ்ந்தளித்தார், ஆண்டவரன்னூற் குறைசெய்சவராயலு மகிபற்ககம்பூரித்துக், காண்டகு நன்மெதாயிலெனுங் கனகத்தேம்பாவணியைக் கனிவித்தந்தார், தீண்டருமிவ்விரண்டணியிற் சிறந்ததெந்தவணியென்று செப்பலாமே.....................................(க)

---

பரீசுபட்டணத்திலிருக்குந்துரையவர்கள்

## மூலியேன் வேன்சோன் துரையவர்கள்

இயற்றியது.

சீரியபுகழடைந்த திருச்சவராயலுக்கே.........................
யாரியவன்றேவிக்கே யகலுலகாளுமேலாம்.....................
பேரியற் கடவுடய்நீர் பெய்யும்பரிருக்குமைய..................
னேரியன்மதியோடாக்க நிறைசுகமருள்கவன்றே...........(க)

மரியதாயினுக்கடியன் வேதியர்குமாதவர்க்கும்.....................
பிரியன்செந்தமிழ்ப்பாவலன் பேசுநம்மன்பிற்........................
குரியன் நற்சவராயலுநாயக னுரைத்த............................
அரியபற்பலபாக்க ளிவ்வுலகத்துக்கமுதே......................(உ)

---

தருமக்கல்விச்சங்கம்

## ம॰ ௱॰ ௱॰ சிற்றம்பல உபாத்தியாயரவர்கள்

இயற்றியது.

பூம்பார்வையோங்கும் புதுவைச்சவராயலு வலனுற்..................
கூம்பாப்புலமையின் மிக்கோர்கலைகள் குறைவறவே................
தாம்பார்வையிட்ட தமிழ்வீரமாமுனி சாற்றுநல்ல..................
தேம்பாவணியின் பொருட்சுவையாவர்க்குந் தித்தித்ததே............(க)

---

## ம.௱.௱. முத்துக்குமாரசுவாமிஉபாத்தியாயரவர்கள்

இயற்றியது.

சீரோங்கியதேம்பாவணி திகழப்பிரசங்கஞ்செய்யுந்திறனும் பாவலர்சிந்தைக்கினிதாகப்,பாரோங்கியபலபாவொடு பதிகந்துதிமுதலாப் பாடிப்புவியாசன்துபியாய் முன்னமெதால்பெற், றேரோங்கிய சவராயலு வெனுநாவலனுலகோ ரெவரும்புகழ் நிபுணன்றனை யிதமேமிகுசுகுணன், நாரோங்கிய செயகானுலகோர்க்கீந்திடுநலனை நாவாயிரமுறுசேடனு நவிறற்கெளிதன்றே................(க)

தவராயனெனும் வீரமாமுனிவன்செய் தேம்பாவணியின்றன்மை.....
எவராலுஞ் சொலவரியதாயினு மன்னதன்பொருளை யெளிதி னோர்ந்தே.
யுவராழிப்புவியகத்து நஞ் சவராயலு மகிபனுரைப்பதன்றி..........
நவராக முறப்பலபாக்களு மியற்றியச்சிட்டு நல்கினனே..........(உ)

---

இராஜ நீதித் தமிழ்க்கிறேப்பியேர்

## ம॰ ௱॰ ௱॰ கந்தப்ப-சபாபதிமுதலியாரவர்கள்

இயற்றியது.

சிருறுநற்செயகான் சேய் நஞ்சவராயலு வாண்டிற்சிறியனேனு............
மியாருலகினிகர்வ ரவனியற்றமிழ் நன்காய்தரு மாசிரியர் போற்றத்.........
தேருறுதேம்பாவணிக்காப்பியக்குறை செய்திறவானற் செல்வங்கல்வி........
சாருறுசாந்தஞ் சால்புவாய்மைதூய்மையிற் சிறந்த தகைமையோனே......(க)

உருவினைக்கண்டெள்ளாமை வேண்டுமெனுமுறை நிசமென்றுலகர்த்தேற்றித்
தருவெனநற்கவிப் பொருளையொழியாதுதாவந்த தாணித்தாரு............
மருவுதிருச்சபை முனஞ்செய்பிரசங்கத்தான் மெதால்மகிழ்வோடேற்றுப்......
பெருகுநாவலர்தந்த கவிமாலையுடனணியும் பெரியனம்மா..............(உ)

---

செந்தமிழ்ப்புலவர்

## ம॰ ௱॰ ௱॰ வெ॰ பொன்னையாமுதலியாரவர்கள்

இயற்றியது.

மையில்சீர்ச்சூசையென்னும் வளனணிமான்மியங்கள்..............
எய்தியசரிதத்தேம்பாவணியெனு மிலக்கியத்தை.................
வையகம் வியக்கநன்கு மதித்தியற் பிரசங்கமெங்குஞ்..............
செய்சவராயலுப் பேர்ப்புலவன்சீர்ச் செப்பரியாரோ...............(க)

கவிராயசிங்கம்

## ம. ா. ா. அருணாசலதேசிகரவர்கள்

இயற்றியது.

வட்டநெடுங் கடலுலகிற் செயகானென்னும் வள்ளலருந்தவவரோ தயமா ய்வந்தே, அட்டதிக்கும் பரவுதமிழ் வாரிதன்னை யருந்தியவைக்ககனமுற்றேய லர்வாய்ச் சொன்மின், கொட்டவிசைமுழக்கெழுப்பிக் கேட்போர்காது குளிர்தர ப்பா மழைபொழியுங்கொண்டல் கோது, விட்டசுவைக்கழை சவராயலுவேள் போல மேதினியிலியாவருளார் மெய்மையீதே.........................(க)

---

கவரன்மெண்டு இஸ்கூல்உபாத்தியாயர்

## ம. ா. ா. கோவிந்தபிள்ளையவர்கள்

இயற்றியது.

தேடாதபேரில்லைச் செம்பொன்னைநாடொறுந்திண்புவியை.............
நாடீபேரில்லைப் பாங்குடன்மேவி நயந்துபெண்ணைக்................
கூடாதபேரில்லை நஞ்சவராயலு கோமகனைப்........................
பாடாதபேரில்லை யில்லைகண்டீ ரிந்தப்பார்தனிலே.................(க)
மறந்தானியற்றிப் பொருள்சேர்த்துலகின் மறைத்துயிரைத்..,..............
துறந்தார் தமக்கிப்புவியி லென்னுந்தவஞ்சூலகிற்........................
சிறந்தான்புதுவைச்சவராயலு செயகான்றவத்திற்......... ...............
பிறந்தானிந்நாட்டிற் புலவோர்க ளியாரும்பிழைத்திடவே................(உ)

---

செந்தமிழ் உபாத்தியாயர்

## ம. ா. ா. சாமி-பொன்னுசாமிமுதலியாரவர்கள்

இயற்றியது.

பூமேவு மைந்திலக்கண விலக்கியமெனும் பொற்கடலையுண்டடுத்த-புதுமை யுறு மாணுக்கரிதயமாம் பணையினிற் புகரவித்தைத் திடர்குழிப்-போக்கிவித் தப்பயிர்தழைத்தவர்களின்புறப் பொற்கலைகள் பொழியுமேகம் - புவிராஜர் போற்று கவிராஜன் பொன்னுச்சாமி புரிவுகொண்டோச்சு கடிதம், காமேவுபு துவையம்பதியிலதிபதிநிதிக்க நிணையிவையுற்றசுகுணன் - கருதுசெயகான்செ ய்த படிவத்திலுற்றவாகை புனையுமெழிலியனையான்-கலைகற்ற நெறியுற்ற கலை வலார் புகழ்பெற்ற கன்னன்வித்வப்பிரபுவாய்க்-கதறிக் கவிக்கய மொளிக்கப் பிரசங்கதொனிகாட்டு மஞ்சாதசீயம், தேமேவுமாலையணி திண்ணிய புயாசலன் செய்யளிச் சாலைபோல்வான்-செப்புமிங்கிதவசனன் சவாாயலென்னுநற் செல்வ னின்போடுகொண்க- தேர்ந்தன்பருக்குதவுகின்றவனீயாதலாற்றெறுவாடையாலி மத்தால்-திவலையாற்றினகானல்வெப்பினுல் வாடித்தியங்காமலாணுயுறப், பர் மேவு திரையெழாவம்பரம் நீரிலாப்பட்ட மறையாவுடுக்கை பாயாதகலைவிடம் ப ற்றுத நாகம்வாய்ப்பரியாதவின்வத்திரம் - பற்றலரடாத்தானை பண்டமேவாச்சா டி பாலின்மேவாத வாடை-பக்குவமதாகவையாறு பொன்றுற்கொண்டுபெண் பினெற்குத்தருகவே..........................................(க)

தருவர்னினவர்ன் றருசவராய
வுருவானுவந் தாரிலுற்ற - திருவர்னு
ரேக்கத்திலைலவா னெம்போல்வி ரெய்துமவ
ருக்கத்திலைலவிரலாம் (உ)

ஆதிமத்யாந்தமா யகளங்கமூர்த்தியா யற்புதவகோசரமுமர் - யறிவதற்கரி தான பேரின்பவெள்ளமா யமலநிற்குணமுமானோன், சாதிகொள் சரோருகம லற்கிணையிணைக்கழல் சதாகாலமுஞ்சிந்தைசெய்-சற்குண விவேகசம்பூரணன் கலைஞர்புகழ் சகலகலைவித்வதுங்கன் தாதுற்றதசமும் வெண்கவரியும்புனித ருதராசுடன்தாவில்கயமுந்-தவமருவு சிவிகையு மானவிவைநாப்பணுறு த கையக்கரங்கண்மருவுங், கோதற்றகோர்ன்பெற்ற பேருற்றநண்பகேள்குலவுமிக் கடிதமதனைக்- குவியன்புகொண்டுநிற் கெழுதிவர விட்டனன் குறிப்போ டெதிர் கொடுகாண்கவே.................................................(ங)

தேம்பாவணிமருவுந் தேம்பாகினன்மொழியார்
தேம்பாவணித்தந்தைத் தேற்றினன் - தேம்பா
செயகர்னளித்த சவராயலு வேள்சீர்த்தி
செயகானல்லோரவையிற் சென்று. (ச)

பாவலரும் காவலரும் பாலகருமேலவரும்
பர்வையரும் பார்த்துண்ணப்பாத்திட்டான் - தேவடியைத்
தேம்பாமலேற்றிடுநற் சீயசவராயலுமால்
தேம்பாவணியென்னுந் தேன். (ரு)

வீரமுனிவனுரை வீறுதேம்பாவணியின்
சாரமுணர்ந்த சவராயலுமா - லேரமரச்
சொல்லும் பொருளுந் தொடையுநடையுந்துறையும்
பல்லணியுங் கொண்டுரைத்தான் பார் (சா)

அவக்காவர்னந்தரா யன்மனையார்குன்றிற்
றவக்காவாநந்த தருதாதா - நவக்கானர்
சீயசவரர்யலுமாற் றேம்பாவணியமுதைத்
தூயகவிகட்களித்தான் சூழ்ந்து. (எ)

வீரமுனியுரைதேன்மேவு தேம்பாவணியாம்
வீரமுனீருண்டு விபுதரிசை - வீரமணி
ஆனந்தராய னகநகத்திற் பெய்மூகில்செய்
யானஞ்சவராயலு. (அ)

பாரிலங்கிய சீர்த்தியுற்றிடுபொக்கியன் கனயோக்கியன்-பாமனுனந்தராய தீர னற் பாவலர்புகழ் நேயன்வான், காரிலங்கிய மாமணிப்பொதி கனகமாளிகை தன்னுழி-காமரோங்கலின் மீதமர்ந்திடு காட்சி கன்னிவளன்சுதன், சீரிலங்கிய வீரமாமுனி செப்புதம்மருஞ் சரிதையைச் - சீலனுஞ்செயகர்னளித்திடு சேயனு மதிசூரனுந் தாரிலங்கிய திண்புயன்கவி தானமாக்கடனேறனுன் - தாவிலாச்சவ ராயலுப்பிரசங்கநாடலையொக்குமே. (கூ)

தக்கபுகழ் வித்துவான்சாமிநாதன் புகன்றதருமஞானு
திக்கராயன் காப்பியத்தி னரும்பொருடேர்ந்துதிறமையோர்முன்
முக்கனிக்குமிக்கினுக்கு மிக்கினிக்கு மொழிகளுற முறமையோடு
மிக்கவிதப்பதவுரையை நஞ்சவராயலுவலவன் விளம்பினனே (யக)

மதியுலாமதிலார் புதுவையம்பதிவாழ் மன்னரோத்திடுமெதியூகி-மதிமிகுவள்ள லானந்தராயன் மனைவயிற்சாமிநாதன்சொற், முதியுலா ஞானதிக்கர்காப்பியத்

தின் சூழ்பொரு டருகெனச்செயகான் - றன்றுமர்தவத்தி லவதரித்தோங்கிச் சு டர்சவராயலுவலவன், நிதியுலாமமுதின் மதுரமதுறவே நிகழுதேன்மடை திறந்தனவே- நேருமுத்தமிழ்நாற் கவியுநாற்பொருளு நீர்மையோடறிந் தணியுறவே, விதியுலாமேற்கோள் காப்பியந்தொன்னூல் வியனிலக்கணமூலகியல்பும் - விளங்குறக்காட்டி நாவலரவையில் விரியுரை யோடுரைத்தனனே. (௰௧)

---

## கவரன்மெண்டு கல்விச்சங்கம்.

## ம. ௱. ௱. சுப்பராய உபாத்தியாரவர்கள் இயற்றியது.

திணியுறும் பனைத்தண்டலைத்தளி ரலரிற்றிகழு மஞ்சங்குலாம்வளனுந்-தெரிவையரளகங் கண்ணனைகவதனஞ் செவிகரநாசிநாக் குந்திச்-செம்பத விரனகந்தமைவாவித்தேமலர் காட்டிடுமொண்புந் - திரையொலியனைய வாவணச் சீருஞ் செழித்திடும் புதுவையில்வாசன் - ஜெகம்புகழ்செயகான் நாயக சுகுண தென்பணிலம் பெறுமுத்தாஞ் - செருக்குடையவர்நூல் சிலம்பி நூலாக்குந் திறந்தின ஞசுமாமதுரஞ் - சித்ர வித்தாரக் கற்பனைக் கவிதைத் திவ்யகீர்த்தனமுடன் பதங்கள் - தேனுங்கைப்பெனச் சங்கீதசாயித்யந் தெளிந்துபாடுதேறனி னிபுணன், பணியுறு நப்போல்வளையென வெளவைபகர்ந்திடு மொழியினைச்சிவணப் - படர்ந்திடுங்குலத்தைத் தழுவுவோனுளும்பனிமதுரா மிரதுவஜனன் - பாவலரிவன்போ லவையையஞ்சாமற் பாக்களைப் பிரசங்கம்புரியும் - பண்புடையவனைக்கண்டு கேட்டில நம்பாக்கியமென்று கொண்டாடிப் பக்ஷமதாகக்கவியணியணியப்பரித்திடு புயத்தனல்லயத்தன் - பன்னிடவலன் சோர்விலனஞ்சானவன்றன் பகைவெலலியாவர்க்கு மரிதென் - பகர்ந்த வள்ளுவரினுரைக்குச் சான்றானோன் பத்துக் கற்பனைவழியொழுகிப் - பாரகாவியங்களோர்ந்திடுமதிஞன்பதி சவராயலுமேகம், மணியுறும் பன்னூல் கற்றனைத் தூய மதியெனக்கவிஞர்கள் வழுத்தும் - வண்ணமுற்றோங்கி யெத்தலத்தினுமன் மானுடர்தமைவெல்லும் வலவன்-வண்கடவுடனைக்கருதிடு நலத்தால் வயங்கிடு வீரமாமுனிவன் - வையகமீதிற் புகழுடம்பதனை மருவிடக்கருதி வண்டமிழால் - வாக்கரிற்றுதின் வழுப்பொருட்சோர்வு மன்னிடாதிசைத்து நற்கிறீஸ்து மார்க்கமாங்கதையை யமைத்தினி துரைத்தவளங்கொடேம்பாவணி நூலாம் - மதுத்திரையருந்தித் தமிழ்ப்பிரசங்க மாரியைமனதுவப்பாவம் - மரபுளோரா தமது கேளவியஞ்செவியாம்வரையிடைப் பெய்ததன்றோர்கள, அணியுறுமனமாங் கழனியிற்பாய்ந்தே யவமெனும்வெப்பகன்றென்றும் - அறிவெனும்பயிர்கடழைத்துப் பேரின்பமாங்கதிர்விளைவினுற்பிறங்க - வமைத்ததற்கா மாதாவினுலயமுன்பாகவவ்வன்பர்கணெருங்கும் - அவையினி நாப்பணவிரு மேற்றிராணியார்முதலாகியவதுலர் - ஆசிகளகூறி மற்ரபுத்தகங்க ளளித்திடவறநெறிபிறழா- தரகுசெய்குவர்னே ராதியாந்துரைமாரகமகிழ்ந்தவரவர்வசனம் - அதிலடக்கியவொண்புகட்சியையுரைக்கவாதரவுடன்றிருச்சபையார்- அரியவேலைகளசெய் பொன்மெதால் ளித்தாரதன்கன மொழிந்திடவரிதே. (௧)

---

தருமக்கல்விச்சங்கம்

## ம. ா. ா. சந்திரசேகர ஐயரவர்கள்

இயற்றியது.

துலங்குசிராமலையிலமர்தமிழ்முனியாமீனாட்சிசுந்தரன்ற, னிலங்கரு ளாற் செந்தமிழ் முற்றுணர்ந்த சவராயலுவேளென்னுங்கோமா, னிலம் புகழச்சொற் றேம்பாவணிவழங்கித்திருச்சபையானிகராச்செல்வ, நலந் திகழும் பொற்றேம்பா வணிபெற்று லையத்தினுப்பண்மாதோ. (க)

## ம. ா. ா. பச்சையப்பமுதலியாரவர்கள்

இயற்றியது.

நதிமலிந்தமலர்ப் பொழில்சூழ் புதுவையில்வாழ்நாவலர்நாயகனுமிக் க, மதிமலிந்தசெயகான்செய் மாதவத்தால்வந்தருளகோமானுமிந்தப். பதிமலிந்தகாவியமைந்திலக்கணங்களறிந்துயர்பாவலனும்பாணர், துதிம லிந்தகுணச்சவராயலுதேம்பாவணிக்கருத்தஞ் சொலலோர்மாண்போ·

வந்தக்காசுக்குவட்டமிலையெனும்வாயுபோல்லுத்தர்மீதினிலேநிதஞ், சந்தப்பாட்டுகளை பாடியசங்கடந்தளளியேதழைக்கும்புசழுக்தெலாஞ், சொந்தக்காரனெனுஞ்சவராயலு தூயன்மேற்கவி சொல்லத்தரித்திம், எந்தக்காலமுந்தான்வந்தணுகுமோ வெங்கு ங்கீர்த்தியிலங்கியவாணோ.

## ம. ா. ா. குமாரலிங்கவாத்தியாரவர்கள்

இயற்றியது.

தோகைமயில் தங்குமலர்ச்சோலைசூழ் பாகூர்வாழ்............
வாகைசவராயலு நம்மாவலனை - யீகையினிற்.................
கன்னனென்பார் பன்னூலைக் கற்றோர்தமிழ்வளர்க்குந்..........
தென்னனென்பாரிங் கிவனைத்தேர்ந்து ......................(க)

திக்கெட்டுமோடித்திரிந்தாலுஞ் செம்பொன்னுங்கள்.............
கைக்கெட்டுமோ புலவீர் கட்டுரைமின் - மைக்கட்டும் ............
மாடமார் பூம்புதுவைவாழ் சவராயற் சுகுண.....................
நீடுபுயலிங் கிருக்க நீர்.......................................(உ)

சென்மவிராக்கினிமாதா கோவில்வாத்தியார்

## ம. ா. ா. சின்னத்தம்பிமுதலியாரவர்கள்

இயற்றியது.

உலகெலாமமையும்·விண்ணிடை யமையா தொளிர்புக ழார்ந்துயர் செயகான், நலமிகு தவப்பேறிதுவென வந்தநஞ்சவராயலு மகிபன்

பலநயஞ்செறிந்த பதத்திலோர்பதத்தாற் பதமடைந்துய்குவர் நாளும்
இலகுமப்பதத்தை வாயினாற்புகழ்ந்தே யின்பொடுவணங்கிடுவீரே (௧)

---

## தீவான்நயினாத்தை

# ம. ரா. ரா. அபராமுதலியாரவர்கள்

## இயற்றியது.

இலக்கணநிலைபெற விருநிலத்தின்மேற் ..................
புலக்கமன்னிலக்கணம் புனையுமவித்தகர் ..................
கலக்கமுற்றணங்குறக் காணுஞ்சிங்கமே ..................
வலுக்கொளுஞ் சவராயலுமன் வாழ்கவே ..................(௧)

பரித்திடல் கடவுளியற்கை நல்லொளியைப் பரப்பிடலாதவனியற்கை, விரித்திட லினிய மணமலரியற்கைவேதமெய்ப் பொருளெலாமெவர்க்கும், உரைத்திடல் புதுவைவித்துவான் சவராயலுவெனு மொப்பிலானியற்கை, நிரைத்தணிப் பாவாலின்னவன்புகழை நிகழ்த்திட லியற்கையா மெமக்கே ..................................(௨)

அறம்பொருளின்பமரிய வீடென்னவறைபொருள் நான்கையுந்திரட்டி - அகனிலத்தோர் தங்கலியிருளகலவான்ற தேசிகனெனச் சிறந்த, திறங்கொளும் வீரமாமுனிப் புனிதன் திண்ணியபேழையுளடக்கித் - திகழுறுதேம்பாவணியெனு நாமந்தேர்ந்த தற்கிட்டதன் சிறப்பை, மறங்கடிந்தொழுகுந் துப்பிமாமுனிவன் வண்கையிற்செலுத்திடவறைந்த - வண்ணமன்னவனப்பேழையையடைந்துவான்பொருள நான்கையுமுணர்ந்து, புறங்கணிப்பகற்றியாவருங்கொளவேபுரிந்தன னந்தராயன் - புக்கில் வீதியிற் சவராயலுவென்னும் புலவனைப் வணிகனைத்தெரிந்தே.. (௩)

சீரியதேம்பாவணியின் பிரசங்கத்தைச் செயகான்செய்தஞ் சவராயலுவாமேலோன் - திரிசிரன்றன்புரஞ் சேலங்காரை சென்னைசெழும்புதுவையிற் செயச்சிங்காரமாக, ஏரியவக்காப்பியத்தை யொவ்வோர்செய்யுட்கிசைந்த விசையோடே வருங்குதுகலிக்க - எவ்வளமமருவ புதுச்சேரியாசானெனப்புகலுங் கனகராயன் குமாரன், தேரியதங்கப்பிரகாசம் மரங்கிற் சீரோடும் வாசிக்கவிவர்றைக்கேட்டோர் - செப்பவொண்ணுவவசமுற்றிவ் வமுதமாரச் செவியிரண்டின் லேலிலையே யெனவுலைந்தார், பெரியவவ்விருவரொருங் கெற்றேயென்னிற் பிறங்குகாலைக்கதிர்போற் சேந்தரத்நம் - பீடுறு தங்கத்தகட்டி லமர்ந்தாற்போலும் பேசமற்றும்வேறுவமமரிதென்றாலே ..................................(௪)

தேம்பாவணியுந்திகழ் பொருளும் யாப்பணியு............
மேம்பாடுடன் மேவுவித்தகனுக்- காய்பொருளோ ..........
இப்பொற்றகடுமே யித்தகையோற்கீய்ந்தவருக். ...........
கொப்பில்புகழேயுறும் ..................................(௫)

விரைந்துதொழில் கேட்குனால நிரந்தினிது..........................
சொல்லுதல் வல்லார் பெறினேற் - கரைந்து..........................
மனமே சவராயலு வலனைப் போற்றற்..........................
இனமென்ன வையமியம்பு..........................(௬)

வித்தகனுக்குப் பரிசுவித்தகரா லேத்தலே ..........................
இத்தலையிலீகை யியம்புவேன் - நித்தியமா..........................
மேவுந்தகையதோ வீயுறுதிக்கவியும்..........................
பாவுமுலகிற் பரந்து..........................(௭)

நாவலருரைத்த மூதுரைப்பலர்தந் நாத்தழும் பேறிடநவின்றும் - நாடகமெனவேயந்நெறி மருவார் நானிலத்தவர்க்குரைசெய்வார், பாவலசவராயலுவெனு நாமம் பரித்தவென்னன்பனேபடியிற் - பரவுதற்குரிய கோயிலில் லூரிற் பதிதலொன்றுதெனவுரவோர், கூவியவுரையைக்கொண்டு நின்னுளத்திற்கோவிலின்றிருந்த பாகூரிற் - கோட்டமொன்றியற்றக் குறைந்துமாடின்பாற்குருக்களைக்கொண்டதையியற்ற, ஆவலையடைந்தவ்வண்ணமே புரிந்தாயற்புத மாதுலரோனும் அறவழிவிடுக்காரடுத்திரந்ததனையயர்குவா ரன்புடையவரோ ..........................(௮)

சீரியசர்வேசுரனுமேசுக்கிரீஸ்து தேசமெல்லாந்தினகரன்போல் விளங்கித்தன்னைத்- தேர்ந்துழுவப்போஸ்தலராங் கதிர்களாலே திமிரமெனுமக்யானந்தன்னையோட்டித் - தேசுவெனுஞ்சத்யமறை யெங்குந்தந்தசெயலதுபோற் கொதேலாமேற்றிராணியாரோ-சீதமுறுதுபுவிசு சீர்லெயோதே தேர்குபயோஞ் சிறந்தமுசே தாராசான்றீப், பேரியலவேறு சேக்மிலேர் தர்பேசு பிறங்கலுறு தெலெயாழ் தாவீதுநாதர் - பீடுறுமோர்மரியப்பிரகாசநாதர் பீழையுறு மேனையோர்பக்கஞ்சூழப் - பேதகமின்றிச் சிந்துதேயந்தன்னிற் பெட்பினுடன் சத்யவேதம்போதிப்பீர் - பேணியுமதுபயபதமுடிமேற்சூடும்பேதையேனயினுத்தைபிறழக்கேளீர், கூரியதாமுணர்வளிக்கும் பலவாம்பாஷை கோதறவேயாராயுங் குடிகண்மற்றுங்-கோக்களுறு பெருநகரிலக்யானத்தைக் குடியோட்ட லொருவியப்போகோதிற் கல்வி-குறையுநொச்சிப்பட்டிக்க்ராமங்கடம்மிற் கோயிற் கடாபித்துக் குருக்களுட்டிக் கோப்புடனே போதித்தாற் சத்யவேதங் கொடுக்குமிகப்பயனெனவே செயகான்றந்த, தேரியனுஞ்சவராயலும்மைக் கோரிச் செய்வித்தானொரு கோயில் பாகூர் தன்னிற் - செம்மல்பெற வதின்மேவு மாதாவுக்குத்திகழ்செயராக்கினியெனும்பேர்தந்தானன்னாள் - திவ்வியசெயராயலெனு மச்சேசய்க்குற்ற தீங்குமொழித்தளித்தாளீதிறும்பூதன்றே - தீரியவாண்டவரோ பல்லிடத்தம்மாதா திறமுறவேசினகரங்கள் செயவிப்பீரோ ..........................(௯)

கலித்தடர்ந்த பிலித்தையனைக் கவண்கொடன்று செயித்தரசுகதிக் கச்செய்தான், வலித்தடக்கைத்தாவீத னஞ்சவராயலுநாமவல்லவன்பாகூர், நிலத்தடவொன்றுர்கடமைச் செயித்தணியாலய மொன்று நிலைப்பித்தான்மீ, தலத்திலும் பூதலத்திலும் பாதலத்திலுந் தன்குலத்தினின் சீர்தழைக்கவென்றே ..........................(௰)

தீதிலாமறைநூன்மற்றுந் தெளிந்துயர் தெலெயாழென்னுங் . .
கோதிலாமுனிவன் கையாற் குறித்தவாறமைக்கவல்லான். . . . .
போதமார் சின்னத்தம்பிப் பிள்ளையாம் பூபனென்றே. . . . . . . .
மேதகு சவராயற்கோன் மெச்சினதுண்மையன்றே. . . . .(கக)

கலியைத்தருகடல்சூழ் புதுவைப்பதிக் கண்மருவிக் . . . . . . . . . . . . . .
சலியைச் செயித்த நயினாத்தை மேலுங்கடியவதை. . . . . . . . . . . . . . .
வலியச்செயலிலன் வாய்க்குந்துணையிலன் வல்லையவன் . . . . . . . . . . . . .
நலியச்செலுத்தியதைச் செல்வனென்ன நமன்சொலவே . . . . . . .(கஉ)

சொல்லோயுமுன்னென் முன்வந்தக் கலிசீர் தூடருமுவல். . . . . .
சொல்லையும்வள்ளற் சவராயலைக்கண்டு துண்ணெனவே· · · · · ·
நிலலேனிவணமநின்பணிகேட்டென நீங்கியதால். . . . . . . . . . . .
வெல்வேனெனவெண்ணிய நமற்கையம் விளைந்ததுவே. . .(கங)

சீர்மேவுமைந்திலக்கணமார்களஞ்சியன் தேற்றமுடைமதிவல்லவன்-செப்புநாற்கவிவலா னொட்பமுடையானெனத் தேர்ந்துதுதிசெய்யு நிபுணன்-செல்வியைவிழைந்துபாமகளைமுனிபிசுனர்தஞ்சீற்றத்தையோட்டியன்னார்-செகதலத் தெளதாரியத்தினாற் பீடுறச்செயவிக்கு மாற்றலுடையன், ஏர்மேவுபார்மகட்கியலுமமதாணிபோலிலகிவளமேவு புதுவை-யெனு நகரில்வாழு நயினாத்தையென்னுமாரிய னெழுதிவரவிட்ட நிருபம்-எழிலுறா உமுத்தமிழ்த் துறையிலதிவலவனேயிசைமருவுகௌரிகுலனே-எதையர்க்குபகாரி செயகான்வரத்தையிவ்விட மதில்விளக்குபவனே, நார்மேவுமின்பனேதேம்பாவணிச்சுதையை நரர்களுக்கூட்டியன்னார்-நல்குபொற்றகடெனும் புகழணிகொளமாரனே நாவலர்கள் புகழ்தீரனே-நவில்கின்ற சவராயலென்னு நன்னமனே நாடியெதிர்கொண்டுகாண்க-நானில ந்துதிசெயும் விக்டோரியாவருளை நண்ணியிவ்வுலகிலோங்கிப், பேர்மேவு சிந்துராயக்குரிசிலுக்கியான் பெட்புடன் விடுத்தபாக்கள் - பீதமுறுமேமமென மேவலினவன்பாற் பெயர்ந்தவற்றின் பொருள்களைப்-பீடுறவுணாக்கி லன்னவனென்னை நின்னையிப் பெற்றியனெனத்தெரிகுவான்-பெட்பனே நெருநல் போன்மாலையானடைகுவேன் பிரியனுமவனிடத்தே. (கச)

சவராய் வலைமரு வுவாவலுலஞ் சவிநகர்வா. . . . . . . . . . . . . . .
சவராயலையகற்ற லோனனுங்குஞ் சொற்றுவிலவா. . . . . . . . . ..
சவராயவர் மருபோகமுமேவியஞ்சால் புடையீர். . . . . . . . . . .
சவராயனுவெனுமன் பீர்கொளுமென்றமிழ்த்துதியே. . .(சரு)

தகரவணவார் குழற்றெய்வமடவார் முகத்தளிமங்கவர்ந்தரணிடஞ் - சார்ந்துறுதல் போன்மேவுமாய் மலரின்மீதிலமர் தாழ்சிறையதவளவன்னம்-தண்ணலர்த்தோய்ந்துடற் பாசிபோர்த்தெழுதலுஞ் சவியுறாஉம் பேட்டோதிமம்-தான்கண்டு சரியவேற்றன்னமென்றஞ்சிடச் சபதியிற்சிறகுதறியே, புசரகலு மெழிலுருக்காட்டியுளளன்புடன் புல்லியேயுவகைகூரும்-பொற்புறாஉம்வளமிகும் புதுவை வாணன்புலவர் போற்

னுகெம்பீரநிபுணன் - போலியரெனும் புலவர்காதரறுத்துக் கவிப்பொற்
கல்லணைப்பொருத்திப்-புகலைந்திலக்கணக்கடியாலமிட்டயம்போன்மு
டுக்கின்ற தீரன், சகரர்தொடுகட லுண்ட முனிவன் மகிழ்நபிறைத்தைதா
மமொடு போக்குநிரும் - சவராயலுப்புலவவெதிர்கொளீஇயன்புடன்
சவியுறக்கொண்டுகாண்க-சார்ந்தரொருநாண்மாலை நினைநோக்கநின்னி
லஞ்சதுரனேமாமனுலை யுட்-டங்கிறையாதலாற் காறைதகன்றனன் சாற்று
மிதுவிட்மிதமல, பசுரரியவளமேமென் மறுகிலுனையோர்பகற் பார்த்
தனன்கண்டு மெனைநீ-பார்வையை யியக்கிறையன்றியென்னிட மருவுபரி
வுகொண்டனை யல்லைகாண்-பருகாற தூமிக்கி றெவுட்டு மென்பதினுண்
மைபாரிலாயிறன்பனே-படிமீதிலாடவர்களபெண்மைமேவுங்கோல
பார்த்தியர்கண்மதிலோலனே................................(கசு)

இன்னமொருவற்புதமியம்புவெனின்பமுடனெழுதியே முந்து நிருப
ம்-ஈயனின்பாலொருவனத்த மீந்தனனவனியங்கிறைனினதகாரம் - நன்ன
யத்தோடுநினைமேவுமனைகண்டனதுநாயகாகத்திலில்லை-நானுமிதனை
க்கேட்டிகைக்கொளேன் போந்தபினர் நல்குதியெனக் கேட்டவன்-
சொன்னமொழிவண்ணமே யென்னிடமடைந்தனன் சொற்றினைவ்வி
யப்பைத் தோதகத்தோடந்தநிருபமென்கைக்கொளீஇச் சொல்லிமற்
றிச்செய்யுள-நின்னிடம்விடுத்தனன்ன தனைநன்கோர்குவாய் நீணிலந்த
ணிலெள்ளிதில்கேள - நேடுபோற்சீருறும் பொருளெனினு மஃதுறுநேடு
பொருள் சீர்மேவுமே...................................(கஎ)

அன்பினுக்குரிய சவராயலென்னுர்வலாவல்லலுற்றிடுமமைதியில், நி
ண்புறத்தன றதலின்றேனையோரிடையதை நிகழ்த்திடற்பலனுமாங்கொ
ல், அன்பிலாவருந்தமக்குரியரன்புடையராக்கமுடனென்புமோகேள்,
துன்புறுங்காலைப் பிறர்க்குரியவென்ன முன்சொல்லினர் தகுதியோரோ.

கருத்தினிற்பெரியைகலைவலாய் சவராயலுவெனுங்கவிநிதி நெருநற்,
பொருத்தமாச்சுகுண சுகிர்தநாதக்கோன் பொன்னினைக் குறித்தொருபு
லவன்; திருக்தமாவுரைத்தகூற்றுகளனைத்துஞ் செப்பிடக்கேட்டனமல
வோ, அருத்தமென்பதனையற்பமீப் பொருளென்றறைந்தபற் பாக்க
ளைக்கேளாய்.....................................(கக)

உலகெலாமளித்தோ னுவந்தவதரித்த வொள்ளியவெல்லையையுதக
த்-துணர்த்து மாயிரத்தெண்ணூற்றுபானேடொன்றியவிரண்டெனு
மாண்டிற், சலகமுந்தலைசூழ புதுவையென்பதியிற் றுவிறைவேம்பபொ
ண்மதியிற்-சார்புதனிருபத்தாறெனுந் திகதிச்சண்டன் கீறெண் மணிய
மைதி, நிலவுறுஞ்சவராயலுவெனுட்புலவனீணிலத்தருந்ததியெனவே -
கநிழ்த்துதற்குரிய சுகுணராசம்மாளநேர்ந்தநற்றவமெலாந்திரண்டே,
யுலவையுந்தழைக்கக்குழவிவெண்மதியிறைளிமுகத்துதித்ததுபோலு-
மொப்பிலாமுகங்கொண் டருளப்பனெனுமோரறுமதிச்சுதனுதித்த
னனே.........................................(உ௦)

அருணிலைமொழியோடப்பனென்றகிலமறைத்திடுவரு மொழியபி-வாக்குவயத்தூர்வகத்தநின்புதல்வனூர்தருமிந்தமண்ணெனவே-ருணிதர்பரிவாற்பாவிறைற்பரவும்பரமனென்பசுபதிபதத்திற் - படர்நகனனிதனை யறிதலின்றகிலம்பன்னு மாலருகினனெனவே, தருணியிலெளிபோ லூரனுமுஞ் சவராயலுவெனுஞ் சான்றவநினக்குச்-சாற்றலுமிதனை யேற்றிடாதனைத்துஞ் சழக்கிலையுணர்வையாலினைய, தருணமைம்புலனை வென்றவனெனினுந் தயங்குதற்குரியவச் சோபந் தாழ்ந்திடாதகலப்பஞ்ச தந்திரஞ்சேர்சவியுறுசெயுள்விடுத்தனனே..........(௨௧

எட்டைவந்துறினுமிற்பிறப்புடையாரினைதலின் றேற்பவர்தமக்கு....
வாட்டமின்றுதவி வழுத்துவர்முகமன் மன்சவராயலுவெனவே......
மோட்டிடத்திருந்து முழுமகனெனிலோ மூடுக்குவனடுத்தவற்றவனாக்.
கோட்டினின்வயிரஞ் செறிப்பினுங்கருமா குஞ்சரமாகுங்கொலிலதே.

ஆற்றலல்வரந்தகாலையிலடுத்தோரகழ்ந்திடுகுழியில்வந்தணுகும்.....
ஊற்றலதனை யுதவுமாறுதவி யோதுவரின்மொழி யுறுகண்........
ணுற்றவுமடைந்துங் குடிப்பிறந்தவரோ லாதுலர்க்கன்புமாடடைந்து...
மாற்றலர்க்கரியேதிரப்பினுக்கிடியாமன்சவராயலுவெனவே.....(௨௩)

## பஞ்சரத்னம்.

காமன்கண்ணுதலாலெரிந்து பின்னுருவங் காசினியதிலடைந்தாங்கு, வாமமேய்புருடனொருவனைப் பாகூர்வைப்பினிற் கண்டனனன்னான், நாமமோசவராயலு வுணர்மதன்றன்றற்கணை சிந்தினனென்மேல், தாமமேய்குவளையுலவினென்சகியேதரிப்பதெங்ஙனமென்புற்கலனே. (௨௪)

புற்கலனெழிமுன் போந்தவன்பாலென் புன்கணைப்புகன்றவன்றனிற்கேள், அற்புடனலங்கல் வனைந்திவணடைவா யாயினென்னுதனைக்காண்பாய்,முற்கொடுமையைக் கூற்றுதைத்தவற்கியற்ற முனிந்திடவன்னவனெரிந்த, விற்படையான்றன் மற்கொலையொழிப்பாய் வியனுறுமெனதுகாதலியே...................................................(௨௫)

காதலன்னவன்மேற்கொண்டன னதனுற்கருத்தழிந்தன னினியென்மேல், ஆதரஞ்செலுத்து மன்னையுமுனிவா ளகன்றிடுங்கைவளையடைதோய், மாதரம்பரமுமாதருமலர்கள வழுத்துவரொங்கனமுய்வேன், சாதியர்நீயிர் சூழ்ந்தனரிருந்துந் தாவடைந்திடுதறென்றகவோ.....(௨௬)

தகர்க்கொடுதனையி லொழிக்கவூர்வேளித்தனை யொருமுகத் தவதரித்தாங், ககக்களிப்பொடு பாகூரினிலடுத்தேற்கன்பினைக்கொடுத்தவன்னவனைச்சுகத்துடனனுபவிப்பதென்விழைவாற் றேழியிக்கணமவணடைந்து, திகைக்குமென்னரந்தை யுரைத்தவனணிந்த தெரியலைக்கேட்டிடுவாயே...................................................(௨௭)

கேட்டியென்விழைவைப் பூட்டியம்பலரைக்கிளர்ந்திடத்தொடுத்தவேளொருபால், நாட்டினைவளைக்கு நதிபதிரேநர்குயிலன்றிறென்பொதிகைமேட்டினின்றுலவுந்தென்றியிந்தொருபால்வெதுப்பவென்னுடன்

மெலிந்திமோல், தோட்டியையிமிர்க்கு மதகரியனையதோன்றலெ நாடு மென்னகமே.......................................................(உஅ)

## பதிகம்.

நவராசிமணிவட மணிமானிறநாட்டினிற்சீர்
நவராமமேவிய நாயகனே கலைநாலுமிந்த
நவராயமுத்தமிழ் வல்லவபல்லவ நாவலனே
சவராயலுநிற்றணந்தேயினைகுவடார்குழலே. (உகூ)

கார்குழலைம்பாலியல்விட்டுத் தாழுறத்தையனல்லாள்
கார்குழலென்னத்தரைமிசை யேய்குவடாழ்வளனைத்
தார்குழலின்னிசை யன்னையர்தேற்றியு மாற்றலளாய்த்
தார்குழைநீத்துச் சவராயலுமன் றயங்குவளே. (௩௰)

தயங்குவளைக்குலஞ் சோர்வுறு மன்னந்தளருநடை
உயங்குறுநோய்க்குமருந்துண்டுகொல்லெனுமொண்டொடிகேள்
மயங்குறலின்ன முனக்குரியன்று மருதுகருத்
தியங்குறநல்குஞ் சவராயலுவெனுந்தீரத்தனே. (௩க)

தீரத்தரிமணிசேர் பெண்ணைமேவித்திரைகடல்சூழ்
சீரத்தகை புதுவைச்சவராயலு செவ்வியனே
வேரத்தொடுமதிவெள்குங்குழன்முக மின்னிடையாள்
சோரத்துடன்மதனுந் தலரான் மெய்க்குழைகுவளே. (௩உ)

குழையுந்தொடியுங் கலையுங்குறைவுறக் கொண்டலன்ன
உழையுமுழக்கும் விழியலர்கால வொருவியநின்
னுழையுங்கருணையுளதாங் கொலோவெனுமொண்மை யுறும்
புழையங்கரமலையாய்சவராயலு போற்றுகவே. (௩௩)

போற்றுவணின்னைப் புகழுவளீண்டைப் புயன்மருவ
வேற்றுருவாக்கியெனைச்சவராயலுவிட்டவனே
சேற்றுனு நோக்கியர்பால் விழைவுற்றனன் சிந்தையினி
யாற்றுதலெங்கன மென்பாளடையாங் கொருதரமே. (௩௪)

ஒருதரங்கத்தன்றி னேரம்பொருளென் னொருதலைவி
திருதரங்கத்தல்லி னேர்ந்தனங்கன்பொற நேர்ந்தனளாய்ப்
பொருதரங்கத்தொலி நாராசங்காதிற் புகப்பொருமி
கருதரங்கப்புக ழேய்சவராயலு கன்றுவளே. (௩௫)

கன்றுனுங்கற்று வெனவனைநயக்கணைந்தவெல்லை
பொன்றியதென்னும் விரலொற்றித்தேய்ந்து புழுங்குமனம்
துன்றியபாலனந்துய்க்கநஞ் சென்னுஞ் சுடர்வடிவேல்
ஒன்றியபாணிச் சவராயலுவென் றலைகுவளே. (௩௬)

உலைமெழுகின்னவ டன்னுள்ளுருகி யுழந்தலைவன்
கலைமுழுதின்னமு மோர்கின்றனோகடுக்கண்ணியர்தம்

முலைமுகடேறியிருந்தன் கொல் சேடிமொழிவையெனச்
சிலைமதனேர்சவராயலுவோதித் திளைநவளே. (௫௭)

தினமவணேர்ந்திடச் செல்வந்தணைந்திடச் செல்லலுற
வனவனஞ்சூழ்ந்திடு பாகூரின் மேவிவயங்குதனீ
யினமுறுமோவவளின்னலிணைகுதலின்புனக்கோ
கனமுறுபால சவராயலுவென்னுங் கார்வள்ளலே. (௫௮)

வேறு.

தக்கணம்போயென்மைந்தல் சார்தலிறைற் கீழ்மகனே
கக்கிஷிங்களேற்கிடவே கண்ணிணையென் - பொக்கசம்போற்
பாகூரினின்று சவராயலுபூபன்வந்தான்
ஏகுதிகாணீதானினி. (௫௯)

சீருலவுமாமேழிச்செல்வாவுனக்குநிக
ரார்புதுவைமாநகருக் காதாரா - வேருலவு
மெத்தலமும் போற்றுமெழிற்சவராயற்கோனின்
கைத்தலத்துக்கொப்பாமோகார். (௬௰)

## ம. ள. ள. மயிலை-சவரிமுத்துப்பிள்ளையவர்கள்

இயற்றியது.

சீர்விளங்குங்கலைஞானமணியென்னும் வீரமுனிசிறக்கச்செய்த......
பேர்விளங்குமெழிற் றேம்பாவணியினளவறிந்தெவர்க்கும் பிரசங்கிக்க
ஏர்விளங்குநஞ்சவராயலு வலவனலே நன் கிசைவதன்றிப்..........
பார்விளங்கெக்கலையினும்வல்லவராலு முற்றுணர்ந்துபகரொண்ணுதே

பலபாஷையிற் பண்டிதராகிய

## ம. ள. ள. பிள்ளை-அப்பாவுமுதலியாரவர்கள்

இயற்றியது.

இன்னாட்டிப்புலவர்சவராயலுநாயக வலனையெய்திறைப்போற்..........
றென்னாட்டிப்புலவரன்றே தவஞ்செய்துபெறுவாறேற்சிறந்தநூல்கண்
முன்னாட்டியின்றேம்பாவணிப்பலனெட்டாதுகுறைமொழிந்தாரென்று
பன்னாட்டிங்கிடக்குமொருபேரிழிவன்னவர்க்கென்றும்படராதன்றே.

தேம்பாவணிக் கீர்த்தனஞ்செய்த

## ம. ள. ஸ்ரீ. பு-ஆரோக்கிய நாயக்கரவர்கள்

இயற்றியது.

முத்தமிழை யுணர்த்தபுலவோருணாத்தபன்னூல்கண் முழுதுமாய்ந்து
சத்யமறைப்பொருடேர்ந்து சகலகலைவலவனெனத் தாபரத்தில் .....

சுத்திபெயவீரமாமுனியருடேம்பாவணியாஞ் சுருதிநூலை.........
யெத்திசையும்புகழவுரை செயுஞ்சவராயலுதிறங்கண் டின்புற்றேமே.

---

## கோவில் அச்சுக்கூடத்து
## ம. ள. ள. அ–ஆரோக்கியசாமிபிள்ளையவர்கள்
### இயற்றியது.

மணியை மதிக்கவதிற் பயின்ற வல்லோ னெனப்பல்வளத்தேம்பா..
வணியைமதிக்கும் வலன் சவராயலுவானந்த ராயனகத், தணியைவகுத்
துப்பொருள் விரித்திட்டியாப்போ டெழுத்துஞ் சொற்பொருளுந்,
தணியவருக்கவன்பெனு நற்றனமீந்தெவருங்கொண்டனரால்........(க)

வேதப்பொருள்களொருங்கமைத்துவீரமுனிவனருளியசெந்........
தாதைத்தரு தேம்பாவணியுட் சமையின்பொருள்க ளவைக்கருத்தக்..
காதற்பெருக்கா ரானந்தராயன்கனிய வூட்டுவையென்............
றோதச்சவராயலு சுகுண னூட்டத் துணிந்தானுரைவிரித்தே.....(உ)

கல்விக்கடன் முற்றுண்டெழுந்து கதித்தவீரமுனி மஞ்சு..........
மல்குமிருடோயிவ்விந்து வறிய நாடு வளமுறுவான்..............
புல்கித்தேம்பாவணியென்னும் பொருப்பிற்சுருதிபெயவதினின்.....
றல்காச்சவராயலுவாய்ச்சொல்லாறுசபையாழியிற்செலுமே......(ங)

வீரமுனிவனருடேம்பாவணியைவிளக்க விருப்புற்ற ..............
தீரன்துப்பிமா குரவன் திறம்பாதச்சிற் பதித்தினிய..........
வாரமென விவ்வுலகெல்லா மகத்திற்றரிப் பாக்களிக்கவதை.........
தாரமிகு சவராயலுவேள் நாவால் விளக்கி நயந்தனனே..........(ச)

பாடப்படிக்கப்பொருளுணாக்கப் பல்காட் டுணக்கப்பண்புளனுந்....
தேடக்கிடையா நஞ்சவராயலுசீர் வீரமுனிதந்த................
கூடற்கருந்தேம்பாவணியைத் துலக்கப்புலவர் நன்குணர்ந்து........
வாடப்படாப்பா மாலை யிவன்வளரத் தரித்தார்மனம் வியந்தே.....(ரு)

கானூர்மலர்க் காவனந்தடஞ்சூழ் கதித்தபுதுவைமாநகரோன்..........
தேனூர்மதுரம் வாய்ந்தகவித்திறஞ்சால் சாமிநாதன் செய்...........
ஞானதிக்சர் காப்பியத்தை நரர்கணவையற்றோங்கியுயர்.............
வானுரின்பம் பெறச்செயகான் மைந்தன் பிரசங்கித்தனனால்.......(சு)

தவக்கடல் கடந்த வான்றனைதரியமுனிவ னென்பான்..............
பவக்கடல் கடக்கயாரும் பரிவுகொண்டியற்றித் தந்த .............
வவைக்குடையாத தேம்பாவணிவிரித்துரைக்கவல்லான் ............
நவைக்கிடமிலா திவற்றை நவில்வது மாண்பென்போமோ...... (எ)

சங்கமலைக்கத்திருச்செல்வராயர் சரிதத்தொடுத்திதய............
மங்குலறுவான் காப்பியமாவகுத்தான் வல்ல பூலோக.............
சிங்கன் சவராயலு வதனைத்தெளிவுற் றெவர்க்கும் பயன்படவே.....
எங்கும் புகழவிரித்தியுரை யிசைத்தானிதுமா மாண்பம்மா........(அ)

தெண்டிரைநீர் வயல்வாவி தடநதிசூழ் பாகூரிற்செயகான்றந்த, வண் டமிழாயுஞ் சவராயலு ஜெயராக்கினியெனுநம் மாதாவுக்கோர், கொண் டலளவுஞ் சிகரக்கோயிலினைக் கட்டுவித்துக் கோதறுக்கும், அண்டர்ப ணியவள்சொருபமொன்றுசெய்வித்துலகிறைஞ்ச வவண்வைத்தானே.

---

## குவர்னமா தருமக் கல்விச்சங்கம் செந்தமிழ் உபாத்தியார்
## ம. ா. ா. மலையப்பிள்ளையவர்கள்
### இயற்றியது.

தன்னையேந்து குசைமுனிசரிதத்தேம்பாவணி கேட்ப?..........
வுன்னையியற்றி யுரைத்திறனு மொருங்குகொடுத் திவ்வோங்கலிடை...
அன்னையொடு மற்றவன் மருங்கினமைய வமலன்சேயா மேல்.......
என்னை நினக்குப்புகழ் வேண்டு மினிய சவராயலு சுகுணா.........(க)

பதவுரையுங் கருத்துரையும் பொழிப்போடு மேற்கோளும் பரவக்கா ட்டி, இதமுறுதேம்பாவணியாங் கடன்மடுத்துச் சபைப் பைங்கூழினி துற்றோங்க, சிதமருவு மானந்தராயன்மலை தனையடைந்து சிந்திற்றம் மா, நிதமன்பர்புகழ் சவராயலுவெனு மாமுகில்நிறைந்த நீர்மையானே.

இருந்தமிழை முத்தனித்தனியாயினி துரைக்க வனந்தனுயிரம் வாய்பெற் றான், பெருந்தகைதேம்பாவணியை யொருவாய் கொண்டொருவனே பேசினனால், அருந்தலம்வாழ்நடுநிலையோர் சமனோக்கி யிவரியல்பை யறைமின் சாவா, மருந்துபொழிந்தெனப் பொழிந்தவருட்சவராயலு முகிற்கு மற்றெப்பின்றே ..............................(ரு)

வாதனந்தம்புரிபவர்க்கு மருளோட்டத் தெருணாட்டவழியைக் காட் டப், போதனந்தம் வீரமுனி சமைத்தநற்றேம்பாவணியாம் போனக த்தை, யேதநந்த வட்டியென வானந்த ராயனன்பா லிசைக்கயார்க்கு, நீதநந்தம்வண்சவராயலு வாய்க்கைமனக் கலத்தைநிரப்பிற்றன்றே.(ச)

அல்லிரியத்துறந்துபெரும்பரவையினும்பொருளாழ்ந்தே யமையப் பன்னூற், சொல்லியநல் வீரமாமுனிதேம்பாவணிக் கவையிற் சோர்வி லாம, லெல்லியினுண் பொருள் விளங்க வொரு சவராயலு பொருண ன்கியம்பலாலே வில்லியருமறம் விடுத்தேயறவழியாஞ் சத்யமறை விரும்புவாரோ ..........................................(ரு)

பன்னூலைவிளக்குகின்ற தொன்னூலாய்ந்துபருதியிற் றெம்பாவணிக் குஞ்சுருதிநீதி, நன்னூலாங்குறளுக்கு நாலடிக்குநவையில்பொருள்விரி க்கு மொருசெயகான் மைந்தன், முன்னூலின் முறைவழுவாஞானதிக்க முதல்வன் முடியப்பனுக்குச் சொல்லோர்சில, மன்னுசிறுகாப்பியத் தைப்பலருங்கேட்டு மகிழவுரைப்பதும்வியப்போ மன்றத்தோரே(சு)

மண்ணவர் விண்ணவரோடுறவாட வமைந்துயரோணியதோ - மன்ன வர் மன்னவன்றன் வழிவந்தநன் மாமுடி தாங்கிநுவோ, எண்ணனு புண்

ணியர் பண்ணிய தவமதோரீங்குருவானதுவோ விடர்தருபவ விருளிரி தரவாதவ னிவ்வடிவாயினனோ, திண்ணியவாலய மண்ணிதினேதெனத் தேவர் பிரானனைக்கே - செப்பிடவொப்பரு நப்பெருந்தகையினன்செய சவராயலுவேள், கண்ணியவெண்ணம தெண்ணளவுங் குறைகண்டிலராயொளிருங் - கருதரு மிருடிகளுனாகொடு பாசூர்க்கட்டினனலமுறவே ........................................(எ)

சனங்கொடையிற் புவிபொறையிற் கல்வியினின் வீரமுனி கவினில் வேளாம், தனமதனிலளகேசன் றரியலருக்கரியேறு சமத்திற்சஞ்சோன், மனங்கலங்கி யடுத்தவர்க்கு மாமேரு பிறர்மனைக்கு மகனுமெங்கள் கனமாகுஞ்சவராயற் பாத்திரட்டுப்பாற்றிரட்டாங் காசினிக்கே.....(அ

இலக்கணத்தைத் தயிர்ச்சாத மெனப்புசித்துச் சங்கத்தா ரியற்றுந் தொல்லை, இலக்கியமாம் வாரிபொருக்காயுலரவொரு மிடராயினிது மாந்திக், கலக்கமிலா தேப்பமிடு நஞ்சவராயலு வெனுமோர்காளமேசந் துலக்கமுறு பாப்பயனையுலகுவப்பவளவின்றிச் சொரிந்ததம்மா...(கூ)

ஆரியரிற் சீரியராந் தீரியோந் தொழுநோயர்க் கமிர்தம்போல, ஆரியரி னரியநீ யுலுத்த பத்தர் சல்லாப மமையாயென்ன, வேரியந்தேனேடுகண்டின்மிகச்சவராயலு சுகுணன்விளங்கச் சொன்னன், யாரிவற் கீண்டொப்பப்பா வெப்பாவுந்தப்பாமலமைத்தலானே.......(ய)

ஊக்கச் சடையுற்றருள் முளைத்தே யொருவாநெறியேகவடாகி, மோக்கதவமாமுறி தளிர்த்து முன்னூற்றிறமா மரும்பரும்பி, ஆக்கப்பைங் காய் காய்த்தீகையாகுங் கனிதந்திந்நகர்ச்சீர், தேக்கத்தருவாஞ்சவராயற் சிங்கம் வேங்கையருளுகவே..........................(கக)

அல்லினை நீக்கியொளிசெயுங் கதிரோனன்னவே வறிஞருக்கிருளாமில்லினை நீக்கிக்கொடையொளி தருநம்மெழிற் சவராயலு தருமம், புல்லினை மானுக்குதவிடாதனைமார் பொறியின்றி மூவருடத்து, நெல்லினையரிந்து படைப்பது முறையோநேர்மருங்கிழு முலைத்திருவே.....(கஉ)

---

## வானவன்விடுதூது செய்த தருமக் கல்விச்சங்கத்து உபாத்தியார்

## ம. ஏ. ஏ. அ- ஞானப்பிரகாசமுதலியாரவர்கள்

### இயற்றியது.

அருளுறுவீரமுனி யளித்த தேம்பா வணிப்பொருளை நன்குணராக் கழக மாந்தர், உருளுறக்கிட்டாத கனிக்குக்கூற்ற மோரியுரைத்தது போலவுரைத்தார்வேதப், பொருளுறுதனை யெவர்க்கும் புகன்றதாலப் புலவர்மகிழ்புலவனன்றே புவியின்மேவு, மருளுறப்பொய்மதமங்குலுக் கென்றூழாவருஞ் சவராயலுசுகுணவலவன்றனே. (க)

பொன்பாவையார் பின்போ மெய்யார் பொறியாசை
பன்பாலன் மெய்யென்பாயாக்கும் பசிதீரத்

தன்பா புன்பாசெய்யாச் சேயா சவராயல்
என்பாலன்பா வின்பாப் பொன்பா லீவாயே. (உ)

சவராயலு தற்பரனற் றெருளிற்
றவருதவன் றப்பறை யற்பமெனும்
எவராகிலு மிப்புவியிற் கருதி
லவராவிக ளக்கினிபேய்க்கினையே. (௩)

அலைவாரிதியிற்றவிர்வீழ் சிலுவை யலவன்றா
வுலையாதுவந்த முனிநாமமன்றி யுமைமுனிபோற்
கலையாயலாலயற் பேராயலென்று கழறுவனே
இலைபோவெனுப் பொன்பிரான்சோங்கிவண் டமிழ்க்கேவனே.

---

ம. ரா. ரா. தேவ்-இரத்தினசாமிசெட்டியாரவர்கள்
இயற்றியது.

இரும்பன்ன நெஞ்சத் துரோகியர்பாற்சென்றினியதமிழ்க்
கரும்பன்ன சொல்லியுங் கேளாரெவர்க்குங் கருமுகில்போ
லரும்பொன்னளிக்குஞ் சவாராயலுமன்னை யண்டினகாற்
றிரும்பன்ன வுங்கள்கலிபோங்கவி சொலுந்தூயவரே. (க)

பாரோங்குமட்டதிசை வெற்றியுற்ற பரும்புகழாந்
தாரோங்கு வீரசெயகான் புனிதன்றரு முனது
பேரோங்க நல்கும் பலவுபகாரப் பெருக்கைக்கண்டு
காரோங்கி வாரியுறுஞ் சவராயலு காவலனே. (உ)

வேறு.

கஞ்சம்வென்றவதன சவுந்தரகன்னி கன்னன்வின் மன்னன்கையம்பினை, னெஞ்சநைந்திருகண் பஞ்சடைந்து நன்னித்திரைத் துறந்தாள் கலந்தானையா, வஞ்சமொன்று மனச்சத்துருக்களை மட்டடக்கும் புருஷசிங்காரனே, தஞ்சமென்றஜனபரிபாலனே சற்குண சவாராயலு தீரனே. (௩)

செப்பரிய பாகூர் வாழ்திவ்ய சவராயலிவண்
மைப்புயல் போல் வந்த மகராஜ - னிப்புவியி
லேற்கப்பிறந்தார்க்கிரு நிதிதந்தார்கலியைத்
தீர்க்கப்பிறந்தான் றினம். (௪)

ஈயாத லோபியனை யெட்டியைப்போற் பார்த்தறத்தை
யோயாமற் செய்யமன மோகைகொள்ளும் விற்பனனே
தேயாததிண்மதிபோற் றேசுறுநின் கீர்த்தி நிழற்
சாயாதிலங்குஞ் சவராயலு துரையே. (ரு)

பலங்கிளர்செயகான் சந்தபாரம்மாளருந்தவத்தால்
இலங்குமாயிரத்தெண்ணூற்றேடிருபத்தொன்பானுண்டோங்கு

நலங்கிளர்தேசம்பர்மாத நல்லொன்பான் றேதியாகத்
துலங்கெழிற் புதவாரத்திற் றேன்றினன் சவராயற்கோன் (சு)

கல்விசாஸ்த்திரமடத்தின்சூர்வையான் ம. ா. ா.

## நதி-ஞானதிக்கசாமிமுதலியாரவர்கள்

### இயற்றியது.

மாதவர் கல்விசாஸ்த்ர மடத்தினங்கண்காணிப்பி.....................
லோதினே ரனேகர்தம்மி லொரு சவராயனுப்பேர்ப் .............
போதன் செந்தமிழ் நன்காய்ந்து புவியெலாம்புகழப்பெற்ற ........
மேதகு சீர்த்தியாரோ மேவினர் மேவுவாரோ.....................(க)

செங்கமலத்தடந்திகழும் புதுவைவாழுஞ் செயகான்பூபதி பௌத்ரி யெனுந்தாயம்மாள், மங்குலுறுமலர்ப்பொழில் சூழ் பாகூர்தன்னின் வந் தடைந்ததாலொரு கல்லறையுண்டென்றே, யெங்குமுண்டோர் பெரு ம்புகழீ திறம்பூதன்றங் கெங்கள் சவராயனு நாயகன்செய்வித்த,பொங்கு செயராக்கினி மாதாவின்றிவ்ய பொற்றேவாலயத்தாலாம் புகழ்க் கொ ப்பாமோ...............................................(உ)

கல்விசாஸ்த்திரமடம் ம. ா. ா.

## அந்தோனிவாத்தியாரவர்கள்

### இயற்றியது.

தகைமிகு தேம்பாவணிக் கடன்மடுத்துத் தக்க மேற்கோண் மினல் செய்து, பகையெனும் பாந்தள்வெருண்டிடல் சுருட்டப்பாதகக் கோகி லமோட, நகைமுகங்களித்தே யன்பராந்தோகை நற்சிறையெனுஞ் சிர ந்துளக்க மிகையறப்பொழிந்த தருமறைசெழிக்க வியன்சவராயனு முகிலே.............................................(க)

மன்னவர்மகிழுந் தானுபதி மகாநாட்டார் தங்கட்க்...................
கென்னுமோர்செயகான்மைந்த னெழிற்சவராயனுப்பேர்...........
துன்னியசுகுணன் செய்த தூய வாலயத்தாற் பாகூர்..............
பன்னரும் பாகூரென்று பகர்ந்திடத்திகழ்ந்த தன்றே ...........(உ)

ம. ா. ா. **சாரம்-இராமசாமிவாத்தியாரவர்கள்**

### இயற்றியது.

வையந்தனிற்கனகமாமழையையெப்பொழுதும்............
பெய்யும்புலவர்கலிபேர்ந்திடவே - செய்யவள............
மன்னுந்திருப்புதுவை வாழுஞ்சவராய......................
லென்னுங்கரும்புயல்வந் திங்கு..........................(க)

மன்னர்புகழ்புதுவை மாநகரில்வாழுகின்ற..........................
தென்னன்செயகான் செழுந்தவத்தாற் - கன்னனெனை..........
வந்தசவராயலுனை வாழ்த்தும்புலவோர்க்குச்.........................
சந்ததமும்வாய் மணக்குந்தான்.......................................(உ)

வெண்ணிலவினும் பெரிதாயமேவிய நின்கீர்த்தியிந்த.......
மண்ணுலகி லெப்பொழுதுமாறாதே - புண்ணியமே.......
யோருருவாய்ப் பூமியில்வந்தோங்கு சவராயலெனக்.........
கோருதவிசெய்வாயுவந்து.......................................(ரு)

மேன்மக்கள்வாணர்கவி வேண்டுவார் வீணரதைத்.........................
தானமக்காகாதென்று தள்ளுவார் - நான்மிக்க.........................
வுன்புகழைச்சொல்ல வுறுதியிலேனாயினுமே.........................
நன்சவராயலிதைநாடு..................................................(சு)

## ம. ா. ா. க - தங்கப்பிரகாசமுதலியாரவர்கள்
### இயற்றியது.

மின்னுந்தவளக்கூவிரமோ வேந்தரணியுமணிமுடியோ-விளங்கும்புவனச்செஞ்சுடரோ விமலருடலத் துயிர்கோலோ, மன்னுமெழின்மாமுகக்கண்ணோ வானிற்செலற்காமேணியதோ-மண்மாதணியுமாவணியோ மற்றிங்கெவனோ மதிக்கறியேந், துன்னும்பிரசமுண்டளிகள சூழ்ந்து விளரிப்பண்மிழற்றுஞ் - சோலைத்தடஞ்சூழ் பாகூரிற்றுலங்குஞ்செயராய்கினிமரிமா, சென்னும்விமலிக்குயர்புலவரேத்துஞ் சவராயலுநிபுணனினிதாவமை வித்தவனுருவ மிலங்கச்செயுந் தேவாலயமே.......(க)

## ம. ா. ா. க-தைரியநாதஉபாத்தியாரவர்கள்
### இயற்றியது.

மருமலர்த்தடங்கள் வாவிவளஞ்செறி புதுவையூரன்..........
திருநிறை செயகானீன்ற செயசவராயலுப்பேர்ப்..........
பெரும் புகழ்ப் புலவன் மேம்பாவணியினைப்பிரசங்கிக்க.....
வரும்பொருளுலகுக்கெல்லா மாநந்தம் விளைத்ததன்றே...(க)

வயல்நதியேரிதாங்கல் வளமமை பாகூர்தன்னில்..................
ஜெயமரியம்மனுக் கோராலயஞ்செயகான் சேயாம்..................
நயசவராயலுப் பேர்நாயகன் கட்டுவித்து..................
மயமிகுமவள் சொரூபம் வனைவித்தவ்விடம் வைத்தானே........(உ)

## ம. ா. ா. அப்பாக்கண்ணு நாவலரவர்கள்
### இயற்றியது.

நற்கனமு நற்குணமு நற்றனமு நற்றெழிலு..................
நற்கவியு நற்கலையு நற்பொருளும் - பெற்றிலகு..............

வாணரில்லம் வான்றருவாய் மன்னுசவராயலெனக்............
காணுமிடரோடவருள்காண்..................................(க)

பொன்னு மிரும்பும் புயங்கத்தெரிமணியு......................
முன்னுங்கரும்பரலு மொப்பாமோ - மின்னனையாய்..............
நற்றமிழுக் கீய்ந்துபுகழ் நண்ணுசவராயலைப்போன்...............
மற்றவரு முண்டோமதி......................................(உ)

தாழ்வுபெறு நல்குரவாற் றாழ்ந்தாரைத் தாழாமல்
வாழ்வுபெறவைக்கும் வரிசையினன் - சூழ்கமல
வண்ணவயற்பூம் புதுவைவாழ் சவராயற் கோனம்
எண்ண முடிப்பான் மனனேயின்று (ங)

சேலாரணிவயல் விண்ணூர் தண்ணூர்பொழில்சேர் புதுவைக்.......
கோலாகலன்கவுரிக்குலன்பாவலன் கோதில்நலன்..................
தாலாகலைகளறி சவராயலு நாயகன்றன்........................
சூலான்முடிந்தனைக்கையாலவிழ்ப்பவர்க் கண்டிலமே.........(ச)

---

## ம. ா. ா. சிவப்பிரகாசவாத்தியாரவர்கள் இயற்றியது.

நம்புறு சொற்செயகான் செய்தவச்சவராயலு சுகிர்த நன்னாவல்லோன், அம்புறுதென்முனியனையசீர் வீரமாமுனிவ னருளிச்செய்த, வம்புறு செந்தமிழ்த் தேம்பாவணியினறுஞ் சொற்பயனைவழுத்தக்கேட்ட; செம்புருகுமிரும்புருகுஞ்சிலையுருகுமலையுருகுஞ் சேற்கண்மானே.(க)

பார்க்கச்சிறந்த தனதனென்றுன் முடவன்பயிலுஞ்
சீர்க்குட்சிறந்த நற்சேடனென்று லிருநாத்திகழ்வேள்
ஏர்க்குட் சிறந்தவனென்றுலுருவிலி யென்னிலினி
யார்க்குச் சரிசொல்லலாஞ் சவராயல் நம்மன்பனையே (உ)

தேனேங்குசெந்தமிழ் வாணருக்கேதரத்திண்புவியிற்..........
றானேங்கிய சவராயலு பூபநின்றன்புகழும்.....................
மீனேங்குமிந்துவும் பாலாழியு நித்தன்வெற்புமுயர்...........
வானேங்குகங்கையு மொன்றாகி நின்றுமயங்கியதே.............(ங)

---

## ம. ா. ா. சுப்பு-இராமசாமிமுதலியாரவர்கள் இயற்றியது.

புகழேந்திவெண்பாவிற் செயங்கொண்டான் பரணிக்குப்புலமைவாய்ந்த, தகைசேர் கம்பன் விருத்தந் தன்னி லெனப்பிரித்து முன்னோர் சாற்றுவாரோ, வகையாகவினையெல்லா மொருங்குடனே பாடுதற்கு வல்லோனென, நகைசேரு நஞ்சவராயலு புலவன்றனைக்காணி னுவலோரோ

---

இசைத்தமிழ்ப்புலவர். ம. ா. ா.

## திரு-குழந்தைசாமிமுதலியாரவர்கள்

இயற்றியது.

கஞ்சமலர்த்தடஞ்சூழும் புதுவையினி லோங்குசெயகான் றன்றூய,
விஞ்சுசெழுந்தவச் சவராயலு நாயகா சுகுண விமதர் நாண, மஞ்சுறு
தேம்பாவணிக் காப்பியத்தி னுக்குமுனை நீசெய்வளமையைக்கண்; டஞ்
சிநினக் கென்ன துதி சொலத்தகுமென்றறிஞர் சிரமசைத்தா ரன்றே.

சீர்மிகுத்தோங்கும் வீரமாமுனிவன் செய்த தேம்பாவணிப் பொரு
ளைப், பார்மிகுத்தோங்கப் பகுத்து நீ பெற்ற பாக்யமே பாக்ய மெந்நா
ளும், ஏர்மிகுத்தோங்கும் பரமநாயகனே யிவணுறும் பாவலர்க்கேறு,
நேர்மிகுத்தோங்க நினைத்தரவந்த நினக்கரும் புகழ்ச்சிவேறுளதோ. (௨)

பொங்குபேரருளாற் பூதலமனைத்தும் புரந்தளித்தழித்திடவல்ல, ம
ங்களமுறுங்கோ வேந்தனைப் பயந்த மாமரியெனும் பராபரியின், துங்க
மார் சீதமதி பதந்தொழுவோன் தூயநற் புதுவையம் பதியோன் எங்கு
ருவெனுந்தேசிகன் சவராய லின்பமுற்றிதனை நோக்குகவே. (௩)

நேயமோடுலகமியாவையும் படைத்த நிமலனையனுதினம் பணிவோ
ன், தூயநற்புதுவைப்பதியில் வாழ்பெரியோன் சொல்லரு நல்லிசை
யுடையோன், தீயவையொழித்து நேயவாயணைந்தோன் சிறியனெற் கின்
னருள் புரிவோன், பாயநற் கலைஞனெனுஞ் சவராயற்பண்பணீ தன்பி
னோக்குகவே. (௪)

நீட்டும் புகழிற் பரிமளிப்பீரொனத் தேன்சொரிந்த
பாட்டும்படித்துப் பலநாடிரிந்து பல்லைத்திறந்து
கேட்டுங்கொடாப்புல்லர் சென்மத்தைவாட்ட நற்கீர்த்தி நிலை
நாட்டப் பிறந்தனனஞ்சவராயலு நாயகனே. (௫)

முலைக்கண்மட் பானைக்கண் வாழைக்கணாசிக்கண்மொய்ம் மயிர்க்கண்,
தலைக்கண்கொடென்னம் பழக்கண் கழையின்கண் சல்லடைக்கண்,
வலைக்கண்மிளிர்சித்திரக்கண்பொற்பால்வக்கண்மானுமனம்,
கலைக்கண்செறிசவராயலை நாடிக்காணுக்கண்களே. (௬)

---

தலைமைப்புலமை வித்துவான் சாமிநாதப்பிள்ளை யவர்கள்
பௌத்திரரும் ஞானதிக்கம் பிள்ளையவர்கள் புத்திரருமாகிய

## ம. ா. ா. மரியதாசுபிள்ளையவர்கள்

இயற்றியது.

திக்குச்சதுரி லுனையன்றித்திறம்பாக்கவியைச் சொலயாருந்........
திக்கேயிலைமற்றேனையவர் தேர்ந்தே சொல்லுங்கவி யனைத்துந்.....
திக்குச்சொல் லென்றுரைபகர்வார் தெளிந்தே யவை நின்பாற் கூறத்,
திக்குத்திக்கென்றே யஞ்சித்தியங்கும் வகையாற் கவிவல்லோப்....(௧)

நேரார் கவியிற் சிறந்திலகு நிகரில் புகழ் மன்மதன்றகையோய்......
நேரானுக்குச்சேடனையுநிலத்தி லொளிக்கச் செபதகையோய்.......
நோரா ராருன னருங்கவியை நே ப்பெருக்கததுறை தகையோய்.....
நேரார் சவராயலு வென்னுநெறி நின்றெழுகு நற்றகையோய்....(உ)

விரியொண் புகழ்மத் தமிழ்க் கவிக்கேர் விளங்கு முதலோ னென
விவனைத், தரமொப்பதியப் பனை டித்தலைன் சௌரியராய ணுயகனென், றரு
முப் பெயர்தந்தசைட் பெருநயளித்தேவிளிப்பித்தானதையித், த
லையோர் மருவாவழங்கினர்கா ண் சவராயலு நாயகனென்றே......(௩)

---

## அகீம்-அப் நுல்லாத்தீப்சாய்பவர்கள்

### இயற்றியது.

சீராரும்புதுவை நகர்த்தேசாதிபெயனுஞ் செயகான்செல்வனை.........
பேராருங்குணச் சவராயலுநாயகா நீசெய் பிரசங்கத்தாற் .............
பாராரும்பாமரரும் பாவலராய்ப்பாவியரும் பரமநாத..................
னேராருமலரடிகட் கென்றான்றும் புண்ணியராயிலங்குவாரோ....(க)

---

## ம். ரா. ரா. க- ஞானநிக்கராயஉடையாரவர்கள்

### இயற்றியது.

கொடுத்துப்புகழைப் படையாதவீனக்குலாமர் தம்மைக்..........
கடுத்துப்புலவரவர் வாசற்சென் றிரக்காமனிதந்...................
தடுத்துத்திருப்புதுவைச் சவராயலுதான்றனத்தை..................
எடுத்துக்கொடுக்கப் பிறந்தான்மருவு மிருநிலத்தே..............(க)

பாரார்ந்தசைபைம்பொற் பயிர்க்கிறையாது பன்னீரைநிதம்.......
வேரார்விழலுக்கிறைத்ததுபோலவும் வீணர்தன்மேல்.........
ஏரார்ந்த முத்தமிழ்ப்பாடி லென்னநமதேந்தலென்னுஞ்......
சீரார்ந்த செல்வச் சவராயலுமன்னைச்செப்புமினே.........(உ)

மலருற்றகற்பகத்தாருவு நாணத்தண்மாமதியி..................
னிலவைத்தெறுபுகழார் சவராயலுநீதனிந்நா..................
னிலனென்னுமெவ்வ முறையாமலென்றைக்கு மீதலினாற்..........
புலவர்க்குத்தாயகமாகி நின்றுனிந்தப் பூதலத்தே..............(௩)

ஔவைகம்பன்கும்பமுனியையர் திருவள்ளுவனு..........
ரெவ்விடமோ காணுமலேகினு - ரிவ்வுலகிற்..............
செந்நாப்புலவர்பிரான்றீரசவராயலுமா ...................
விந்நாளிலேவருமே யென்ப..........................(௪)

# காரைக்கால்வித்[illegible]

## பாடல்[illegible]

### ம. ரா. ரா. ஞா[illegible]த்தியாரவர்கள்

இயற்றியது

மெய்யாங்கடவுளை வேண்டிச்செயக வென்ன் ...............
செய்யான்பயந்தெடுத்த செல்[illegible] - து யபுகழ்க்............
தேம்பாவணிக் கருத்தஞ்செப் [illegible]........
யாம்பாவெனவுரைப்பேமல் .,.........................(௧)

---

### நல்லாத்தூர் ம. ரா. ரா.

### ஞானப்பிரகாசவாத்தியாரவர்கள்

இயற்றியது.

பருதியுட்கிடவுலக ரகவிருளகற்றருளிபரப்புதேம்பாவணியிணைப் -ப
டலமொராறு தலையிட்டமுப்பானுபகர்ந்தனன்புலவர்மெச்சத், திருவாள
ணும் வீரமாமுனிவனஃதைவெகுதெளிவாக வுரைவிரித்துச்-சீர்மேவுகா
ரைநகர் தனின்வந்துமாபுலவர் செய்யுளுளுமோரைந்தெனுங், கருவிநன்
னூலுளுங் காட்டெடுத்துச் சொலிக்காட்டினன் மடையுடைந்த-கடலெ
னப் பிரசங்கநுவலு வோனிவனெனக்கண்டவர் வியக்கவல்லோன்-முரு
குவிரிமலர் மாலைதுயல்வருதடம் புயன்முன்னு நற்குண விலாசன் - மு
த்தமிழுணர்ந்து திகழ்வித்துவசனங்களபுகழ் மொயத்தசவராயலுவரோ

சகலமுவிளங்கவொளிரிருசுடருமம்பரந்தாளணியெனப்புனைந்த-தத்
வநாயகியாறிரண்டுபெந்திருமுடி தரித்தவடவத்துதித்த, மகனெனுஞ்சே
சுவின்கைத்தாதை யெனநுவலும் வளனெனுஞ்சூசைமுனியின்-வள
மிகுங்கதியளித்திட வொளிருமறையாக மன்னுதேம்பாவணிக்கு, நிகரி
லா நன்னெறி செல்யூகிசெய கான்மகிபனிறை தவந்தனிலுதித்த-நிலவும
ழைபொழியுமுகிலென்னமுத்தமிழ் மாரிநிகழ்சரப்பொழியவல்லோன்
புகழலங்கார சவாரயலுகுணக்கடல் புரிந்து செய்திடுமுரைக்குப் புனி
தமிகுகாரைவாழ்பவர் விருந்துதவி நற்பூமாலை சூட்டினரோ ..........(௨)

---

### ம. ரா. ரா. தே-அந்தோனிமுத்துவாத்தியாரவர்கள

இயற்றியது.

சீரிலகுதண்டமிழ்க் கடலையுண்டருமறைக டேர்ந்திணையிலாக் குரவ
னைப்-செகமெலாம்புகழ் வீரமாமுனியுரைத்த தேம்பாவணிக்குத்தெளி
வுறப், பாரிலுரைகூற வல்லவரிலையெனப்பல்லோர் பண்பினொருவற்றரு

கெனப்-பரனிட மிரப்பவருளிய புதுவைநகரில்வாழ் பாக்யசெய கானா யகன், தாரிலகுதிண்புயப் புதல்வனிவ்வுலகிலுறு சகலகலைகளுமுணர்ந்தோன்-தவராதவாக்கி சவராயலுமகிபனைச் சகலருங்கொண்டாடவே, ஏர்பெருகு காரைநகர்தேவர்த்தநாதன் மகிழினியகவியந்தோனிமுத் - திருவிழியினாற்கண்டு பிரசங்கமுங்கேட்டிசைத்தபாவிஃதாமரோ (க)

சீர்வளர்தேவனமலசரோச நற்சேவடியை
ஏர்வளரப்பழிச்சுஞ் சவராயலுவென்னுமகில்
நார்வளர்தேம்பாவணிக் கடலுண்டுநரர்களென்னும்
பார்வளர்சூழ்தலையப் பிரசங்கப்பயம் பெய்ததே. (உ)

---

## இலக்கியவிலக்கணப் பாடசாலைஉபாத்தியாயராகிய நெடுங்காடு

## ம. ௱. ௱. ஸ்ரீ-ஆதிமூலபிள்ளையவர்கள்

### இயற்றியது.

காரேறுபூம்பொழிலுங் கமலமலர்த்தடம்பணையுங் கயற்கண்வேய்த்தோள், வாரேறுபூண்முலையாருலவுமணிமாடமு மாவணமுமல்குஞ், சீரேறு புதுவையில்வாழ் தாரேறுபுயச்சவராயலுமால்சீற்றத், தோரேறு புலவருக்கென்றறிஞர் வியந்திடிற் சிறியேனுரைப்பதென்னே. (க)

நலந்திகழும்புதுவைநகர்ச்செயகான்செய்தவப்பயனிந்நாளிலன்னான் குலந்திகழ வியலிசைநாடகமெனுமுத்தமிழுணர்ந்தோர்கூடுஞ்சங்கத், தலந்திகழச் சவராயலெனும்பேர்பூண்டுலகி லவதரித்ததென்னிற், புலந்திகழச்சுகுணனுறுபெரும்புகழையென்போல்வார்புகல்வதென்னே.

கானாட்சியுறுந்தொடையலணிவளவன் காவிரிசூழ்கடிநன்னாட்டில், வானாட்சியாயுறங்குஞ் சிரகிரிக்கண் குறுமுனிபோல் வாழுஞ்சீர்சால், மீனாட்சிசுந்தரதேசிகன்பால் முத்தமிழ்ப்பயின்றமேலோனென்றாற், கோனாட்சிகொளும்புதுவைநகர்ச்சவராயலுவேள் சீர்கூறுநீர்த்தோ. (௩)

கன்னிமரித்துணைவனெனுஞ்சூசையின்சீர்செந்தமிழ்க்காப்பியமதாக முன்னுரைத்தமா முனியே திருவருளா லிந்நாளிம் முந்நீர் சூழ்ந்த, இன்னிலத்திற்புதுவையின்கண் சவராயலெனும் பெயர்பூண்டெழுந்திட்டானே, என்னுரைப்பேனவன்புகழையியம்புதற் கென்னொருநாவுமிசையாதன்றே. (௪)

நாடனைத்தும் புகழ்வேத நாயகமாலாயிரநாப்படைத்தவாதி, சேடனுந்தென் மலைமுனியுஞ்சவராயலொண்புலமைத்திறத்திற் கொவ்வார் நாடிலென வுரைத்தனனல்மற்றையருந் தெரிந்த மட்டுநவின்றார் யானு, மீடவனுக்கவனென்றேன் கற்பனையொன்றறியேன் வேறென்சொல்கேனே. (௫)

---

தருமக்கல்விச்சங்கம்

## ம॰ ரா॰ ரா॰ ஐயாசாமிவாத்தியாரவர்கள்

இயற்றியது.

மூதாவாய்முச்சுடராய் மும்மண்டலத்திலொரு..................
நீதாவாயெவ்வுயிராய் நின்மலமாம் - நாதாவின்..................
றாளைமறவாத சவராயலுதாதாவிந்த..........................
வேளைமறவா திரங்கென்மேல் ..............................(௧)

உருவிற்கருப்புவில்லேந்தியவேளுக்குயர்ந்தவனற் .........
றெருளிற்பொதியமுனியினுஞ்சாலவுநதேஜனன்பே.........
ரருளிற்ககனத்துறையைந்தருவுக்கனையவனீ...............
பொருளிற்குபேரன் சவராயலு வெனும் புண்ணியனே...(௨)

கஞ்சமும் மதியும் நிகர்நின்முகங்கண்டபேர்கள்கலியகன்றேமே...
வஞ்சமும்பழியுஞ் சுமந்தேதிரிவாரைப்பாடியலைவதைப்பார்க்கிலும் ..
மஞ்சுமஞ்சுந்தருவஞ்சுவள்ளலேமற்றுன்னை முனைக்கினும்போதுமே
தஞ்சமாகவருஞ் செயகான்செய்மாதவம் விளங்கவருஞ் சவராயலே.(௩)

---

கும்பனிதமிழ்ப்பள்ளிக்கூடத்துத்தலைமை உபாத்தியார்

## ம॰ ரா॰ ரா॰ பொன்னுசாமிபிள்ளையவர்கள்

இயற்றியது.

காதலுடன்மோயீசன்வரவைமுன்னோர் காணவெதிர்நோக்கினர்போ
ற்காரைமாக்கள், ஏதனெனும் பொழிற்குநிகர் புதுவை மேவுமினியசவ
ராயலுவையெதிர்பார்த்தாதி, வேதனையேயீன்றவனைமரியையேவண்ட
வேளார்காணிக்கேகவிமலசூசை, மாதவனுக்கினியவன்றன்றன்னையங்க
ண்மகிழ்ச்சியாக்கண்டழைத்து வந்தாரன்றே..................(௧)

வந்தவர்களவற்குபசாரங்கள் செய்தவ்வளன் சூசைமுனிகைக்கோற்று
ளிர்க்கும்போதி, லெந்தைபிதாவாலயத்திலவற்செல்லோருமியற்றுது
திபோலிவற்கு முகமன்கூறிச், சிந்தையிருணீக்கியறம்பயக்குநன்னூ
ற்றிவ்யதேம்பாவணியின்சிறந்தபாவைச்,சுந்தரனேயுரையிடென வன்ன
வன்றன் சொற்குறிப்பைக்கண்டெவர்க்குமறிக்கையிட்டார் .......(௨)

இட்டமாயனைவோரும் வந்துலாயனொனும்ஞானப்பிரகாசனெழிலாரில்
லிற், சட்டமாத்தீபமிட்டுமாலைகட்டச்சங்கப்பிரசங்கஞ் செய்சமயமா
லைத் திட்டமாமணியேழுபுந்திவாரந்தேதிபதினறு செப்தேம்பர்மாதம்
வட்டமாமிரவிசுத்தெட்டெட்டுநாலும் வனைந்தபதினெண்ணாறுவருஷ
மாமே ..............................................(௩)

மாக்கள்புரிபவ மொழிக்கவுலகின் முன்னமானிடனுயுற்றுதுயருற்றுந
ம்மைக், காக்கவந்தகடவுளுக்குத் தாதையானகருணைவளன் கதைத்தே
ம்பாவணியைப் பல்லோர், பாக்களிலுஞ்சுருதியிலும் பாரின்முன்னோர்

பகர்ந்திடும் பன்னூல்களிலும் படாநாமிட்டு, வீக்கமுறு புகழ்ச் சவ்ராயலு
பூபாலன் விசாங்கவலை தீதாறு லகம் வியப்பநன்கே (ச)

கட்கொண்ட நீருண்டுவனின்றுசொரிகின்ற கருணைபோற் கருதியெ
னுந கலையுமிலங்குகின்ற நகரின்வழு நிலைநின்றுகதிசென்றுவாழ்வு பெ
றவேவபார்கொண்டபளமெல்லாம் நேர்கொண்டபுதுவைவாழ்பாக்ய செயகா
ரையசன்- பண்புபெறு சமசனிலின்ப முறவந்த நற்பாவலன்சவராயலு,
சீர்கொண்டநறுமண்டு தெருணின்றகவிகொண்டு செய்யும்பிரசங்கமாரி
செகத்தைசக்குளிர்த்து நம்மனத்தை தகுளிர்த்தறஞ் சீருறவிளக்கினதினா
ல் ஏர்கொண்டமன்னவன் சிர்கம்பிகல்கொண்டசைக்க வென்றெலாகு
மொழியினியகல்விச் செல்வமோங்கிவாழநற்குண மிலங்குமிச்சபையோர்
களே .............. .................................... (ரு)

நீர்மலிவடக்கியருணீக்கி யுலகாக்கியொளிதிருபிக்குமமலன்றனை - நி
லையிலாதன்றேவை கொண்டேகெதகலயிந் நீணிலந்தனிலளித்த- நித்ய
பரிபூரணசுசிலபுண்ணிய வமலர்நேயமொடுபணியவோங்கும்- நிலவுபா
னும்புனைந்தெவ்வரமுமேபூண்ட நிமலியருள்வாய்ந்த புண்யா, சீர்மலிவு
தங்கொளிரு மதிலசயமகனேதீ னேபுதுவைநகர்வாழ்- செயகாவெனு
ஞ்சுகுண நிபுணன் செயமாதவச்செல்வனே கலைவலோனே-தேர்ந்தநம்
வீரமாமுனிவன்பகர்ந்த செந்தேம்பா வணிக்குணாசெயுஞ்-செந்தமிழ்ப்
புலவனேவலவனே நாவலர் சிரோமணியெனுஞ்சீலனே-பார்மலிந்தோங்
கு துரைமார்களசெய் துதியனே பன்னுநாவலர்நிதியனே - பாவாணர்நா
வேறி விளையாடுபுனிதனே பகர்கொதேலாண்டவருடன் -பத்தியுறுசத்ய
வேதியராசிபெற்றேருங்குபாக்யனே யதியோக்யனே-பன்னுசெம்பொற்
றகடுமலர்மாலையொடுபுலவர்பா மாலையணிதோளனே, தார்மலிபொழிற்
காரை மாநகரின்வாழ்ந்தறைதி பரலைழக்கவந்து - சத்யவேதார்ப்புதமிலங்
கப் பிரசங்கஞ்செய்சவராயலாஞ்சுகுணனே - சந்தானகுருவெனவிளங்கு
மாவீரமுனிதானெனவிளங்கியென்றுஞ் - சகலசம்போகபாக்கியசெல்வ
மொடு நீதழைத்துமேன்மேலும்வாழ்க ..................... ( சு )

---

தமிழுபாத்தியார்

## ம. ௱. ௱. ஞா-ஆரோக்யம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

தருமகுணலாயமொனுஞ் சம்பன்னன் காரையில்வாழ் சதுரன்வாணர் . . .
அருமையறிந்துதவு ஞானப்பிரகாசப்புனித னழகாரில்லின் . . . . . . . . .
வருமறிஞ ரோடெவருமகிழ்ந்திடவும் பூதுறத்தேம்பாவணிப்ப்ரசங்கம் . .
பெருமையுறச் செயுஞ் சவராயலு நாயகற் கிணையார்பேசுவீரோ . . . . (க)

---

அவக்கா இராயப்பிள்ளைகுமாரர் உபாத்தியார்

## ம. ௱. ௱. அண்ணுசாமிப்பிள்ளையவர்கள்

இயற்றியது.

திங்களணிந்தவண்மகனேதேவனெனப்பலமதத்திற்சேர்ந்துளோருஞ் சங்கையறத்தேர்ந்துய்யத் தமிழ்ப் பிரசங்கஞ்செய்யுந் தகைமையுள ளோன், தங்கமுறு புகழ்பெற்றதூயசவராயலுமால்துலங்குஞ்சாரை,யெ ங்கு மெழிற்பாமழையையினிதாப்பெய்ததற்கென்கைம்மாறே (ச)

---

அவோக்கா

## ம. ஈ. ஈ. அ-தனக்கோடி-முதலியாரவர்கள்

இயற்றியது.

தூயராந் துப்பிசுவாமி சுகுணநஞ் செயகானீன்ற..........
சேய்சவராயலுக்கோர் திவ்யநற்புகழ் பொறித்து..........
நேயமோடளித்த தேம்பாவணியு மிந்நிலத்தோர்தந்த......
தாயபொற்றகடும் வானமணியிரு சுடர்க்கொப்பாமே.... (க)

பாரினிலுயர் பரீசுபட்டணந்தனிலச்சிட்ட.....................
சீர்ஒவிதுய் மோந்த் கொலோனியால் சிறந்தபுத்தகத் தின்மிக்க.....
பேர்பெறுமொமோர்க்கொப்பென்று பெருமையாயிவனைச்சொற்ற...
தார்புயமன்னர் வாய்க்குச் சக்கரையிடவேண்டும்மே............(உ)

பொன்பரவுவெண்கதிரிலங்கு மாமணிகள் வளர்பொற்புறுந் தண்பணைகள்சூழ்-புகழ்பெற்றபுதுவையம் பதியுற்றமாப்ரபலப்ரபுடீசபுண்யரூபா, பொன்வரைப்புயசிங்க மெனவிளங்கிடுதுங்கபுனித சவராயலுகுரு-பூமிபுகழுஜீதகனதனயோகபோகனே புகலுமொழியொன்றுகேண்மோ, பொன்மை நிறை தோகைமயி லியலினுள கயனயனபூந் தரளவடமுலையினுள்-பூஜீதப்பதுமதளவதனவனநடையினுள்புருடர்ப்ரமைகொளுமெழிலினள்; பொன்வளர்விலாசமண மடமாது நினைமரீஇப்போகிக்கமாலாயினுள்-போகபதியே யிவட்புணர நீயருள் புரிவைபூபால துரைவள்ளலே.......................................(ந)

சீர்கொண்ட கமலமலர் வாவியுஞ் சோலையுந்திகழ் மாடகூடங்களுஞ்-செறிபுதுவையம்பதியி லமலனருளோங்கிவாழ் ஜெயசுகுண புனிதசீலன்-தீரகெம்பீர பரதாரசோதரனெனது சிந்தைக்குவந்த மித்ரன்-செப்புமுத்தமிழெனுங்கடலுண்டு கவிமாரி தீதறப் பொழியுமேகம், ஏர்கொண்ட புலவர்புகழ்சவராயலென்னவே யிசைகொள் பேராண்டகைக்கே-எழில்வளமிகுந்தொளிர் செய்காரையம்பதியினிலிருக்குந்தனக்கோடியான்-இன்பநிறையன்பினேடெழுதுவாசகவிபரமென்ன வென்றுலிப்பவும் - இவ்விடத்தியாவருஞ் ஷேமமவிடத்தியல்பை யெழுதிடக்கோருகின்றேன், பேர்கொண்டிலாதபுன்கவிபாடுமொப்பற்ற பேதையாமருளப்பனென்-பேரினிற்றுதிகவிகள்பாடினனக்கவிகள் பிழையுடையவென்றறிந்தும்- பெருமைபாராட்டி யிருபதுவராகன் வரையில் பேசுமின்சொல்லினேடு -பெறுகென வளித்தனது பற்றுதெனக் கருதிபேயெனவெகுண்டுசீறிப், பார்கொண்ட புகழிலாத்தீயருரைகேட்டு வசை

பாடினனச் செயகிறற்-பன்னரியகாவலொடுமல மூத்திரங்களும்பகர் கொசுகு முகடெழும்பும் - பறையரு நிறைந்தடாணச் சாவடிக்குளப் பாதகனிருக்கின்றனன்- பாங்குபெறுமிச்செய்தி நமது நேயர்களாதிப லரோடு நீ யதிகவே..........................................(௪)

குலமகளிராசம்மாள் விழிக்கணியாப் பொருட்கேற்பக் கொடுக்கும் போக, விலைமகளிர் கொடுவஞ்சவிழிட்பகையாப் பாகூரில் விளமுப் போக, நிலமகளுக்கோரரசாய் மலர்மகளுக்குறையிடமாய் நிறைவுற் றோங்கும், கலைமகளுக் கெழிலாவானுஞ் சவராயலுநாமக்கவிஞரேறே.

---

## ம. ஈ. ஈ.பொ-பிரபலநாதப்பிள்ளையவர்கள்

### இயற்றியது.

காவிருக்குமெழிற் காரைலாயமென்னு ஞானப்ரகாசனில்லிற்.........
பூவிருக்கும்புகழறிஞர் சரசிரகம்பிதஞ் செய்துபுகழ்ந்துபோற்றப்...
பாவிருக்குந்தமிழ்த் தேம்பாவணிக்கும் பன்னூற்குமுரை பகர்ந்தான் கற்றோர், நாவிருக்குநம்புதுவை வளர்சவராயலுநாமநாவலோனே...(௧)

---

## ம. ஈ. ஈ. இராமசாமிஉபாத்தியாரவர்கள்

### இயற்றியது.

திருவார்காரைமாநகரிற் செல்வன்சுப்பராய னில்லிற்...............
பொருவாவாய்மை யரிச்சந்ரன்புகழார் கதையையந்நகரின்..........
மருவாவலவருடனெவரு மகிழப்புதுவை நகர்செயகான்............
தருவான்சவராயலு நாமச்சதுரன் பிரசங்கித்தனனே.............(௧)

---

தரங்கம்பாடி கத்தோலிக்குரோமான் கிறீஸ்துவர்களில்
தலைமைப்புலமைநடத்தும்உபாத்தியாயர்

## ம. ஈ. ஈ. பி-கண்ணுசாமிப்பிள்ளையவர்கள்

### இயற்றியது.

மணியாருமவுலிபுனை தவிதரசன் றேசுரமண்டலத்தான் - மகிழமல ருண் மறைப்பாற் கடலினிடை மதியெனு தன்மத்தைநாட்டிக், கணி யாருந்தவவீர மாமுனிவன் மிகவிரும்பிக் கடைந்தெடுத்த - கனமதுர வினியவமுதத்தைநயந் தமிழ்ப்பாக்கள்கவினுறுபல்ல, அணியாருஞ்சு வைரசத் தேம்பாவணியா மெழிற்கடத்திலமைத்து வைத்தான் - அத னைமடமாதர் நடங்கண்டுமயிலகவு புதுவையின் கண்வாழும், பணியா ருங்கவியெனக் கொளப்புயன்சவராயலு நாமம்படைத்த மேலோன்- பன்னுபிரசங்க வள்ளத்தாற்புலவர் செவிவாயிற்பாய்வித்தானே...(௧

உத்தமனும் வீரமுனியொண்கிரியினிற் றோன்று..........
மத்தமியாத் தேம்பாவணியெனுமா - தித்தனை நாம்........
கூசாமற் பார்க்கக்கொடுத்தான் சவராய.....................

லாசானேத்தேவனமைத்து ........................................(உ)

மின்னுலவுபரிதிமதிமீன்பயொதரமெலாமிருபாரமாகுமதனுன்-விசு
ம்பிடித்தாற்றனது மகர்மடிவனெனவுட்குமேதினிப்பெண்காதல-மேற்
றுங்கலொத்துயர்ந் தோங்கணிசிறந்தரண் விளங்குநற் பொன்மைமதி
ல்சூழ்-வியன்றரங்கம்பதிவளம்பெறவெழுந்தருளுமீன்மகுடகதிரம்பரி,
நன்னிலவுமேன்மலர்பதாம்புயச்செபமாலே நாயகியினுலயத்தில்-நவிலு
முயர்திருவிழாவினிற்றவநிறைந்தமெஞ்ஞானக்குருப்ரசாதிநனிமகிமை
காயிரியல் தொர்காராஞ்சுவாமிகளினயமுலவுசமுகமதிலிந் - நகர்வளர்கிறி
ஸ்துவர்கள் பரமதஸ்தர்கள் பலருநண்ணு சங்கத்திநுக்குப்-பன்னல
நிறைந்துவளர்புதுவை செயகானுதவுபரிதிநேர்சீர்த்தியுடையான் - பன்
னிலக்கண விலக்கியவாரியுண்ட நம்பாவலன்சவராயலு-பரன்வேதபாலா
ழியுண்வீர மாமுனிப்பண்புமுகில் பொழியமுதெனும்-பார்துதிக்கின்
றதேம்பாவணி விருந்தெனப்பகிர்ந் தளித்தானருந்தப், பொன்னுலகி
ராக்கினியுமாகாய விரிவினிற்பொந்ததரிசனமாகவே - புக்கணேயவவள
பொனடியமுதகிரணனு மவுலிபொங்குதாராக்கணமதும் -புகழ்பெறுப்ர
சங்கப்ப்ரபலகவீசுரவிபுவின் புனிதகுண வினிமையெனவே - பொலிந்
தனவிருந்தமுதி லமுதஞ்சொரிந்தெனப் போற்றிஞானவோருமே(௩)

தேம்பாவணிப் ப்ரசங்கத்தாலஞ்ஞானத்தி மிரமது.........
தேம்பாவணி மிகவுட்டாமரையாஞ் செழுமலர்கள்..........
தேம்பாவணிசெய் திசையின்மரியுடைசீர் மையினல்........
தேம்பாவணிபான் சவராயலுவெனச் செப்புதுமே.......(௪)

எற்பராபரன்வேதச் செழும்பொழிலிடத்துவீர முனியெனுஞ்சற்குரு
வற்புதப்பொருளாகும் பயன்மலராய்ந் தெடுத்துத்தெம்பாவணியாக்கி
னன், பொற்பதைச் சவராயலுப்பாவலன் பூண்டுபூண்பவர் பொன்னில
நன்மணச், சற்ப்ரசாதகல்யாண விருந்தினிற்சாருநன்மை விளங்கச்செ
ய்தானரோ ..........................................(௫)

---

திருமலேராயன்பட்டணத்துக்கும்பினிப்பள்ளிக்கூடத்துத்
தமிழ்த் தலைமைப்புலமை நடாத்தும் உபாத்தியாயர்

## ம. ஈ. ஈ. ச - ஞானப்பிரகாசம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

கந்தரந்தோய்காவெழிற்சூழ் புதுவைவாழுங் கௌரிகோத்திரன் செய
கான்றேன்றல்வானர், சந்திரபாதத்தி யருணீழனீங்காச் சவராயலுக்க
விஞவருள் வேதந்தான், சுந்தரவோருருவமைந்த சூசையென்னுந்தூய
முனிசரிதவமுதத்தை யிங்க,ணந்தரமிலின்புறவெஞ்செவிவாயூட்டுமாதர
நின்மகிமையெம்மா லறையப்போமோ...............................(க)

சுலவுதிரையுவர்க்கடனீரருந்தியிங்கண்வேமுகிற்கேதுறு கைம்மாறெ
ல்பாரோ, லுலகமுவப் பிற்புகழோர்முனிவன் சொன்னவுயர்தேம்பாவ
ணியமிர்தவுததிதன்னே, இலகுமுள நிறையவுண்டு தாவாற்பெய்தேயெ

ஞ்செவிவாயினி தூட்டி யெமதான்மாவு, மலகில்சுபமருவவருள் சுரந்த நிற்காமருங்கைம்மாறெவனறைதியழகியோனே...............(உ)

பம்மின்னூர்தருவான்சூழுலகனைத்தும் பரிந்தீந்தாதரித்துவக்கும்பர மனன்னூ, டம்மன்பாரிசரோலர் பசியான்வாடத்தகுமன்னவன்னூர்துய்த்தி டவளித்தா, னம்மன்னூசெயகான்வேடவத்திற்றேன்றுநலந்திகழுமெழி ற்சவராயலுபூபாலா, வம்மன்னூநின்மன்னூ வினிதினூற்றுமருண்மறை த்தேம்பாவணிப் பாவமிழ்திற்கீடோ........................(௩)

சந்தமார்கௌரிகுலத்தினன் செயகான்தவத்தவதரித்திடுகவிஞன், விந் தைசேர்செம்பொற் றகடணிபுயநம்விறற்சவராயலுவேந்தாஞ், செந்த மிழ்ப்புலவனின்னரும் புகழைச்செப்பிடாச் சிற்றறிவினரைச், செந்த மிழ்ப்புலவரெனவறிவாளர் செப்புவரிழிவுறமாதோ............(ச)

செஞ்ஞீலமதர்த்தடஞ்சூழ் புதுவைவாழுஞ்செல்வ சவராயலுபூபதி யேநீயே, வஞ்ஞாலத்தோர்க்கினியவமுதமென்னுமாரணத் தேம்பா வணியையார்க்குமோதி, யஞ்ஞானவிருளகற்றிச்சேசுவென்னுமர்புதனை யெப்பொழுதுமருச்சித்தற்கிம், மெஞ்ஞானப்பிரகாசவேந்தனென்னும் விற்பனன்வாழ் பொற்பகமெ மேலாமன்றே..................(ரு)

---

## ம.ா.ா. நாகைமுத்துப்புலவரவர்கள இயற்றியது.

மலைமானூங் கொரிகுலச் செயகானீன்ற மன்சவராயலுவெனும்பூபதி யே நீயே, கலைமானை நாவிருத்தவிதியன்னமிறங்காதுகமலத்துற்றுன் அலைமானின் வயினுறவே மாலாகி யரிமண்ணை யள்ளியுண்டான், தலைமானின் புகழெவரோதேற்றமுறச் சாற்றவல்லார் தருமவானே..(க)

---

## நாமக்கல் ம. ா. ா. இராமசாமிஜயரவர்கள் இயற்றியது.

சிந்துடன்பதமுஞ் செய்யவண்ணமுஞ் சித்திரக்கவியும்லுத்தர்மேற் சொலி, நொந்துநெஞ்சமிகவுடல் சொக்கியேநோய்கொண்டே திரிந்தீ ர்பயனென்கண்டீர், கந்தமேவுபொழிற் புதுவாபுரிக்காவலன்செயகான் செய்தவத்தினூல், வந்தசுந்தரனூஞ்சவராயலை வாழ்த்துவீர்போற்றுவீர் கவிவாணரோ..........................................(க)

---

## நாமக்கல் பாட்டகர் ம. ா. ா. சாமிஜயரவர்கள் இயற்றியது.

குலந்தவவாய்மை நெறிசாத்துவித குணமொடுநன்.............
நலந்தருமேன்மையுறுஞ் சவராயலு நாயகன்றன்...............

பொலந்தரு கீர்த்திதனைக்கேட்டிமயப்பொருப்புருகி ..........
வலந்தருமீசன் கைவில்லாயிருப்ப வணங்கியதே............... (க)

## முசறி ம. ா. ா. சேதுஐயரவர்கள்
### இயற்றியது.

கடுத்துத்தரவொன்றுஞ் சொல்லாமனுவலர் கைநிறைய...........
எடுத்துத்தனத்தை வதனாரவிந்தம தின்புறவே...................
கொடுத்துப்புகழ்பெறு நஞ்சவராயனுகோமனையை................
அடுத்துத்திரிபவர்க் குண்டோவறுமையணங் கரசே.............(க)

## சேலம் ம. ா. ா, நாராயணசாமி நாயகரவர்கள்
### இயற்றியது.

செல்லுக்கட்டு மட்போலும் பணங்களைச் சிக்கெனத்தேடியுண்ணவு லோபர்மேற், சொல்லுக்கட்டுறவண்ணங்கள்பாடியேசோர்வுற்றேமன ஞ்சோரும்புலவரோ, கல்லுக்கட்டரண்சூழ்புதுவைச்செயகான்தவச்சவரா யனுபாற்சென்றுன், மல்லுக்கட்டிவேண்டாமென்றாலும் பொன்னைவா ரிவாரிமகிழ்வாயளிப்பனே ...................................(க)

## சேலம் ம. ா. ா. இராமசாமிவாத்தியாரவர்கள்
### இயற்றியது.

கானறுமின்மலர்ச் செந்தொடை—யினுன் கன்னனென்னவழங்குங் கொ டையினுன், மாநிலம்புகழ் தொண்டை நன்னாட்டினுன் மருவுங்கீர்த்தி யைத் தான்மகிழ்ந்தீட்டினு, னீனமாம்புன்கலியைத்துரத்தினு னிலகுந ஞ் செயகானின்வரத்தினுன், றுன்வருஞ்சவராயனு நாமப்பேர் தழைக்கவ ந்தருள் கற்பகத்தாருவே..................................(க)

## பட்டாம்பாக்கம் ம.ா.ா. சுப்பராயவாத்தியாரவர்கள்
### இயற்றியது.

மாவேறினு னிந்திரன் கயிலாயமயேசுரன்றுன்............
சேவேறினுனரிபுள்ளேறினுன் செய்யவாவிகளிற்..........
பூவேறு தென்புதுவைச் சவராயனுபுத்தமுதப்..............
பாவேறுவாணர்கணுவேறினுனென்று பார்க்கவென்றே....(க)

## மாயூரம்வண்டிக்காரத்தெரு
## தாசி பெ-குப்புஎன்பவள
### இயற்றியது.

ஆமலியும் வயற்புதுவை வளர்செயகான்றவத்திலெழுமருமைமைந்த,

ஞமலியுநற்சவராயலு புலவனியற்றியநற்கவியைக்கேட்டுக், காமலியுந்
தென்றன்மலைக் கும்பமுனி சிரமசைக்கக்கண்டாலெல்லாம், பாமலியும
வன்புலமைக் கிவன்புலமைபெரிதெனவேபழிச்சுவாரோ..........(க)

சங்கினந்தவழுங்கழனி சூழ்புதுவைத்தனிநகர் மருவியசதுரன், பங்
கமில்செயகான் றவதெழுஞ்சவராயலு புலவன்பகர்கவியைத், துங்கவ
ண்ணனந்தன் கேட்டுளந்துடித்துத்துயலொலாமழுந்திடப்பிலத்திற், றங்
கினனென்றுற்றறையுளோர்புகழத் தகுதியோபுலமைசான்றவரோ. (உ)

புண்ணியப்புதுவை வளர் செயகான்றன் புதல்வனுமுலகெலாம்போ
ற்ற, நண்ணிய சவராயலுபுலவன்முனவின்ற சீர்க்கவிதனைக்கேட்ட, த
ண்ணியவெண்டாமரையில்வாழ் மகளுந் தனதுடல்விளர்த்துடனெழு
ந்தே, திண்ணியமொழியாற் சபாசென வுரைத்தாட்டினைக்கட லுலகர்
சொல்லுவதென்..........................................................(ங)

மதியுறுபுலவர்சிரோமணியா மீனாட்சிசுந்தரமகிபாலன், கதியுறுமிந்த
க் கவிச்சிறப்புரைக்கக்கடவனேவென்றனன்களிப்பாய்த், துதியுறும்புது
வை வளர்செயகான்றன் றூய்யநற்றவத்தினிலுதித்த, விதியுறுஞ்சவராய
லு முகினவின்ற வித்தககக்கவி சிறந்தன்றே..........................(ச)

நாட்டிலிருக்கிலந் நாட்டார்சொல்வார் நன்னலந்திகழும்......
வீட்டிலிருக்கிலவ் வீட்டார்சொல்வாரன்றி வேறிலையென்.....
றேட்டிலிருக்குஞ் சவராயலு மன்னிரும்புலவர்ப்...........
பாட்டிலிருக்கின்றனன்யாருமேதுதி பண்ணுதற்கே ......(ரு)

# நேயரே

மகா - ௱ - ௱ - வித்துவான் செ. சவராயலுநாயகர் தேம்பாவணியை யும் அனேகம்பிரபந்தங்களையும் நன்குதெளிவாப்பிரசங்கித்ததைக் கேட்டு மகிழ்ந்த சத்தியவேதபோதகர்களாகிய சங்கைக்குரிய தூய இராஜரிஷி குருசுவாமிமார்களும் இப்புதுவைவாழ் கற்றோர்மற்றோர்யாவருந் தங்களுக்கு அப்பிரசங்கத்தின்மட்டில்உண்டான ஆனந்த சந்துஷ்டியை வாடாமாலையாப் பிரதாபரூபப்பவளக்கோர்வையாக்கிப் பொன்மலரிட்டு ரத்நகஜிதஞ்செய்து தங்கள் தாற்பரியத்தைப்பொறித்தசுவர்னத்தகட்டிற் பதித்துச் சென்மவிராக்கினிமாதாகோயில்முன் இன்றுசாயந்திரம் ஆறுமணிக்குச்சிறந்தமேற்றிராணியாராகிய ஆண்டவரின் திவ்யகரத்தால் நம்முடையகுவர்னர்முன்பு ஷை சவராயலுநாயகருக்கு அணிவித்துப் புதுவை காரை திரிசிரபுரம் சேலம்முதலியபதிகளிலுள்ள கவிச்சக்ரவர்த்திகளால் அவருக்கு அணியப்பட்டிருக்கும் நலங்கா அலங்கலாகிய உன்னதசாற்றுக்கவிகளைப் பிரசங்கஞ்செய்விக்கப் போகின்றதைத் தாங்கள் தயைசெய்து வந்திருந்துசிறப்பிக்க நிரம்பவுந் தங்களைப் பிரார்த்திக்கின்றோம்.

புதுவையில் ௲அகூக-ம் ஆடு முவேன் மீ கூஉ

இங்ஙனம் இராசேந்திரம் பொன்னு. ஞா. ஆனந்தராயன்.

## சத்யவேதபக்தியுடையீர்

இம்மாதம் - ௨௮-ம் ௳ ஞாயிறுவாரங்காலை - ௯ - மணிக்குப்பாகூர் செயராக்கினி மாதா கோவிலை மிகவும் சங்கைக்குரிய நம் ஆண்டவர் அபிஷேகஞ்செய்து நடாத்துந்திவ்யபூசைக்கும் அன்று மாலை நடக்கும் இரத உற்சவத்திற்கும் தாங்கள் குடும்பசகிதராய்வந்து சிறப்பிக்கதிரம்பவும் பிரார்த்திக்கிறேன்.

௲௮௯௯-ம் ௵ ஜனவரி ௴ ௨௫ ௳

இங்ஙனம் பாகூர் கிறீஸ்துவர்களுக்காக செ. சவராயலு.

## பாகூர் தேவாலயவிருத்தாந்தச் சுருக்கம்.

செயகான்நாயகரால் முப்பதுவருஷத்திற்கு முன்பாகூருக்குஉத்யோகராவனுப்பப்பட்டவர்மருகர் சஞ்சீவிசெட்டியார் அவ்வூரார்களுக்கு மெத்தவு முதவிசகாயங்கள செய்தும் பலவினோதங்களைக் காண்பித்தும் வருவர். இதனாலிவர்மட்டிலவர்களுக்கதிகபிரிய முண்டாயிருந்துமவரனுஷ்டிக்குஞ் சத்தியவேதமொன்றைமட்டு மவர்கள் விரோதிக்காமலிருந்ததில்லை. அஃதென்னெனில் அவருடையமூன்றுவயதுள்ள தாயம்மாளென்னு மேகபுத்திரி -௲௮௪௯-ம். ௵ பெவுறியே ௴ ௨௮௳ மங்கலவாரம் மோக்ஷானந்தமடைந்தபோது அம்மாசற்றபிள்ளையடக்கஞ்செய்யவவர்களதிவிக்கினஞ்செய்தார்கள். அவர் அவர்களுக்கஞ்சாமலதையவ்வூரிற்றானே புதைத்து ஐந்துநாள் வரையிலவ்விடத்திலவரே காவல் காத்துக்கொண்டிருந்தார். பின்பவரவ்விடத்திலோர் கல்லறைகட்டவேண்டிக் கொடுக்கும் விண்ணப்பங்களை யவர்கள்பலதரந்தடுத்தும் துய்காம்பேர் என்னுங் குவர்னர் துரை -௲௮௪௪-ம். ௵ முவேன் ௴ ௭௳ இருபதுகுழி நிலம் கல்லறைக்காகக் கொடுத்தனர். பின்பு ஷை செயகானயகரின் குமாரர் முத்துச்சாமிநாயகரு மங்கேயடக்கம் பண்ணப்பட்டதால்கிறீஸ்த்துவர்களுக்குள்ளபேரிடுக்கமொழிந்தது.

இதற்குப்பின் ஷை செயகானயகரினிளைய குமாரராகிய சவராயலுநாயகர் அவ்வூர்ச் சிவன்கோவில் வீதியிலோர் வீடுகட்ட வாரம்பித்தபோது ஷையார்கள்மெத்தவுமிடையூறுகள்செய்துஅவர்வாசற்படியில் வைக்குந்திருக்குருசை மூன்றுதரமுடைத்துப்போட்டார்கள். கடைசியாய் பெருஞ்செலவில் வீடுகட்டப்பட்டது. இவைகளைக்கண்ட ஷை நாயகரிவ்வூரிலோர்தேவாலயமிருந்தால் மிகவு நலமென்றெண்ணிஅவ்வூர் நடுவிற்பாழாக்கிடந்தவோர் பெருமாள் கோவிலைச்சேர்ந்தசிறிது நிலத்தைக் கொடுக்கும்படி யதற்கனுபோகசுதந்தரவாளர்களான-ஞா-அண்ணுசாமிப்பிள்ளையை துரைசாமிப்பிள்ளையை நிரம்பவும் பிரார்த்திக்க வவர்களதை யவர்பேருக்கு ௲௮௬௰ ௵ நொவாம்பர் ௴ ௧௭௳ நன்கொடை

யாகக் கொடுத்தார்கள். அதையவர்சற்கார்தஸ்திரங்களிற் பதிப்பித்ததை யவ்வூராரறிந்தபோ துண்டான குழப்பங்கள கொஞ்சமல்ல. அச்சமயத்தில் சவராயலு நாயகர் மிகவுஞ்சங்கைக்குரிய புரோவிக்கேர் துய்ப்பிசுவாமிகளிடத்து நிகழ்ந்தவையாவு மறிவித்தவராசீர் வாதத்தைப்பெற்று கொண்டு ஷ பெருமாள் கோவிலையு மதைச்சேர்ந்த-அஉஊ-குழி நிலத்தையுங் கிறிஸ்துவர்களுக்குக் கொடுக்கும்படி ஷ ஆ-ஷ மீ உஅஉ விண்ணப்பங்கொடுக்க தூய்ரான் துபுராய் குவர்னர்துரை-தூஅசுக ஆ ஜான்வியே-மீ ருஉ அப்படியே கிருபைசெய்தார். அக்கோவில் இஞ்சினீர் சுயார்துரையா லிடிக்கப்பட்டது. அப்போது மிசியத்தில் புரொய்க்குரோ ராகவிருந்த சங்கைக்குரியரி ஷோஞ்சுவாமியார் கொடுத்த பணத்தைக்கொண்டு ஷ நாயகர்-ஷ ஆ அவ்ரீல்மீ அஉ இத்திருப்பணி வேலையை யாரம்பிக்கஷ ஆ முலேத்து மீ சு-உ சனிக்கிழமை காலை-எ-மணிக்குச் சங்கைக்குரிய தெலெயாழ் சுவாமியார் செழுங்கரத்தால் கோவிலஸ்திவாரம் போடப்பட்டது. அவருக்கிருபுரமுஞ் சங்கைக்குரிய பல்கு சுவாமியாரும் பிறியேர்சுவாமியாரு மிருந்தார்கள். ஷ கோவில் பிளான் ஷ தெலெயாழ் சுவாமியாரா லமைக்கப்பட்டது. தூஅசுரும்ஆ மேமீ ககஉ சுக்ரவாரங்காலை-எ-மணிக்குச் சவராயலு நாயகர் கோவிற்சிகரத்திற்றிவ்ய திருக்குரு சாரோகணஞ் செய்தார்.

இவ்வகையில் நினைத்தகாரியஞ் செயமானதாலும் இதற்கு முதற்காரணமானவர்செயகாருயசராகையாலும் சவராயலு நாயகர் அதற்குச் செயராக்கினிமாதா கோவிலென்று பேரிட்டுத் தம்குமாரன் செயராயலு உயரத்தில ஓர் செயராக்கினிமாதாசொரூபஞ்செய்து அத்தேவாலயத்திலமைத்து அதற்குப்பாமாலைகளணிந்ததுமன்றி அபிஷேகப் பிரார்த்தனமென்றோர்விண்ணப்பமெழுதக் கிறீஸ்துவர்கள்செய்தவுதவியால் மகாவாடம்பரத்துடன் தூஅசுசு-ம் ஆ ஜான்வியே மீ உஅஉ ஞாயிறுவாரங்காலை -எ- மணிக்கு மேலானகொதேலாண்டவரின் திவ்யதிருக்கரத்தாலாலய மபிஷேகஞ்செய்யப்பட்டுஅவராலதிற்றிவ்யபூசையும் நடாத்தப்பட்டது.அப்போது தாவீதுநாதசுவாமியார் நல்லபிரசங்கஞ்செய்தார் அன்றுசாயந்திரம் இரதவுற்சவம்அதி சிறப்பாநடந்தது.சங்கைக்குரிய தாராஸ்சுவாமியாரும் பல்லிசுவாமியாருமிருமருங்குற மகாமாதவரான மதியென்சுவாமியார் திவ்விய நற்கருணையாசீர்வாதங்கொடுத்தனர்.

பின்பும் ஷ யூராரோர் கரகத்தையெடுத்துக்கொண்டக்கோவிலையெதிர்த்துப் பெருங்கூட்டமாவரச் சவராயலுநாயகர் தடுக்கநேரிட்டசண்டையால்போந்தான்குவர்ன ரவர்களை மிகவுந்தெண்டித்ததாலுமவர்களவரைப் பலவழியிலும்பழிவாங்கவொன்றித்துமவர்ஷ செயராக்கினிமாதாவின்பே ரருளாலவ்வூரிலிதுவரையிலு மிரட்சிக்கப்பட்டிருக்கின்றார்.

தூஅஎய-ம் ஆ.

# சவராயலு நாயகருக்கு

பிராஞ்சிலுந் தமிழ்ப்பாடலிலும் அத்தாட்சிப்பத்திரமுதலியவை
கொடுத்திருக்கும் பேர்வழிகளின்

## அட்டவணை.


| பெயர்வழிகள். | தொகை. | பக்கம். |
|---|---|---|
| கோதேல் ஆண்டவர்........................ | ௧ | ௩ |
| தெப்போமியே ஆண்டவர்.................... | ௧ | ௬ |
| துய்ப்பி சுவாமியார்...................... | ௧ | ௪ |
| ஷெயார்.................................. | ௧ | ௭ |
| குய்யோஞ் சுவாமியார்..................... | ௧ | ௫ |
| ஷெயார்.................................. | ௧ | ௫ |
| மோறி சுவாமியார்......................... | ௧ | ௧௯ |
| தசீஸ் சுவாமியார்......................... | ௧ | ௬ |
| கால்கன் சுவாமியார்....................... | ௧ | ௨௨ |
| பர்பே சுவாமியார்......................... | ௧ | ௬ |
| போலார் சுவாமியாரர்...................... | ௧ | ௨௧ |
| திரியோஞ் சுவாமியார்...................... | ௧ | ௯ |
| பெர்ழேஸ் சுவாமியார்...................... | ௧ | ௭ |
| உய்க்கார் சுவாமியார்...................... | ௧ | ௮ |
| ஷெயார்.................................. | ௧ | ௮ |
| தொகாரோஞ் சுவாமியார்.................... | ௧ | ௭ |
| அருள்நாத சுவாமியார்...................... | ௧ | ௯ |
| ஷெயார்.................................. | ௩ | ௫௭ |
| அந்தோனிநாத சுவாமியார்................... | ௭ | ௫௭ |
| தாவீதுநாத சுவாமியார்..................... | ௨ | ௫௮ |
| ஞானப்பிரகாசநாத சுவாமியார்............... | ௧ | ௫௮ |
| மரியப்பிரகாசநாத சுவாமியார்............... | ௧ | ௫௯ |
| லோது துரை.............................. | ௧ | ௨0 |
| தஸ்கோனுகேர்துரை ....................... | ௧ | ௨௧ |
| வேன்சோந் துரை.......................... | ௧ | ௨0 |
| ஷெயார்.................................. | ௨ | ௫௯ |
| தெலாபோன் துரை......................... | ௧ | ௧0 |
| எ[illegible]ரி துரை ......................... | ௧ | ௨௩ |
| பபிக் துரை.............................. | ௧ | ௨௪ |
| றெஞ்ஞே துரை............................ | ௧ | ௧0 |
| தம்பிப் பிள்ளை .......................... | ௧ | ௧௧ |
| ஆனந்தராயப்பிள்ளை........................ | ௧ | ௨ |
| இராசேந்திரம் பொன்னுபிள்ளை } .............. | ௧ | ௧ |
| ஆனந்தராயப்பிள்ளை......... } .............. | ௧ | ௯0 |

| பெயர்வழிகள். | தொகை. | பக்கம். |
|---|---|---|
| மீனுட்சிசுந்தரம் பிள்ளை. திரிசிரபுரம்............ | ௧௭ | ௨௯ |
| ஒப்பிலாமணி தேசிகர். திருவாவடுதுறை ........ | ௧ | ௩௧ |
| தேவராஜபிள்ளை. வல்லூர்.................... | ௧0 | ௩௧ |
| சோலை - அப்பாசாமி முதலியார். கலெக்டர்........ | ௧ | ௩௩ |
| வேதநாயகம் பிள்ளை. முன்சீப்................ | ௬ | ௩௩ |
| முத்துச்சாமிபிள்ளை. தேவிபட்டணம்............ | ௧ | ௩௪ |
| சுப்பராயசெட்டியார். சோடசாவதானம்.......... | ௧0 | ௩௪ |
| தியாகராசசெட்டியார்தி. கும்பகோணம்.......... | ௩௫ | ௩௬ |
| கச்சபாலயஐயர். காஞ்சீபுரம்................. | ௩ | ௪௧ |
| கண்ணுவையர். தருமதானபுரம்............. | ௪ | ௪௨ |
| நாகலிங்கசுவாமிகள். கோயமுத்தூர்........... | ௧ | ௪௩ |
| சோமசுந்தரதம்பிரான். திருநள்ளாறு .......... | ௧ | ௪௪ |
| சிவானந்தசுவாமிகள். சித்திலிங்கமடம் ....... | ௧ | ௪௪ |
| பாலசித்தானந்தசுவாமிகள் பொம்மையபாளையம் | ௨ | ௪௪ |
| சிவசாமிசாஸ்திரியார். திருவாரூர்.............. | ௧ | ௪௫ |
| சாமிநாதக்கவிராயர். திருவீழிமிழலை........... | ௮ | ௪௫ |
| துரைசாமிமுதலியார். கும்பகோணம் .......... | ௧ | ௪௬ |
| குமாரசாமிக்கவிஞர்..... ஷை ............... | ௨ | ௪௬ |
| சாமிநாதக்கவிராயர். கொட்டையூர்............ | ௧ | ௪௬ |
| நடராசப்பிள்ளை. வேளார்காணி............... | ௧ | ௪௭ |
| கிஷ்ணசாமிக்கவிராயர் தஞ்சை............... | ௨ | ௪௭ |
| அரங்கநாதக்கவிராயர்.. ஷை ............... | ௫ | ௪௭ |
| அருளப்பமுதலியார்.... ஷை ................ | ௨ | ௪௮ |
| குமாரதேவர். காஞ்சீபுரம் .................... | ௩ | ௪௮ |
| சிவசிதம்பரமுதலியார். திருப்பாதிரிப்புலியூர்..... | ௧ | ௪௯ |
| ஜெகநாதப்பிள்ளை. தருமநாதபுரம்............ | ௩ | ௪௯ |
| சுந்தரம்பிள்ளை............. திரிசிரபுரம்........ | ௧ | ௪௯ |
| குப்பமுத்தாபிள்ளை............ ஷை .......... | ௪ | ௫0 |
| சரவணப்பெருமாளுபாத்தியார்.. ஷை ......... | ௧ | ௫0 |
| சதாசிவநாவலர் .............. ஷை .......... | ௨ | ௫௧ |
| பெரியண்ணப்புலவர் .......... ஷை .......... | ௬ | ௫௧ |
| மருதநாயகம்பிள்ளை ........... ஷை .......... | ௧ | ௫௨ |
| வயித்திலிங்கப்பத்தர் .......... ஷை .......... | ௧ | ௫௨ |
| மகாலிங்கவர்த்தியார். வரகனேரி .............. | ௨ | ௫௨ |
| பொன்னம்பலமுதலியார்..... சென்னை ........ | ௧ | ௫௩ |
| தெய்வசிகாமணிமுதலியார்..... ஷை ......... | ௧ | ௫௩ |
| சுப்பிரமணியப்பிள்ளை ......... ஷை ......... | ௨ | ௫௩ |
| சின்னுச்சாமிபிள்ளை............ ஷை ......... | ௧ | ௫௪ |
| ரங்கசர்மிராசா................ ஷை .......... | ௧ | ௫௪ |
| வீரராகவசுவாமியார்........... ஷை.......... | ௯ | ௫௪ |
| அரங்கசாமி பிள்ளை............ ஷை ........ | ௧0 | ௫௫ |

| பெயர்வழிகள். | | தொகை. | பக்கம். |
|---|---|---|---|
| சிற்றம்பலவுபாத்தியார்....... | புதுவை......... | ௧ | ௬௰ |
| முத்துக்குமாரசுவாமிவாத்தியார் | ஷெ .......... | ௨ | ௬௰ |
| சபாபதிமுதலியார். கந்தப்ப... | ஷெ .......... | ௨ | ௬௰ |
| பொன்னையாமுதலியார். வெள் | ஷெ .......... | ௧ | ௬௰ |
| அருணசலதேசிகர்.......... | ஷெ .......... | ௧ | ௬௧ |
| கோவிந்தபிள்ளை............ | ஷெ .......... | ௨ | ௬௧ |
| பொன்னுசாமிமுதலியார்...... | ஷெ .......... | ௧௧ | ௬௧ |
| சுப்பராயவாத்தியார்.......... | ஷெ .......... | ௧ | ௬௩ |
| சந்திரசேகரஐயர்............ | ஷெ .......... | ௧ | ௬௪ |
| பச்சையப்பமுதலியார்........ | ஷெ .......... | ௨ | ௬௪ |
| குமாரலிங்கவாத்தியார்....... | ஷெ .......... | ௨ | ௬௪ |
| சின்னத்தம்பிமுதலியார்...... | ஷெ .......... | ௧ | ௬௪ |
| அபாரமுதலியார். நயினுத்தை | ஷெ .......... | ௪௰ | ௬௫ |
| மயிலே-சவரிமுத்துப்பிள்ளை.... | ஷெ .......... | ௧ | ௭௧ |
| பிள்ளை-அப்பாவுமுதலியார்.... | ஷெ .......... | ௧ | ௭௧ |
| ஆரோக்கியநாய்க்கர்......... | ஷெ .......... | ௧ | ௭௧ |
| ஆரோக்கியசாமிபிள்ளை....... | ஷெ .......... | ௬ | ௭௨ |
| மலையப்பிள்ளை............ | ஷெ .......... | ௧௨ | ௭௩ |
| ஞானப்பிரகாசமுதலியார்..... | ஷெ .......... | ௪ | ௭௪ |
| தேவு-இரத்தினசாமிசெட்டியார். | ஷெ .......... | ௬ | ௭௫ |
| ஞானதிக்கசாமிமுதலியார்.... | ஷெ .......... | ௨ | ௭௬ |
| அந்தோனி வாத்தியார்....... | ஷெ .......... | ௨ | ௭௬ |
| இராமசாமிவாத்தியார்........ | ஷெ .......... | ௪ | ௭௬ |
| தங்கப்பிரகாசவாத்தியார்...... | ஷெ .......... | ௧ | ௭௭ |
| தையிரியநாதவாத்தியார்....... | ஷெ .......... | ௨ | ௭௭ |
| அப்பாக்கண்ணு நாவலர்..... | ஷெ .......... | ௪ | ௭௭ |
| சிவப்பிரகாசவாத்தியார்....... | ஷெ .......... | ௩ | ௭௮ |
| இராமசாமிமுதலியார்......... | ஷெ .......... | ௧ | ௭௮ |
| குழந்தைசாமிமுதலியார்..... | ஷெ .......... | ௬ | ௭௯ |
| மரியதாசுபிள்ளை............ | ஷெ .......... | ௩ | ௭௯ |
| அகீம்-அப்துல்லாதீப்சாய்பு... | ஷெ .......... | ௧ | ௮௰ |
| ஞானதிக்கஉடையார்......... | ஷெ .......... | ௪ | ௮௰ |
| ஞானுவாத்தியார்......... | காரைக்கால்........ | ௧ | ௮௧ |
| ஞானப்பிரகாசவாத்தியார்..... | ஷெ .......... | ௨ | ௮௧ |
| அந்தோனிமுத்து வாத்தியார்.. | ஷெ .......... | ௨ | ௮௧ |
| ஆதிமூலப்பிள்ளை........... | ஷெ .......... | ௫ | ௮௨ |
| ஐயாசாமிவாத்தியார்......... | ஷெ .......... | ௩ | ௮௩ |
| பொன்னுசாமிபிள்ளை........ | ஷெ .......... | ௬ | ௮௩ |

| பெயர்வழிகள். | தொகை. | பக்கம். |
|---|---|---|
| ஆரோக்கியம்பிள்ளை......... ஷ ........... | க | ௮௪ |
| அண்ணுசாமிப்பிள்ளை........ ஷ ............ | க | ௮௪ |
| தனக்கோடிமுதலியார்........ ஷ ........... | ரு | ௮ரு |
| பிரபலநாதப்பிள்ளை .......... ஷ ........... | க | ௮௬ |
| இராமசாமிவாத்தியார்........ ஷ ........... | க | ௮௬ |
| கண்ணுசாமிப்பிள்ளை. தரங்கம்பாடி............ | ரு | ௮௬ |
| ஞானப்பிரகாசப்பிள்ளை. திருமலைராயன்பட்டணம். | ரு | ௮௭ |
| நாகைமுத்துப்புலவர் ........ ஷ ........... | க | ௮௮ |
| சாமிஐயர்.................நாமக்கல்........ | க | ௮௮ |
| இராமசாமிஐயர்.............. ஷ ........... | க | ௮௮ |
| சேதுஐயர். மூசறி........................ | க | ௮௯ |
| நாராயணசாமிநாயகர் .......சேலம்........... | க | ௮௯ |
| இராமசாமிவாத்தியார்........ ஷ ........... | க | ௮௯ |
| சுப்பராயவாத்தியார். பட்டாம்பாக்கம்.......... | க | ௮௯ |
| தாசி-குப்பு. மாயூரம்...................... | ரு | ௮௯ |
| பாகூர்கல்லறைக்கல்லி லிசைந்தபாடல்.......... | க | ௨௮ |
| மெதாயிலஎிக்கவறிவித்தல்..................... | க | ௯0 |
| கோவிலபிஷேகத்திற் கறிவித்தல்............... | க | ௯௧ |
| பாகூர்தேவாலய விருத்தாந்தச்சுருக்கம்......... | க | ௯௧ |
| செயகான்நாயகருக்குச் சம்மந்தமானவைகள்... | ரு | ௰௩. ௰௪. ௰ரு. ௰௬. ௰௭. |

சவாராயலு நாயகரைக்குறித்து அச்சிடப்பட்டிருக்கின்றவைகளின்

# குறிப்பு.

புதுவையில் அச்சிடப்பட்ட இராசாங்கவிளம்பரப்பத்திரிகை.

௧௮௬௰-ம் ஆ அவுரீ ௩௧௨ ரு௪௩-ம் நெம்பர்.
௧௮௬௧-ம் ஆ யூவேன்ரீ ௧௪௨ ரு௩௰-ம் நெம்பர்.
௧௮௬௩-ம் ஆ ஒக்தோபர்ரீ ௩௨ ௭௧௨-ம் நெம்பர்.
௧௮௬௬-ம் ஆ பெவுறியேர்ரீ ௨௨ ௮௩௨-ம்நெம்பர்.
௧௮௭௰-ம் ஆ யூலேத்துரீ ௨௨ ௧௧௬௨-ம் நெம்பர்.
௧௮௬௩-ம். ஆ ஒக்தோபர்ரீ ரு௨ ஷ தமிழ்ப்பத்திரிகை.

பரீசுபட்டணத்தில் அச்சிடப்பட்ட ரெவுய்து மோந்து கொலோனியால்.

௧௮௬௩-ம் ஆ தெசம்பர்ரீ ௧௨ ௮௮௧-ம் பக்கம்.

சென்னையிலச்சிடப்பட்ட தினவர்த்தமானி.

௧௮௬௧-ம் ஆ யூான்வியேரீ ௨௪௨ ௨௭௭-ம் நெம்பர்.

சென்னை இராயபுரத்திலச்சிடப்பட்ட வேதாந்த நிரணயப்பத்திரிகை.

௧௮௭௰-ம் ஆ மே ரீ ௧௨ ௧௩-ம் நெம்பர் ரு௭-ம் பக்கம்.

கடவுள்துணை.

# புதுவை வித்துவான்
## ம. ரா. ரா. செ. சவராயலு நாயகர் கூறிய
# பாடற்றிரட்டு.

## திரித்துவத்தின்பேரில்
### பாடல்.

பாயபரலோகமொடுபாதலம் பூதலமனைத்தும் படைத்துக்காக்குந்*
தூயபகுபொருள் பகாப்பொருளாகித்திரித்துவமாய்ச்சுடர்வெப்பென்
றும், எயநிறமணமலரு மெனப்பொலிந்து தானாகவிலங்கியேயொன்
றாயபிதாச்சுதனிஸ்பரீத்துசாந்தினைத்தொழுதஞ்சலி செய்வாமால்...*

### சுவாமியின் பேரில்

பொருசிலைநுதலேக்கண்ணார்புவிபொன்னாற்பவத்தாழாமல்.........*
ஒருசிலையகத்தஞ்ஞான்றுற்றெண்டசமறையைத்தூய..............*
விருசிலையகத்திற்றீட்டியெம்மனோர்பவத்தைப் போக்கக்...........*
குருசிலைச்சுமந்தநாதன்கோதறுகழல்கடாழ்வாம் ....................*

### தேவமாதாவின் பேரில்

மீனாரொண்முடியாளைவெய்யவனார்புரத்தாளைமிளிராரித்தார்..........*
கானார்செம்பதத்தாளைக் கடவுளார்கரத்தாளைக் கடியாலன்று........*
மானார்கண்முதன்மடவாள் புரிபவத்தையழித்தாளை மாண்டாவீது...*
கோனார்நற்குலத்தாளையெஞ்ஞான்றும்பவமறவுட் குணித்துய்வாமால்*

### சென்மராக்கினி மாதாவின்பேரில்

தாரணிக்குயிராந்தரித்திரர் நித்தியாந்தமரிலாச்சிறியர்கட்கணையாம்.....*
ஆரணத்தணியா மாதிநாயகியாமருண்மழைபொழியுநன்முகிலாம்..*
நாரணிய முதாங் கன்னியர்க்கரசா நன்னிறைவழங்குநற்றருவாஞ்......*
சீரணி நித்யானந்த பூரணியாஞ் சென்மராக்கினிபதந்துணையாம்.....*

### ஆரோக்கியமாதாவின்பேரில்

இடராவினுரைகொண்டுமுதன்மடவாளந்நாளிலிசைத்தபாவத், தொடர
றநற்கடவுடனைப்பயந்தளித்தென்போற்பிணியாற்றுன்புற்றோர்க்குப், ப
டாரும்பன்னோய்தவிர்த்தாரோக்கியமாமரியென்னப் பலரும்போற்றக்
சுடருலவியறியவரி தெனுமரிய நகரமர்த்தாயிணைத்தாள்போற்றி..*

செயராக்கினிமாதாவின்பேரில்

சோகூருமரவமெனத்தோன்றியன்று செயுமிடனைத் தொலைப்பவானின்
மீகூருமதியிரவியுடுக்களணிந்தணிபரமவிமலன்றன்னைச்..........
சேகூருமிளமகவாவளித்தெளியேந்தொழுதுநிதஞ்செயித்தற்கிந்தப் ..
பாகூருண்மேவு செயராக்கினிமாதாவை நிதம்பணிந்து வாழ்வாம்....

சூசைமாமுனிவர்பேரில்

பாரனைத்தும் படைத்தவனைப் படைத்தவளைப் படைத்தவனைப் பகர்
தற் கெட்டாச், சீரனைத்துமுடையவனைச் செழுந்தவத்தி லுயர்ந்தவனைச்
சேணோர்போற்றும், ஏரனைத்துமுடையவனையேதமிலாச்சூசையெனவி
சைத்தலாதிப், பேரனைத்துமுடையவனைப் பெட்பகத்தி லெஞ்ஞான்
றும்பிணித்தல்செய்வாம்..................................

பொன்னுமுதலாய வுலகனைத்தும்படைத்தோம்பும் பொருவினுதன்.
அந்நாளிற்றனக்கன்னையெனத் தெரிந்தவளைக்கொண்ட வரியசூசை....
தன்னுமமுறைத்தெவருந் தாவரும்வீடடைந்தனராஞ் சார்பிலேமும்...
வின்னுமவனடியைத் தொழுதின்னே பவமதற்கு விடையீவேமால்..

மிக்கயேல்முதலிய நவவானோர்கள்பேரில்

சோதிமன்னன் சிரங்குமைத்தோன் றாயமரியம்மைவயிற் றாதுசென்
றோன்ஏதமிலாத்தோபியனுக்கினியசுபவதுவையந்நாளியற்றிேனென்
றேதுமிக்கயேல் கபிரியேலிரபயேன் முதலொன்பான் விலாசத்....
தீதிலொளிலகுசூட்சமட்சயமுற்றோர் மலர்த்தாள்சென்னிசேர்ப்பாம்

பன்னிருசீஷர்கள்பேரில்

அருளிராயப்பர்பெலவேந்திரர் யாகப்பாருளப்பர்தோமை, தெருள்சி
ன்னயாகப்பர்பிலிப்பொடுபரதலோமைமத்தேசிமோன்ததேயு,மருளு
று மூதாசனிடம் வந்தமத்தியாசனெனவாழ்த் தப்போத்தர், பொருண்
மிகு பன்னிருவரடிப்போதினையெப் போதுமிகப் போற்றுவாமால்..

பிதாப்பிதாக்கள்முதலியவர்கள்பேரில்

தாவுஞ்சீலம் பொறையுளும் பிதாப்பிதாக்க ளொடுகேதிய.................
வாவுந்தீர்க்கதரிசர் சுவிசேஷர் மோக்ஷவாசிகளுந்......................
தூவுந்திரைநீர்க்கடலுலகிற்றுலங்குந் தூயவேதியரு................
மேவும்படி நம்மகத்திலகம் விருப்பிற் கொடுத்துவினை யொழிப்பாம்.

திருச்சபையின்பேரில்

இளமலியுத்தம மடவார்கொழுனர்தமக்கெஞ்ஞான்று மியற்றவேண்டுந்
தளமலிநல்லுபசாரப்பணிவிடைவந்தனையனைத்துஞ்சமைத்தல்போல
நளமலி நீரடியிறைவற் கெஞ்ஞான்றும் பணிபுரியு நந்தா யென்னும்
வளமலிநந் திருச்சபையை யருச்சித்துப் பவமதனைவருச்சிப்பாமால்.

ஐந்துகாயப்பிராஞ்சீஸ்குவின்பேரில்

காயமுறுவிழியாதித்தா யெவையன்றுபுரிகரிசாற்சேசு, காயமுறத்தோ
ன்றியனு மொருங்கடைந்தனான்றவற்குக் காணத்தோன்றைங்,காயமுற
வேண்டுமெற்கென்றடைந் துடலையொறுத்தவன்றன் கழலுற்றோரா
காயமுற்றின் றெளிர்பிராஞ்சீஸ்குவெனுந்தூயவன்றாட்கமலம்போற்றி

சவேரியார்பேரில்

வண்டுகொண்டகானகத்தன்வண்டினைப்போக்காதென்னமதித்துருமற்
றெண்டுபோற்கியற்றுநெறியிஃதென்றிந்நாட்டோர்க்குந்துலங்கக்காட்டி
யண்டுமெளியவர்குறைகள் பலபோக்கித் தனதுகுருசாமி வீழப்
பண்டுநண்டுகண்டுதாக்கொண்டுநின்றேணிண்டைப்படிபழிச்சுவாமால்.

அந்தோனியார் பேரில்

பூரியர்தமக்குமறைமறையெனமுன்புகன்றபற்பலசமயர்களாங்........
காரியக்குருக்களனைவருஞ் சமழ்ப்பக்கரிசிலாவொண் டசமறையைச்.
சீரியரொடுபூரியர்களுமுவப்பத்தெரித்ததுமன்றிமீன்களுக்கும்......
ஆரியமுடனன்றேதுமந்தோனியடிகளினடிகளைப்பணிவாம்.........

லசார் பேரில்

மதியேறுதாளிகரமலரோதிப் பழம்பழியில் வாடுவோர்விண்.........
பதியேறச்செயுமமலன்றருபிணியிற்றளராதப்பரனைவேண்டிக்.....
கதியேறியபராந்தன்மடி யேறிச்சிறியேன் சொற்கவியிலேறித்......
துதியோர்ச்சிஷ்ட லசாரொனுந் தூயனடிமலரைத்தொழுதுய்வாமால்.

எலியாசுமுனிவர்பெரில்

விண்ணுலவுமுகின் மூன்றுவருடந்தன்னாட்டினகமேவிடாமற்றடுத்
தோன்-வெஞ்சினங்கொண்டுவரு வேலுழவரியாவனையும் வெந்தழலினு
ன்மடித்தோன்- தண்ணுலவுமழையிலொருகாகம் வந்தென்றுந்தரும்
பிசிதனைப்புசித்தோன்- தளருமொருகைம்மையினிறந்த மகனுயிரோடே
ழைந்துவர வருள்புரிந்தோன், திண்ணுலவு நதிவழியளித்திடத்துயரி
ன்று சென்று கனாதனிலடைந்தோன்- தேடிவந்தடைவானவன் கண்டுதே
ரவுண்டு சிகரி நீ ணெறிகடந்தோன், வண்ணுலவு மிரதமீதேறியண்டா
விடம் வதிந்தவனுகாத்த நாளில்- வடிவோடிக்குறுமெலியமாமுனிவனு
பய செம்மலரடிகளைப் பணிகுவாம்..........................

ஆரோக்கியமாதாவின்பேரில்

வெண்பா.

செந்தேன் பொழிலுலவுந் தென்னரியனூரில்வள.........
ரந்தேவாரோக்கியமரியன்னாப்-வந்தேன்..............
திருமுகமுஞ் சேவடியுந் தேவனையே தாங்குன்.........
னிருகரமுஞ் சேவிக்கவின்று......................

கட்டளைக்கலிப்பா.

போதமேவுமடந்தை யொருத்திநின்பிள்ளையின் புரத்திற்பொலியாடை
யை, நீதமோடொருகாற்றொடமாபிணி நீங்கியோங்கினளாமிந்நிலத்தி
லே, சீதமேவுமதியணிதாளிநின்செய்யதாணிதந்தீண்டித்தொழுதுமே
ன், ஏதமேவுஞ்சிறுபிணியானதை யின்னுநீக்கவிரங்காததென்கொலோ.

# அரியனூர்
# ஆரோக்கியமாதாவின்பேரில்
# பதிகம்.

---

## காப்பு.

ஆரோக்கியமரியி னம்புயத்தாட்கின்பமுற்றுப்........................
பாரோங்க நற்பதிகம் பாடுதற்குச் - சீரோங்கு...........
நற்சிலுவை தொண்டுகொண்டு நண்டுபண்டு கண்டுதர......
வற்புடனேபெற்றவன்காப்பாம்..........................

பூமலிகருமைக் குழன்மடமகளிர் புன்மயற் புணரியாழெனக்குன்.....
றேமலிகமலவிணையடிப் புணையைச்சேர்த்திடர்தீர்த்தினிதருள்வாய்...
தோமலிகனியை யொழித்துச்சோகரவை நூறுமுன்னதகனி வழங்குங்.
காமலிபெரியவரியனூர்தனின்வாழ்கருணையாரோக்கியமரியே.....(௧)

நீருறுகுமிழியலை யெழுத்திளமை நிறைதிருவாக்கையென்றுணர்ந்தும்.
ஆருறுநித்தவாழ் வினையுன்றுதவத்தில் நாள்கழித்த வெற்கருள்வாய்..
பாருறுமாதமொன்றின் மும்மாரிபண்பொடு பொழியுநற்கரிய. ....
காருறும்பொழில்சூழரியனூர்தனின்வாழ்கருணையாரோக்கியமரியே (௨)

அயன்மனைவிருப்பம்வெகுளிவஞ்சகம் பொய்யவாவழுக்காறு மாகொ
டுஞ்சொல், பயனிலகூறலினையவென்றீய பாதகமெலா மறவருள்வாய்
புயலகட்டகம் பாய்முப்புடைக்கனியைப் புடைத்தெழும் வாளைகண்மி
குந்த, கயமலிபெரியவரியனூர்தனின் வாழ்கருணையாரோக்கிய மரியே.

பூவினிலனந்தம் பாவிகளுன்னாற் புண்ணியராயினரென்றுன்........
சேவடியடைந்த தீயனெற்கிரங்கிற் றேவிநின் புகழ்பெரும் புகழாம்.
தூவரிதனிலிந்து நயமாமென்னச் சூழ்நதிவிட்டனக்குழாந்தண்.....
காவெழும் பெரியவரியனூர்தனின்வாழ் கருணையா ரோக்கியமரியே.(௪)

பெரும்பிணிபலமுன்போக்கிக்காரணமாப்பெற்றநின் பெயரினையென்
கண், பொருந்தகப்பிணியைப் போக்கியின்றொருகாற் புதுக்குதற்கரு
ள் செயல்வேண்டும், திருந்தெழிற் றடத்தி னிளவரால்பாயச் செஞ்ச
ரோருகச் சுரும்போடிக், கரும்புறும் பெரியவரியனூர்தனின்வாழ் கரு
ணை யாரோக்கிய மரியே........................................(௫)

நல்லவை செய்வார்க்கிரங்கலெஞ்ஞான்று ஞாலமீதருமையேயன்றால்
அல்லவை செயுமெற்கிரங்கிடலென்றுமன்னையே நின்பெயர்சிறக்கும்
வல்லநன்முனிவோரொன்னவிற்றடத்தில் வந்துபுக்கைந்தையு மடக்கும்
கல்லிவாழ்பெரியவரியனூர்தனின்வாழ்கருணை யாரோக்கிய மரியே.(௬)

தனைதனிலெனக்குத்தந்தைநீதாய்நீதமருநீயாதலாற்சிறியேன்......
புனையெலாம்பொறுத்துக் காத்தலே நினக்குப்போதவும் பெருங்கடனு
மால், வனையெனவுயர்ந்த மாடகூடங்கண்மன்னியோங்குன்னதவாற்றின்
கரையமர்பெரியவரியனூர்தனின்வாழ் கருணையாரோக்கியமரியே...(எ)

அருளறிவடக்கஞ்சுகுணமொண்சீலமன்புபுண்ணியம்பொறைவாய்மை
தெருணிறைஞானந்தூய்மையிவ்வனைத்துஞ்சிறியனேற்குறவருள்புரிவா
ய், சுருளறன்மிதவையுறுகொடிவானிற்சுடர்செய்மீன்களைப்புடைத்துதிர்
க்கக், கருளறும்பெரியவரியனூர்தனின்வாழ்கருணையாரோக்கிய மரியே.

நினைவெலாமுன்றுளினுமுனையெல்லா நின்பெருந் துதியினும் புரியும்,
வினையெலா நின்பூசனையினுஞ்செல்லவிரும்பு நற்பேறெனக்கருள்வாய்,
மனையெலாஞ்சுருதி வயலெலாந் தரளம் வாயெலா நயந் துதிபுயல்செய்,
கனையெலாமளாவு மரியனூர்தனின் வாழ்கருணையாரோக்கிய மரியே(௯)

அலைமனச்சிறியேன் வேண்டலுக்கிரங்கி யருமகவளித்துநோயொழித்து
நிலைபெறச்செய்து காத்தருள்புரிந்த நின்பெருங்கருணையே வாழ்க...
தலைமைசால்புலமைக்கழகநாயகர்கடமக்குநூல்பயிற்றுவோரொன்னுங்
கலைஞர்வாழ் பெரியவரியனூர் தனின் வாழ்கருணையாரோக்கிய மரியே.

---

பாகூர்

# செயராக்கினி மாதாவின்பேரில்

# பஞ்சரத்நம்

---

## காப்பு.

செங்கமலவாவி நிறை சீர்வளரும் பாகுநகர் ...............
தங்குசெயராக்கினி செந்தாண்மலருக்-கிங்கிதமாப்..........
பஞ்சரத்நங் கூறுதற்குப் பார்புரக்குஞ் சேசுபரன் ..........
அஞ்சரணங்காப்பு நமக்காம்..........................

வேதநன்குணர்ந்தோரறிந்தினிதேத்தவிளங்குதண்பிறைமிசையமருன்
பாதமேபணிந்துதினந்தினம்புகழ்ந்து பாடநன்வாக்கெனக் கருள்வாய்,
போதமாரினியதமிழறி கலைஞர்புகழுமுன்னத வொலியுடன்சங்......
கீதமார்பாகுபதியமர் செயராக்கினியெனும் பரமநாயகியே.......(க)

தன்னைநீயெமக்கென்றமலனன்றளித்ததன்மையாலென்று நானுனக்குப்
பிள்ளையாதலினூற் கடியவென்கொடிய பிழையெலாம் பொறுப்பதுன்க
டனும், வெள்ளைவெண் பிறையிலெழுந்தபங்கயத்தை மேவு வீரொன்ன
ல்போற்பொழில் வாய்க்; கிள்ளைகளொலி பாகூரமர் செயராக்கினியெனு
ம்பரமநாயகியே.............................................(உ)

நீதநல்லொழுக்கம்பொறைநிறைவாய்மைநீங்கருந்தேற்றமொண்சீலம் போதமன்படக்கந்தூய்மை நன்னேயம்புல்ல னெற்குறவருள்புரிவாய். ஆதமென்பவன் தீதெனும் பிணிக்கிறையை யருமருந்தெனவெமக்கரு ளுங். கேதமில்பாகுபுரியமர்செயராக்கினியெனும் பரமநாயகியே. (௩)

இடக்குறுங்கொடுஞ்சொல் வெகுளிவஞ்சகம் பொய்யிடும்பழுக்காறே டெக்கழுத்தம்; அடக்கமின்மடவார் விருப்பமென்றினையவகங்களையொ ழித்தெனையாள்வாய், மடக்கிதழ்க்கமலக் குளத்திளமகளீர் மதித்திடா துதிர்த்தமாமணிகள்; இடக்குநற் பாகுபுரத்தமர் செயராக்கினியெனும் பரமநாயகியே, .............................. (௪)

வலமலிநின்னோர் திருப்பெயர்தனக்குவழுவுறவண்ணமுப் பகையோ, டலமலிந்திடுமைம் பொறியெனும்பசையையடல்செய் நன்வலியெனக் கருள்வாய், கலமலிகோவிற் றூபதீபத்தைதக்கார்தடியென்று காக்களிற் கோ, இலமொளிபாகுநகரமர்செயராக்கினியெனும்பரமநாயகியே. (௫)

---

## மரியம்மன்பேரில்

# பஞ்சரத்நம்.

காப்பு.

இந்துசேர்செந்தளிர்த்தாட்கின்றியற்றும் பஞ்சரத்நம்.......
நந்தலுறுதந்தமொடுநன் கலைமயச் - சிந்துதனிற் ..........
பண்டுவிழுநற்சிலுவை பார்த்தலவனீந் திடக்கைக் .........
கொண்டுமகிழ்ந்தோன் கழலுட்கொண்டு..................

வேலைசூழ்புவியோர் பழித்திடப்பவமாம் விடஞ்சொரிகொடிய வெ ன்னகமாம்-வெய்யபன்னக முன்கழற்படுசோகாம் வெவ்வரவினுங்கொ டிதேனு, மாலையேதருபுன்மாதர் கோட்பட்டுமோழ்கியா னிரையமாழா து-மாண்டருமுயர்வான் மதியபாதுகத்து மன்னுநின் செம்மலரணைய, காலையென்னகத்தி லிருத்திட நீயே கண்ணிடாவிடி லிவணுயிர்-கடை யினேற்குண்டோ வேறு மோருதவி கதியதர் காட்டி யீட்டிடற்கே, பாலையேதரு தூயோனெனவுலகம்பகர்ந்துவெய்யோனெனவிழிவாப்ப ன்னுதலொழிப்பான்பொலமலியுடையாப்பானுவையணிந்தமாமரியே

அறமிதென்றுணரோனடிகளைப்பணியேனன்போடுன்பணிகளைப்புரி யேன்-அகிபிறையுறுநின்பதந்தனைப்புகழேனன்றநின்செபமிதென்ற றியேன்,மறமதேயுணர்வேன்மடிகளைப்பணிவேன் மங்கைமாரிடுபணி புரிவேன்-மையணிவிழி யன்னார்தமைப்புகழ்வேன்மாரனாகமத்தைதன் கறிவேன், கறங்கெனமடவார்மாலெனுமாலாற்காப்பிலா தலைந்தலைந்து ழலுங்-காமியாங்கொடியேற்கருள்செயிலுனையார் கடிபவரிலையென்மா ட்டிரங்காய், திறந்தருஞர்னவாரியேயெவருநேடுவானிதியமேயனையே- திம்லியேவானோர் துதியணிந்தவளே நித்தனைப்பெற்றமாமரியே. (௨)

அடிமுடிதேடவெற்கன்னையோவில்லையருங்கலையோதுவித்திடுதற்- கத்தனேவில்லைதளர்ந்திடேலென்றேயறையவோசோதரரில்லை, கடிமயலடைந்தேன்காவெனப்புகவோகனிவுளவுறவினரில்லை- காதுநீண்ணுமலிதன்னினுமன்பேகாட்டினுநட்பவரில்லை, படிகேடனுடுத்தபாரிடைத்துயர்கூர்பாவியென்னனையர்வேறில்லை -பாதுகாத்தளிக்கவுனையலா லிங்குபரி குனரிலையெனக்கிரங்காய், உடுமதியொளியையொண்முடியடிதோறுறுத்து மூன்றுலகையுமமைத்த- வொப்பெதிர்முப்போதீறுறுப்பில்லாவொன்றனையின்றமாமரியே.................................. (௩)

வளந்தருமினியவுணவினையொழித்து வன்றிபுன்மலக்குவைதருவிமதுவினுமினிதென்றதனையுண்டுழன்றுவதிசல்போன்றுன் திருவடியாம், நளந்தருபேரானந்தமாநறவநச்சிநற்கதியுருதிழிவாம்- நாரின்னுரியர்புன்போகமேசிறந்தநலமெனக்கண்ணிமண்ணைகட்கென், உளம்பதியாக்கிப்பவக்கடல் மூழ்கியொல்லுமெற்கினியுனதருளாம்- ஓடமீந்துயர்வான்கரையதர்காட்டவுன்னகத்திரங்கிடல்வேண்டும்; களங்கனென்றுலகமியம்புபிடாதெனைச்சார் கறையகற்றுதியெனவிரந்து- கனிந்துவேண்டுதல்போல்வெண்மதியுறுஞ் சீர்க்கழலுடையன்னைமாமரியே.........(௪)

நாரமோடுனையேநோக்கு நன்னேக்கு நசையொடேன்புகழ் புகழ்வாக்கும்-நற்கதிதருமுன் சரிதமெந்நாளு நாடுநற் செவியுமுன் சரணை, நேரமோடணுகிமிக்கபத்திமையாய் நிலமுறப்பணிதருசிரமும்-நீங்கிடாதுனையேசிமிழ்த்த நெஞ்சகமு நேயமும் பொறையு நன்னிறையும்; ஈரமோடருளு மொழுக்கமுமிக்க வின்சொலுமைம் பொறிசெகுக்கும்-இணையில்வீரமும் புன்றுயினேற்கனித்தேயுறிலிக்கடிமைசெய்திடுவாய், சூரமோடமரர்குழாந்தொழுஞ் சுடரோ சுதமிலா நன்மறைக்கணியே- சுகந்தருநித்யானந்தபூரணியேசுயம்புவையளித்தமாமரியே

---

உடுமுடித்தவளொண்கரத்துற்றென.............................
உடுமுடிக்கிடையுற்றமுதல்வநீ...............................
உடுமுடிந்ததற் கொப்பமுடிந்தும்பெண்...........................
உடுமுடிக்கனேயோட்டல் செயாதெனே..............................

மண்ணையன்றறை மாற்றமுளங்கொடு......................
மண்ணையாதனு மாந்தியதீமையிம்.........................
மண்ணையுற்றவர் மாட்டுறலான்வந்த........................
மண்ணையாய மகவைப்பணிகுவாம்.........................

சலங்கொண்டசோகரவாய் முனஞ்செய்தசதியறவற்...................
சலங்கொண்டரியகனிவயிற் சார்ந்துநற்சாரெனவ.....................
சலங்கொண்டடைந்து கொடியோர்கரத்தினிற் றூங்கியமு...............
சலங்கொண்டடிக்கப் பொறுத்தநஞ்சேசுவைச்சாரகமே..........

நகந்தருதீக்கனியுண்டாதன்செய்தநவையதனுல்..........
நகந்தனிலுற்றவர்சேர் கொடுந்தீமைகள்நாசமுற..........

நகந்தனிலோர்சேயெனத் தோன்றிவந்திடு நல்லநம்ம.....
நகந்தனியாயமுதல்வன் பொற்றுளிணை நண்ணகமே........

வேந்தன்றனைப் பதபாதுகமாக்கி விண்ணோரும்வெய்ய.........
வேந்தனற்றாசெனக் கொண்டோரரக்கனை வீட்டியபேர்..........
வேந்தன்மரபினில் வந்தாளருள்சுதவெம்மையலால்...............
வேந்தன்மையேன்பவந் தீர்த்தானை வெகுள்வாரெவரோ..........

## அட்டநாகபந்தம்.

விண்கமழ்விபவமொளிர்புனை........................
வண்கனபுலவரொங்குமேமிகத்........................
தண்பரனந்தயைக்கோலமேன்மரி.....................
விண்விளங்குகோவேந்தனைவேண்டுக.....................

## சதுரங்கபந்தம்.

சீராரியநகர்வாழ் திருவனையேதிரிநஞ்............................
சாரீகமாசுணநம்பிமயங்கவம்மாயமற..............................
நாராரடியரின்போங்கவரமல்கிநண்ணக்கையில்.......................
வாராதசீலனையீன்றவாரோக்கியமாமரியே...........................

## கமலபந்தம்.

பாதிமதி மீதிலுதி பாதினதிசோதிவதி ................
பாதமலர்தந்தெம்பவம்போக்காய் - காதன் ............
மனையேயாரோக்கிய நன்மாண்மரியேயெந்த ............
மனையேயெங்கட்கருள்செய்வான் .....................

## நான்காரைச் சக்கரங்கள்.

| | |
|---|---|
| நீவி யாபக சேசுநீ | வாலபாவி ழிமாதவா |
| நீசுசேயெனு நாதநீ | வாதமா பழி தீரவா |
| நீத நாயக போதநீ | வாரதீதமா சேசுவா |
| நீதபோதமெயாவிநீ | வாசுசேமரி பாலவா |

கொச்சகம்.

அணிமாதனைக்கணியா யாசறுவிண்ணோர்க்கணியாய்த்....
திணிமாதனைவிளங்குஞ் சீர்தருமநாதபுரம்............
பணிமாதவமறவாழ்பன்னுநூற்றைம்பதுநன்..........
மணிமாதாவேநினது மலரடிக்குத்தோத்திரமே.........

---

☞ இவ்வைந்து மிறைக்கவிகளும் ௲௮௱௮௰௳ கொலேழ்கொலோனியா ல்என்னுங்கல்விச்சங்கத்தில் கல்லச்சில் சித்திரத்துடன் பதிக்கப்பட்டன.

இவ்விரண்டுநான்காரைச் சக்கரங்கள் ௲௮௱௬௰௳ ஜனவரிமீ௨௪௳ சென்னையிலச்சிட்டதினவர்த்தமானியிலுஞ் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

( ௱௫ )

# தேவகீர்த்தனங்கள்.

கொச்சகம்.

பாரசலமனிலமொளி பன்னுகலாநிதிகருபம்.................
நீரசலமசரசரம் நீகமனைத்தையும் படைத்த.................
சீரசலனைப்பயந்த திவ்யவாரோக்யமரி.................
சாரசநின்னடியிணைக்குச் சந்ததமுமேசரணம்.................

இராகம் கமாசு தாளம் ஆதி.

சாரசசமயுக வடிசரணம் தருமவதிநினது............சாரசசமயுக
வரசலனையருடர புனிதகுண (ரீ) வாரிசீரரியனூரரசியுனது. சாரசசமயுக

மதுரவஜன ஜெயசுபகரமுலவுசுஜீவி-யேலி.................
மாநிலமீதுறு மேழைகளுக்கனுகூலி.................
அதுலவெழி லிலகுமுடிவணி சேகர-(ரீ).................
அற்புதாலய வாரோக்யமரிநினது.................சாரசசமயுக

சகலபுவனநவதவ வனிதைதகவொழுதாளி-தேவி.................
சார்பிலாத வெளியெற் கனையாயதயாளி.................
புகலவரியகருணைகரி சற்குண-(ரீ).................
புண்யரூபசவுபாக்யவதி யுனது.................சாரசசமயுக

புனிதபரனுமையுமுஜீதமனோகரபாணி - தாயே.................
பூவுலகோர்கதிமேவ வொளிருமுயரோணி.................
அனுதினமும்பர்கள் பணியுமுனதமிகும் (ரீ).................
அரியனூரிலாரோக்ய மரியுனது.................சாரசசமயுக

இராகம் சங்கராபரணம் தாளம் ஆதி.

விண்ணரசி யிவளன்றோ-நித்ய.................
விமலி யெனக்களித்த நிமலன்றனையளித்த-...........விண்ணரசி
எண்ணரும்விண்ணவரொடு பண்ணவர் மண்ணவர்பணி.................
இங்கிதமலரடியிற் பொங்குமதியிணையணி.............விண்ணரசி

மன்னவர் மன்னவன்தாவீதின்னரியவம்சநீரி.................
பன்னருந் தவத்தினுயர் நன்னய சூசையின்பாரி.................
கன்னியர்பணியுமுய ருன்னதமிகுஞ் சிங்காரி.................
அன்னம்மாள் சுவைக்கின்தவமென்னுமின்னவர்குமாரி....விண்ணரசி

அர்ப்புதமோட்சசெங்கோலி அமரர்பணியுங்காலி.................
விற்பனர்துதிக்குஞ் சீலிவிளங்குங் கற்புக்கோர் வேலி.................
பொற்புறுமாரிய நூலி புண்ணியானுபவமூலி.................
சற்சனர் கட்கனுகூலி சந்ததமும்பரிபாலி.................விண்ணரசி

வேதமுறைகளை மீறிப்பாதகநூல்களைக்கூறி ..........................
மாதர்புன்மனையிலேறி நீதிநெறிகளைத்தூறிக்..........................
காதகப்பாதகனென்ற தீதகப்பேதையாய் நின்ற..........................
ஆதுலனுமென்னைக்காக்குமரியபவத்தைப்போக்கும்...... விண்ணரசி

இராகம் துசாவந்தி தாளம் ஆதி.

தேவதாயேயிந்நேரம்பாவியாமென்னைத் திருக்கண்பார்ப்பதுன்பாரம்
மூவாமுதல்வன்பன்னு மோட்சானுபவந்துன்னுந்..........................
தாவாவொளியாய்மின்னுஞ் சத்யமாமரியென்னும்...... தேவதாயே

மாதர் மயக்கமேறி நித்திய சத்ய மார்க்கமதனைத்தூறி..........................
வேதியர்களைச்சீறிப் பாவநூல்களைவிளங்க வெவர்க்குங்கூறி..........................
பாதகக்காதகனுகித்தீதகப்பேதையாய் நொந்தேன்..........................
சீதகன் தாங்குமுனது பாதமதைத்தேடிவந்தேன்......... தேவதாயே

எண்ணில்பவங்கள்புரிந்தேன்வேசிகளிடமிச்சை கொண்டேதிரிந்தேன்
மண்ணைமயலாற்சரிந்தேன்பிணிமிகுந்து வாடியுடலங்கரிந்தேன்....
விண்ணுலசுசுகத்தை எண்ணிக்கண்ணீர் சொரிந்தேன்..........................
எண்ணுங்கதிவழி நீ யென்றேயின்றே தெரிந்தேன்...... தேவதாயே

சீர்வளருஞ் சிங்காரி பேரானந்த திவ்வியசுகவாரி..........................
ஏர்வளரும் பூந்தாரி வாடுகின்ற ஏழைகட்குபகாரி..........................
தார்வளருயர் சீரி தாவீது வம்ச நீரி ..........................
பார்வளர் சூசையின்பாரி பன்னுமன்னம் மாளகுமாரி..... தேவதாயே

வெண்பா.

வாகூருகேசுடர்தன் வான்முடியின்மெய்யிலுற..........................
நாகூர்மதியிலெழு நாயகியாய்ப் - பாகூரின்..........................
மன்னுசெயராக்கினியா மாமரியின்றாயசெழும்..........................
பொன்னடியான் சூடுகின்றபோது..........................

கொச்சகம்.

பொன்மைவளராலயமும் பூம்பொழிலும் நீண்வயலும்..........................
மென்மைமலர் வாவிகளும் மேவுபாகூரமரா..........................
இன்மைதனைப் போக்கி நம்மை யீடேற்று மாமரியாம்..........................
நன்மைசெயராக்கினியினற்பதத்தைப் போற்றுவமே..........................

இராகம் சுருட்டி தாளம் அடதாளசாபு.

நன்மைநிறையுன்னதஞானரூபஜெய..........................
ராக்கினியே சரணம் ..........................
மின்னும்பாகு நகர் மேவும்பரம திவ்ய..........................
விமலன்றனையருளுநிமலியெனும்புனித.......................... நன்மைநி

விண்ணோர்பணியுஞ்சீலி வெண்மதிமிதிகாலி......................
மண்ணவர்க்கனுகூலி மாதர்கர்புக்கோர்வேலி......................
எண்ணும்வேதநூலி ஏழைகள் பரிபாலி ......................
புண்யானுபவமூலி போற்றுமோட்சசெங்கோலி........ நன்மைதி

இங்கிதசுகவாரி ஏழைகட்குபகாரி ......................
துங்கமிகுஞ்சிங்காரி சூசைமுனியின்பாரி ......................
கொங்குலவும்பூந்தாரி கோவம்சகுலநீரி......................
பொங்குமினியசீரி புனையன்னம்மாள்குமாரி............ நன்மைதி

பூதலந்தனில் நீயே யாதாரவெனக் கொண்டு ......................
பாதமென்னு முன்னத சீதபோதினைக்கண்டு......................
ஆதரமுடன் றேடி யணுகுவோரைப் பார்க்கும் ......................
பாதகந்தனைப்போக்கும் பரமபதத்திற் சேர்க்கும்........ நன்மைதி

வேறு.

எள்ளினுந்தள்ளினு மிவணுனது......................
கள்ளவிழ்மலரடிக் கமலம்விடேன்......................
புள்ளினமுறும்பணைப் புதுவையில்வாழ்......................
வள்ளிளம் பிறைமிதிமாமரியே......................

தந்தையுமிலையுற தாயுமிலை......................
சொந்தமுமிலையொரு தோழரிலை......................
நொந்துனையடைந்தவென் னேயினைக்கண்......................
டிந்தணிமாமரி யிரங்குவையே......................

இராகம் ஆகிரி தாளம் அடதாளசாபு.

அன்னையே அன்னையே எனக்கிங்காய் அன்னையே....... அன்னையே
அன்னையே வன்னையேயல்லாலெனக்கார்துணை ......................
செந்நெலுறும்புதுவைச் சென்மராக்கினியென்னும்...... அன்னையே

விண்ணிலுள்ள மீன்களை வேவுங்கடலறலை ......................
எண்ணிக்கணக் கிடினு மென்பவங் கணக்காமோ ....... அன்னையே

பூதலத்தோர்களைத் தீதகத் தோரென்று......................
காதகனுமென்னு லோதுவதே யின்று...................அன்னையே

ஓதியுணர்ந்தும்பிறர்க்குரைத்துந் தானடங்காத......................
பேதையிற் பேதையாப் பேறெடுத்தேனையோ.......... அன்னையே

பேய்ப்புறச்சமயர்கள் பிதற்றும் பவநூல் கற்று ......................
எய்ப்புறச் சரியதென் றெண்ணி மோசம்போனே ...... அன்னையே

எத்தனைகுற்ற மென்னிடத்திற் கண்டாலுநீ......................
சற்றுமெனைத் தள்ளாமற் றற்காத்திட வின்று .......... அன்னையே

## இராகம் எதுகுலகாம்போதி தாளம் ரூபகம்.

தயைசெய்தருள் புரிகுவாயே -இது- சமயஞ் சமயந் தேவதாயே
துயரொழித்தாண்மரியாயே-வேறு-துணையெனக்கிலைகதிநீயே.. தயை

மூவுலகாளுஞ் செங்கோலி-ஆதி-மூலன்மகிழுந் தவவேலி..........
பூவுலகோர்க்கனுகூலி-நித்ய-புனிதபுண்ணியசெபமாலி........தயை

பன்னிருவுடுவணிசிரத்தி-சேசு-பரமனுறையுஞ்செழுங்கரத்தி......
உன்னதமிகுட்புண்யதிறத்திமோட்சத்தொளிருந்தேவர்கள்பணிவரத்தி

சீதமதியணிபொற்காலி-மண்ணோர்-தீதையொழித்திடுஞ்சுசீலி....
ஆதவனையுடுத்தமேலி-இந்த-அகிலம்புரக்கும்பரிபாலி.........தயை

வஞ்சவலைகைகொடுந்தீது - செய்தென் -மதியைமயக்கிவருத்தாது ..
தஞ்சமெனக்குநீயேபாது - காத்துத் - தாபரித்தாளுமிப்போது. தயை

---

## விருத்தம்.

பூதலமெலாம்புரக்கும் பொன்றுத கொடையோனே புகழ்மிக்கோனே
மீதலம்வாழமரர்தொழுங் கோமானே யெந்நாளுமிளிர் வல்லோனே
காதகஞ்செய்மாதர்களோ டித்தனைநாளுறவாடிக் காமியான........
பாதகனையினுமென்மீ திரங்கிடுதற் கிதுசமயம்பரிவுகூர்வாய்........

## இராகம் பந்துவராளி தாளம் அடதாளசாபு.

இதுசமயமென்னை நேராய் -உன்- மதுமல ரருட்கண்ணுற்பாராய் இது
சதியலகையொழியவாராய்-உனைத்-துதிசெய்யடியெற்கருடாராய். இது

திறைமரிவனைதந்தசேயா-தாவீ-திறைமரபிலுதித்தராயா ..........
மறைவனாயிலுனைத்தவாயா-என் - கறையறுத்தாள்பஞ்சகாயா .. இது

புலியுமாவுமொன்றித்ததூயா-ஆர்-கலியில்நடைவைசெய்யுபாயா ......
எலியற்குணவளித்தநேயா-அஞ்-சலிசெய்யடியவர்சகாயா ...... இது

தெருளிளெளியனையாள்நாதா-மாதர்-மருளொழித்தாள்சற்பிரசாதா ...
இருளற்றவர்புகழ்நன்னீதா-நன்வாக்-கருளெற்கமரர்தொழுபாதா,.இது

---

## இராகம் செஞ்சுருட்டி தாளம் அடதாளசாபு.

நலமளிக்கும் பரமதிவ்யநாதனேவருக - எங்கள்..................
நாதனேவருக நித்தியநாதனே வருக ...........................ந

ஏவைபழி நீங்க எவ்வுயிருமோங்க எள்ளலகையாவுமேங்க........ந

பாவலரின்பாகப் பண்பினிசைபாடப் பாரனைத்துமேகொண்டாட..ந

விண்ணும்மண்ணுமென்றுமேவியுறவாகவிந்தைமனுவாய்விளவாக..ந

ஈசயன்பல்லோர்முன்னியம்பியதாக நீசர்பவம் யாவும்போக ......ந

விண்ணினவமாக மீனெழுந்துதிக்க வேந்தர் மூவர்கடுதிக்க ..........ந

கொச்சகம்.

காதனுக்கு மந்நாளிற் கண்ணளித்த நஞ்சேசு..............
நாதனுயர் மாபுதுவை நம்கோவின் மாமலையில் ...........
ஆதனறியாது புரியவமதனைப் போக்கவொளிர்................
சீதனுமதாண்மரிக்குச் சேயாயுதித்தனனே..................

இராகம் மாஞ்சி தாளம் ஆதி.

அச்சுதன் சுதனென வவதரித்தான் - அகல் .....................
இச்செகத்தோர்கள் செய்யிடரகல ............................ அச்சு

தூயவானோர் நனிதொழு திறைஞ்ச - நல்ல ...................
ஆயர்பால் தயிற்கொண் டடிபணிய.......................... அச்சு

மூவுலகுந்தொழுமுதிர் தவத்தில் - உயர்.........................
பூவுலகனை மரிப்புதல்வனென............................. அச்சு

மேதைநற்றவ மிகுசூசையெனுங் - கைத் .......................
தாதையாம் வளன்மிகத்தான் மகிழ........................... அச்சு

அன்றுதாவீதிறைக் கறைந்தபடி - யவன் ......................
ஒன்று நற்குலந்தனி லுயர் மகவாய்........................... அச்சு

ஆதனன் றயின்ற தீக்கனியதனால் - இந்தப் ...................
பூதலத்தோர் கொண்ட புரையொழிய ......................... அச்சு

---

வெண்பா.

மாந்தர்பவம் போக்க மனுவுருவாகிப் பிறந்த
வேந்தரிறைஞ்சும் பரமவேந்தனே - ஏந்துஞ்
சிறுகுழந்தை யாயிலங்குஞ் சேசுவே யென்பா
லுறுகணுறுதா ளெனையின் றோர்ந்து.

இராகம் சாவேரி தாளம் ரூபகம்.

சீர்மேவு நித்யானந்தநற் செல்வமெமக்கருளப் ...............
பார்மேவிய பரம மரிபாலா .............................. நமஸ்காரம்

நித்தாவருணிமலா வொளிர் நிருபா நித நிலவுஞ் ..............
சுத்தாத்ம நன்வாசா பரஞ்சுடரோ .......................... நமஸ்காரம்

அந்நாளரவாலேவை செய்யரிய வினைபோக்க....................
இந்நாண் மனுவாக வந்தவிறைவா .......................... நமஸ்காரம்

மூவுலகும் புகழ்கன்னியு முதிரன்னையுமான .....................
தாவிலரு மரியம்மையின்றனையா ........................... நமஸ்காரம்

அருமாதவனென்னும் வளனளித்த மகவெனவும்.....................
இருமாநிலம் புகலவந்த ஏகா ................................ நமஸ்காரம்

தூயதாவீதிறைவற் கன்று சொன்னவண்ணமாகப் ..................
யாயவனன் மரபில்வந்தபரமே .......................நமஸ்காரம்

புல்லணை யுணராமலிப்புவியெங்கணுமலைய ..................
வல்லமணவாளியிடம் வந்தோய் .......................நமஸ்காரம்

விண்ணோர்புடைசூழ வாயர் விதியோடடி தாழ ..................
வண்ணோர்செழுமணையில் விழிவளர்வோய் ..........நமஸ்காரம்

மூவேந்தர் பொன்மிறைதூப மொண்முடி தாழ்ந்தடிமுறைமுயத்...
காவலுடனே போற்றிடவமர்ந்தோய் ..................நமஸ்காரம்

தேனைசுவையமுதே செழுங்கனியே யெங்கடிருவே ..................
வானோர்பயனெளியேட்பெறவந்தோய் ..................நமஸ்காரம்

---

இர்ராகம் நீலாம்புரிதாளம் சம்பை.

ஆதிமுதலானபரப்பொருளே- நித்- யானந்த போகமருளம்புதநற் றெருளே, சோதியெனும் புனிதசத்யவேதா- மண்ணிற் - றூயோர்கள பணியவொளிர்சொல்லரும்பொற்பாதா, பாதிமதிமிதித்தமரிபாலா- வுயர்- பன்னுசராசரமனைத்தும்படைத்தளிக்குமூலா, தீதொழிதெற்க ருள்புரிதெய்வீகா- நிதஞ்- சேணோர்களபோற்றவளர்திவ்யபரலோகா.
ஆதிமுதலா

பாரார்பல்லுயிரனைத்தும் படைத்தோய்- அப்- பார்பரவைதனிற் பிரம்பாற் பண்டுநடமளித்தோய், வாராரோர் வளையிற்றசமறையை- மண்ணோர்- வானுலகம்பெறவளைந்துவாசையுடனளித்தோய், ஏராரோர்பிள்ளையினைவிடுத்தே- பண்டு- எலிய முனிக்குணவதனை யினிமையுடனளித்தோய், சீராருன் றெண்டனுமாயதனுந்- சுடர்- செல்லாமற் செயுமுனது சீர்த்தியுரைப்பதுவோ,
ஆதிமுதலா

இன்றெனது பவமனைத்தும் பொறுத்தே- என்னை- யீடேற்றிலுனக்குவருமிழிவென்னபுகழே, யன்றெனினு முனிபவர்நிற்குளரோ- வெனக்- காதரணைபுரியவுனையன்றியும்வேறுளரோ, நன்று செய்பவர்க்கருணீபுரிதல்- இந்த- நானிலத்திலருமையன்று நாயினேற்கிரங்கில், என்றுமுண்டுபெருப்புகழ்நிற்கையா -இது- வேசமயங்கண்பாரு மீறில்லா மெய்யா.
ஆதிமுதலா

---

இராகம் கேதாரகௌளம் தாளம் ஆதி.

அருள்புரிந்தெளியனை யாதரணைசெய்யா
அடமென்னசொல்லையா
தருமகுணந்த சகலலோகபதியே
சகைசேர் மாமரிதந்த சாமியெனுநிதியே
அருள்

பரமவன்னதபாலா பத்தர்பணியுங்காலா ..................
உம்பர்க்குமேலா வோதும் வேதநூலா ..................

திருவாரூஜீ தலோலா திவ்யமாமறைமூலா ..................
ஒருபரமசுசீலா வுன்னுமோட்சசெங்கோலா அருள்
கொடியபவத்தைப்போக்கக் குருசைச்சுமந்ததோளா...............
படியமுண்முடிசிரம் பரித்தொழுத்தகுணாளா..................
அடியரிதையாம்புயத் தணையுஞ்செம்மலர்த்தாளா..............
மிடியர்க்கருளசெய்தாளும்விண்ணோர்மண்ணோர்கண்ணாளா அருள்
நிதமுமன்பருக்கருளுதவுங்கிர்பாசமுத்ரா..............
நிகிலநிர்க்குண நயநிமல பேரின்பக்ஷேத்ரா...............
அதுலவுன்னததிவ்விய அணைமரிசுகுமாரா...............
ஆனந்தபாக்யமெற் கருளுநித்யவுதாரா............ அருள

---

இராகம் எமுனாகல்யாணி தாளம் திரிபுடை.

தோத்திரஞ் ஜெயதோத்திர நித்தியதோத்திரஞ் சுபதோத்திரம்
தோத்திரஞ் செயதோத்திர மெங்கள தூய யேசெனு நாதர்க்கே. தோத்
அன்றுகலிலேய நாட்டிலே மணமமையு மொருபெரும் வீட்டிலே
நின்று சலமதுவாக வருள்புரி நித்ய பரம நந்நாதற்கே. தோத்
நீதிலாமலையாயிரர் பசி தீர்த்தவன் பவநீத்தவன்
சோதிதனைச் சோகுவனுக்கு நிறுத்திநற்றுணைசெய்தபரஞ்சோதிக்கே.
ஆசறுதவ மோயீசற்கத ராழி தனிலளித்தாண்டவன்
லாசறு தனக்குயிரளித்தரு தவங்கள் பலபுரி நாதற்கே, தோத்
சகலபுவனமும் பணிய நின்றொளிர் சருவ ஜீவ தயாபரன்
இகலிலெலியனுக்குணவைக்காகையாலீந்தூரட்சித்தவேகற்கே. தோத்
போதமறையினையுரைத்தவனைந்து புரத்தை வருத்தியன்றெரித்தவன்
காதகன்றுயர் கண்டுபொறுத்து நற்கதியளித்த நங்கடவுட்கே. தோத்

---

இராகம் செஞ்சுருட்டி தாளம் ரூபகம்.

மங்களஞ் ஜெயமங்களஞ் சுபமங்களஞ் ஜெயமங்களம்
மங்களம்பிதாச்சுதனிஸ்பிரீத்து வல்ல ஏகவஸ்துக்கே. மங்களம்
நித்யானந்தபோகற்கே புண்ய நிமல நின்மயதேகற்கே
சத்யநற்பிரகாசற்கே பரமேசற்கே சறுவேசற்கே. மங்களம்
சகலசீவாதாரற்கே யாவுஞ் சமைத்தளிக்கு முதாரற்கே
அகில புவனமியாவும் படைத்த வாதிமூல நாதற்கே மங்களம்
புண்யசூக்மதேகற்கே விண்ணோர் போற்றும் த்ரீத்வ ஏகற்கே
மண்ணிற்பவத்தை யொழிக்கப்பிறந்து மரித்துயிர்த்த நம்வள்ளற்கே.
ஆறுலட்சண ஏகற்கே நம்மை ஆண்டளிக்குந் தெயவீகற்கே
தேறு மீனைந்துகற்பனையருள திவ்ய நம்ஜெகதீசற்கே. மங்களம்
முத்தர்கடொழு சீலற்கே மோட்ச மோனர்பணிபொற்காலற்கே
உத்தம கன்னிமரியயின்வந்த வுன்னத சேசுநாதற்கே. மங்களம்

கொச்சகம்.

சீரார்பலகலைகள் செம்மையுடனேயிலங்க.................
ஏரார்கோலேழுதனிலெந்நாளு மேவிளங்கித்.................
தாரார்திண்டேரதனிற் றங்கிவருங்காவலனே.................
பாராளும்மேலிரங்கிப் பன்னாளுங்காத்தருளே.................

இராகம் தோடி தாளம் அடதாளசாபு.

கருணைபுரிந்தெம்மைக்காப்பது னதுபாரங்.................
காவலானவானவா.................
மருவளர்சோலைசூழ் மன்புதுவைப்பதியில்.................
வளருங்கல்விச்சங்கத்தில் வாழுங்காவலானவா. கருணை

தீதுபுரியலகை செய்யும் வஞ்சகமறத்.................
தேவனருமறையின் திவ்யநன்னெறியுற.................
நீதனெமக்கு நன்னித்யசுகந்தர.................
நித்தமும்பரகதியி னிலைமையதனைப்பெற. கருணை

தூயபரமசேசுவின் சுகிர்தவழியைநாடத்.................
துலங்குமவன்புகழைச் சூழ்ந்துநித்தம்பாட.................
நேயமுடனவனன் னிமலவடியைச்சூட.................
நித்தமுமவனருளை நினைந்து நினைந்துதேட. கருணை

வல்லகலையறிந்து நல்லவழி நடந்து.................
மன்னும்பெரியவர்களுன்னும் படிபுரிந்து.................
புல்லர்தமையொழிந்துவல்லர்தமைத்தெரிந்து.................
புண்யம்பலவுஞ்செய்யக் கண்யமுடனேவுய்யக். கருணை

---

இராகம் அபரூபம் தாளம் ரூபகம்.

அருள்புரிஐயா எனக்கார்துணைமெய்யா அருள்
தெருண்மிகுந்துய்யா நீ செப்நவம்பொய்யா.................
இருளறு மர்ச்சீட்டலசாரெனப்புகழ்ச் செய்யா. அருள்

புண்யநேயாபுனிததூயா போற்றுநோயர்சகாயா.................
எண்ணிலாக்காயா ஏழைக்கிதஞ்சொலும்வாயா.................
விண்ணிற்சீலனே மிகவிளங்குங்கோலனே.................
விந்தையுறச் சுணங்கன்றெழுமின்னுங்காலனே அருள்

பன்னுநோயிற்பரனை வேண்டிப்பணியுநன்விசுவாசா.................
மின்னுமபராமடியில் மேவிவாழ்வாசா.................
நன்னயவானே யருள் நல்குமெங்கோனே.................
சந்யாசிகுளந்தன்னி லமர்ந்திதஞ் செய்யும்பானே. அருள்

தீயவலகையாலெந்நாளுந் தேவன்முறையைமீறி.................
பாயவுலகில்மிகவும் பாவியாய் நரகில்.................
சாயுமென்னையுன் திருத்தாளிற்சேர்த்திடச்.................
சமயமிது பரனுபயதாளைவேண்டியே. அருள்

---

# தேம்பாவணிப்
# பிரசங்கத்தின்பேரில் பாடல்.

சீர்கொளகிலாண்டஞ் சராசரமெலாஞ்சிறு திரண்டகந்துகமதாகத்-திரட்டிப்பிடித்தவொண்கைத்து நன்மரிபாற்றிரண்ட செம்பவளவாய்த்து நீர்கொளுலகோரமரரியாவருந்தொண்டுசெய நின்ற பொற்றுட்டுமிக்க நிறையருட்பொழிமலர்க்கட்டுநராகமகல நீண்டவன்சிலுவைபட்டுக், கார்கொடிண்டோட்டுழென்றுட்டெதுவதைப்பணிபுகைசூவிப் பேமுரியொழி-கட்செவிக்கோத்திவணவாழ்வினையொழித்துமேற் கதிவழிதனைப்பிடித்தபார்கொளுயர்சீர்வீரமுனிவன்சமைத்ததேம்பாவணியினுண்பொருடனைப்-பாவலர்களின்புறச்சங்கப்ப்ரசங்கம்பயன்பெறச்செய்வதற்கே

வீரமாமுனிவர்பேரில்

இத்தலமுற்ற மனித்தர்செழிக்க வினைச்சிலையிற்சிலையில்
அத்தனித்திபெத்துமறைப்பொருளற்புடையோருணரப்
பத்திமிகத்தெளிவுற்றெளிருந்தேம்பாவணியாகநல்ல
முத்தமிழிற்றருநற்றவவீரமுனித்தொழலெற்றெழிலே.

நச்சரவானசோதனைவையறமனுவாய்வந்த
அச்சுதனடியைப்போற்றியருள்வீரமுனிவன்றந்த
இச்செகமுழுதுமேத்துமெழிற்றேம்பாவணியின்றூய
உச்சிதப்பொருளைநாயேனுணர்ந்தவாறுரைப்பன்கேளிர்.

---

போனும் ஆண்டவர்பேரில் கொச்சகம்.

சொல்லரு நற்சேசு பரன்றூயமறைப்போதகர்கள்
எல்லவர்க்குமேற்றிறங்கொண்டிப்பதியிலேவிளங்கும்
நல்லஇளமேன்சுபோனுந்துரிசிப்பானெனும்பேர்
வல்லவெங்களாண்டவ நீ வாழுதியேயெந்நாளும்.

கட்டளைக்கலிப்பா.

சாந்துதூய்மை தவம்பொறைவாய்மையொண் சற்குண நிறைநல்லருளன்பொடு, எந்துபேரொழிலியாவுமுருவுதீவீறினன்மை யெமக்குறவேயிவண், போந்துதூயவின்மா மறைதன்னைப் புகல்வித்தென்றும் பொலிகளமேன்சுபோ, னுந்துரிசிப்பானென்றெளிராண்டவ நாளுமோங்கிநலமொடுவாழ்கவே ........................................ *

இராகம் கமாசு தாளம் ஆதி.

ஆசிதந்தருளெங்கள் தயாநிதியே
அருளொடுமெதுதிரு -ஆசிதந்தருளெங்கள் தயாநிதியே
தேசுலவியகிளெமேன்சு போனுந்துரிசிப்பார்என்னுந்
திவ்ய ரூபகருணும்பர வாண்டவ. ஆசி

அமல நிமலனிரு கமலவடி பணியுமேலா சீலா
அற்புதசற்குணவிற் பனமேவிய லோலா
விமலரதிஞர்புகழ் வேதோபதேச நன்னூலா
மேற்றிராணியா ரென்றெளி ராண்டவ. ஆசி

பரமபுனித திருமறை யுணாசெயு நவபோதா தாதா
பானுமதியுடையாளருண் மேவுநன் னீதா
வரர்சிரகரகம் பிதமிடு சற்குணவாரா தீரா
வாரிசூழும் புதுவாபுரி யாண்டவ. ஆசி

மண்ணுறு மிருளற மறையொளிதருதவ நேயா தூயா
மாகதிபெற வெமக்காதரவு புரிசகாயா
தண்பலகலை சிறியேமுணர்ந்திட வருமூலா மேலா
சாந்தப்பனென்னு நாமம்புனையாண்டவ. ஆசி

---

## கொதேல் ஆண்டவர் பேரில்

பொங்கு பூதலத்தோங்கும்பாகூரிற் புனிதநஞ்செயராக்கினி மாமரி
தங்குமற்புதவாலய மாமிதைச் சார்ந்து நல்லபிஷேகஞ்செய் தேயத்தில்
எங்களாண்டவனே திவ்யபூசை யிலங்கலங்ரத மாகவியற்றி நின்
செங்கையாசியளிக்க வெழுநதியாஞ் சீலராகிப் பெருகவருகவே.

வருகவற்புத ஞானியே - வருகதிவ்வியமோனியே
வருகபுண்யசொரூபியே - வருகசற்குணமாரியே
வருகவானுலகேணியே - வருகயார்க்கு மேற்றாணியே
வருகமாதவம் பூண்டவா - வருக எங்கொதேலாண்டவா.

☞ ஷி பாகூர்ஆலயவபிஷேகத்தைக்குறித்து ௬௮௪௯ ௮௨ பெவுறியே மீ ௨ ௨ அச்சிடப்பட்ட ௮௩௨ம் நெம்பர்மொனித்தேரிற்காண்க.

---

## தெப்போமியே ஆண்டவர்பேரில்

ஞானபானுவெனத்திகழந்தண நற்குணாலய புண்ய சம்பூரண
மீனெனத்திகழ் பூசுரர் நாப்பணோர் வேந்தனென்னவிளங்கும்வஜீகரா
வானமென்னுஞ்சுகநிலைகாட்டி மகிழுமோனர்கடம்மின் மேற்றாணியா
யானதீரவுதார தெப்போமியே ஆண்டவா நினதாசிதந்தாள்வையே.

முப்போதொப்பா முவமை மூப்பிளமை யீறிலிதன்
அப்போதருமறையோர் தோத்தரிக்குந் தூயவரோ
இப்போதிங் காண்டவரா யிலங்குமலங்கார திவ்ய
தெப்போமியேயெனுமேற்றிராணியரேவாழியவே.

நன்னகரென்னுங்கோயமுத்தூரில்வாழ் நற்கிறிசோபொலிசெனுமற்புத, பொன்னகர் மேற்றிராணியராந்திவ்ய புண்யரூப தெப்போமியேயாண்டவா, வன்னநின்திருப்பட்டத்தைக்கண்டு மகிழ்ந்திந்நாண்வலம்வந்துனை வந்திக்கும், இன்னபாக்கியம் பெற்றவரியாரெப்போ லிலங்கும்வேலை சூழிந்நிலந் தன்னிலே.................................... ✳

### துப்பிசுவாமியார்பேரில்

திணிமிகுபுவியோர் வணங்குமொண்வேந்தர் தேடும் விண்ணோர் தொழுமிறைவன், அணிசரண்மறைமீதிருக்குநன் மனங்கொளாசிலாத் துபிவிஸ் ஆங்குருநும், மணிமிகுந்தொளிர்தண்ணருநிழலண்டிமா நில ந்தன்னின்வாழ்ந்துமக்குப், பண்செயுஞ்சிறியேம் பிழைபொறுத் தெ ன்றும் பரிவுசெய்தாள்வதுங்கடனே..........................❊

### கொச்சகம்.

ஆதலாலிப்புதிய வாண்டதனிலெங்களுக்கு
நாதனருள்பேறறிவு நல்லொழுக்கம்பத்திநிறை
நீதமொளிர்பாக்கியமு நீணிலத்திலேபெருக
வாதரமோடெங்கரத்தாலாசிதந்துவாழ்குகவே.

### பாழ்சுவாமியார்பேரில்

சிறந்தநற்றிங்கடினகரனுடுபதத்தியருள் சேர்ந்தொழுகும்பரத்தி- சீர்சேகரத்தி நலமகலாவரத்தி யொளிர்திவ்ய சுதனுர்காத்தி, அறந்தந்த மரியம்மை யரவிந்தமலரடியையனவரதமுடிபுனைந்தே-யன்பறிவுபண் பினிய வற்புதப்பயிர்தழைய வருண்மாரி பொழியுமுகிலே; மறந்தருங் கொடியபவ வாரிதிகடந்துசுக வாழ்வுதர வருவங்கமே-வறியபரசமயரிரு ளற வீசுமறையொளியின் மாநிலத்துறுபரிதியே, திறந்தழைக்குங் கலை ச்சங்கச் சிரேஷ்டகுருதிவ்யபாழென்னுமுனியே - சித்தம்வைத் தெந் நாளுமுத்தமத்தொடுகருணை செய்யநினதக மகிழ்வையே.........❊

### லெயோதே சுவாமியார் பேரில்

சீர்கொண்ட நித்யபரி பூரணசதானந்த சேசுபரனருணனிபெறீஇ ச் - சென்மபதிதாய்தந்தை யுறவினை யொழித்துநனி தீமைதருமுலக வாழ்வைச் - சினந்துவற்சித்தவா மூன்றையுமொழித்தைந்து தீயபொ றியாம்பகைவணச்- செய்யதவவாளாற் சிதைத்தழித் தரியபவ தெண் டிரைதனைக்கடந்து, நார்கொண்ட தபசிக்குழாந்தனைச்சேர்ந்து மெஞ் ஞான நூலியாவுமோர்ந்து- நகுபுதுவையம்பதி செயுந்தவமிதென்ன வி வணுடியொருகுருவெனவுறீஇ- நனிநலம்பலசெய்வதோடு கிளைமேன் சுபோனுந்துரீஇசிப்பாவென்னும்-நன்மேற்றிராணியாராயவாண்டவரிட நவின்றுவிடைகொண்டெமக்கின்,றேர்கொண்ட தூயவொருநல்லொடுக் கந்தனைபிணைசத்தனுதினங்கடவுடா -ளேற்றிடச்செய்தெமக்கிருபோது மொண்மறையினின் பொருடனைத்தெரித்தே - யீறிலியினிலையிற்று ந ற்கதியினிலையிற் றியம்புதுற்கதியிநிலையிற் - றென்று தெளிவாப்பகர்ந்த னுதினமு மெங்களீடேற்றமதை யேவிரும்பும், ஆர்கொண்ட தூயலெ யோதே யெனும்புனித வடிகளே நுமதடிகளே - யண்டிவந்திங்குறையு மியாங்களு முமக்கென்னவருநன்றிசெய்யவல்லேம் - ஆயினு மியாங்க ள் செயுநன்றிவந்தனமதனையங்கிகாரஞ்செய்யுமென்-றமலமலியுகளசெ ந்தாமரைத்தாள் பணிந்தன்பினொடு வேண்டினமரோ...............❊

பவமலியுலகின்வினைச் சிமிழ்ப்படைந்து பரகதிவழியிதென்னுணரா
தவமலிகொடியவலகையோடிருளிலமிழ்ந்தியெந்நாளும்வேகாது
தவமலிசேசுக் கடியராயெமையிந்நாளினிம் சேர்த்தினிதாண்ட
தவமலிபுனித லெயோதேயென்றியம்புஞ் சற்குருநாளும் வாழுதியே.

மத்தியேன்சுவாமியார்பேரில்

பொங்குபேராழி முகிலினைநோக்கிப்போக்குதியெனது நீருவர்ப்பென்
றங்கதுகேளாதிருப்பினு மஃதேயவ்விதம் புரிவது கடுப்ப
விங்குறுமெமது பவப்பிணிபோக்க வின்மருந்தாகவே வந்த
எங்குருவே மத்யேனெனும் பெயர்கொளினிய மாமுனிவரோவாழ்க.

பர்பேசுவாமியார்பேரில்

கழுமர நிலத்து நிறை கறை நீரிளைத்துவிளை கதி நலப்பயிர்செய் யுழவோன் - கமலபத மறவாத கழசகுருவெனு நீத காட்சிதரு மறைவிளக்கை; வழுமற நிலத்துழலு மானிடர்மனத்திருளைமாற்றவேற் றுஞ்சிந்தையோய் - மாசுகுண பர்பேயெனும் பெயர்விளங்கவிம்மண்டலந் தோன்றுமறையோய், எழுமற நிலத்தாசர்தொடர்புடையவர்க்கென்று மேனையவர் கேண்மையெல்லாம் - எளிதிலடைவதுபோல நினதுதயையடையெனக்கேனையவராங்குருக்கள், பழுதற நிலத்ததயைபரிவுறவரச்செய் துன்பட்சமதுமறவாமலே - பண்பாமிவ்வருடப் பிறப்பினிலதொளி ராசிபணியுமெற்கருள செய்வையே............................ ※

லெவெய்யார்சுவாமியார் பேரில்

கலையெனுங்கடலிற் கதிதருவேதக்கான்புனலருந்தியென்றுநிலையிலாக்காமப் பகலினுற்கரிந்தநெல்லெனும்புவியுளோர் தழையத்தொலைவிலாவளியாற்பொழிதருமுகிலாந்தூலெவெய்யாரெனுந்துறவோய்,தலையினுற்றொழுமெற்குனதுமேலாசிதயவொடுதந்துவாழ்குவையே

முசேசுவாமியார் பேரில

குலக்கிளையொருங்கு நீக்கிக் குன்றமுங்காடுமேதம்
புலப்பகையைந்துங்கொன்று புதைக்களமாகுமென்று
வலத்தவமுயலப்போவார் வனத்துறு தென்போல்வார்க்கு
நலத்தகைசெய்யாநின்ற நன்முசே சுவாமிவாழ்க

லிமோம் சுவாமியார்பேரில

ஏர்மலியுலகமூன்று மோர்கணத்திலிசைத்தளித்தழித்திடவல்ல
சீர்மலிசே செம்பரனருமறையைத் தெளிவுறத் தெரித்தெவர்களுக்கும்
பார்மலிகவிஞர்நாத் தழும்பேறப்பல்புகழுறைதரப்பொலியும்
நார்மலிதூயலிமோமெனும் புனிதநற்குருவேநிதம்வாழி.

மோன்றி சுவாமியார்பேரில

பூமேவுபொறையுற்ற புண்ணியாவாழி, மாமேவுகனமுற்றமதிவல்லோய்வாழி, தூமேவு நிறையுற்றதோமிலாய்வாழி, தேமேவுமோன்றியாந்தேசிகாவாழி,தினமுமெற்கருள் செய்யுயர்தேசிகாவாழி.......... ※

ஆன்றிசுவாமியார்பேரில்

மாதவராகியவேதியரே வல்லமையுள்ளமடாதிபரே
போதகராகியமாமுனியே புண்ணியரேயெம்போல்வார்க்கே
ஆதரவேயெம் சிரேஷ்டரெனும் ஆன்றிசுவாமியானவரே
நாதரெனுங்குருமாமுனியே நாளுமேன்மேல்வாழுதியே.

புருமையாசுவாமியார்பேரில்

அந்தரம் புவிமுதலமைத்தவனை; வந்தனைசெய்யும்வழி வழங்கிநல்ல,
சிந்தைகொள்புருமையாதேசிகரே, சந்ததம்வாழி நற்றரணியிலே.

அருள்நாத சுவாமியார்பேரில்

பொற்பருள் பேரன்பொழுக்கம் புண்ணியஞ்சன்மார்க்கநிறை
நற்குணங்களோருருவாய் நன்மைசெய்யவுற்றதென
அற்புதமாகத்திகழ நல்லருணாதசுவாமியெனுஞ்
சற்குருவே மேன்மையொடு சந்ததமும்வாழுதியே.

---

கல்விசாஸ்திரமடத்தில் வெகுமானமளித்தபோது கூறப்பட்ட

## கீர்த்தனங்கள்.

இராகம் நாதநாமக்கிரியை தாளம் அடதாளசாபு.

வெகுமானம் பாரீர் வித்யாற் சித வெகுமானம்பாரீர்
மிகுமானமுடைய நன்னயமாதெய்வீகவரு
மின்னுந்தெப்போமியே யென்னுஞ்சிரேஷ்டகுரு
தகுமானபடியெங்கள் தொகுதிப்பகுதிகண்டு
தருமக்கல்விச்சங்கத்திற் பெருமைத்திறம்வகுக்கும்.
வெகுமானம்பாரீர்

துங்கப்புதுவையாளுந் தூய்சான்துபுராயென்னத்
துதிக்குங்குவர்னரொடு மதிக்குந்துரைகளொடுந்
தங்கக்குருசுரத்திலங்கத்தரித்ததூய
தகைமைக்கிளேமேன்சுபோனு மகிமைத்துரிசிப்பாராந்
தகைகொளாண்டவரும் பலதவநன்
நகைகள் பூண்டவரும் வேதாகமம்
எங்கும்விளங்கிடச்செய்யும்புரோவிக்கேர்
என்னுந்துப்பிசுவாமி பன்னுங்குய்ரோயென்னத்
தங்கும்லேயோதேகுருசுவாமி யருளானந்தர்
தழைந்த ஆன்றி ரிஜோம் விழைந்த செர்வூஞ்ஞருந்
தவத்திற்சென்றவரும் பரமஞான
சுகத்தில் நின்றவரும் முசேயென்னப்
பொங்கும்புகழ்படைத்த புரையற்றவரும்லிழோம்
புருமையாவுந்திறம் பூண்டவருள்நாதரும்
பங்கமிலாமற்பகர் புஷ்பநாதரும்
பலருமளிக்கநின்றிங்கெவருங்களிக்கச்செய்யும். வெகுமானம்பாரீர்

உன்னும்வேதசாஸ்த்ரம் ஓதுஞானசாஸ்த்ரம்
உரைக்குந்தத்துவசாஸ்த்ரம் உயர்ந்த பூகோளசாஸ்த்ரம்
மன்னுஞ்சோதிடசாஸ்த்ரம் வளருந்த்ரிகோணசாஸ்த்ரம்
வயங்கும்ப்ரமாணசாஸ்த்ரம் மதிக்குங்கணிதசாஸ்த்ரம்
வாசகப்பயிற்சி தேசப்பயிற்சி
ஞாபகப்பயிற்சி இவையனைத்துந்
துன்னும் ப்ராஞ்சுபாஷை தூயலத்தீன்பாஷை
துலங்குமிங்கிலீஷ்பாஷை துதிக்குந்தமிழ்ப்பாஷை
இன்னந்தேவகீதம் இணையில்லாதசங்கீதம்
இவைதவாவலரும் நவையினுவலரும்
இன்பாய்ப்போதித்து மாணுக்கரை
அன்பாய்ச்சோதித்து அவையவையிற்
பன்னுந்திறமறிந்தபாலர் சிலரைக்கூட்டிப்
பணிகளணிகள்பூட்டிப் பகர்சேன் செய்யக்காட்டி
மின்னுமலர்கள்சூட்டி மிகவுங்கைகள்கோட்டி
மேன்மையாங்களுயயும் பான்மையாகச்செய்யும்

வெகுமானம்பாரீர்

பாரினுயர்புதுவைப் பதியிலொளிர்கொலேஜிற்
பகரும்பெருஞ்சாலையிற் பன்னும்பூஞ்சோலையிற்
சீர்கொ ளணியுந்நத சித்ரப்பந்தலதனிற்
சிறந்தமுனிவர்வாசித் தறைந்தபடிவகுப்பில்
தேர்ந்தவர்நாடத் தந்தையர்களை
யோர்ந்தவர்தேட மூடர்கள்வாட
ஏர்கொள்தங்கப்பொறிகளிட்டுக் கட்டி ரேக்கிட்
டிலங்கும்புத்தகங் கொடுத் தலங்கல்தனைத்தொடுத்துத்
தார்கொளணிபுயத்தி லார்வமுடனணைத்துத்
தந்தைமார்கள்தன்ன அந்தமாகப்பன்னத்
தகுகீதம்படிக்கச் சிப்பாயிகள்
தகுதம்பூரடிக்க இப்படியாகக்
காருள்ளளவு மெழுகடலுள்ளளவுமிரு
கதிருள்ளளவு முயிர்க்கணமுள்ளளவுமிக
நார்கொள் சேசுபரநாதவருள்செய்யென்று
நாடித்துய்யர்சொல்லத் தேடிச்செய்யுநல்ல, வெகுமானம்பாரீர்

---

இராகம் கேதாரகௌளம் தாளம் அடதாளசாபு.

அதிநூதன வெகுமதிசெய் விநோதத்தை
அறையக் கேளீர் கேளீர் அதி
துதிசேர் தெப்போமியே தூய சிரேஷ்ட குரு
துலங்குங்கல்விக் கழகத்திலங்க வெங்களுக்கொரு. அதி

மதிக்குந்தூய்ரான் துபுராய் மன்னன்குவர்னர்நேராய்
துதிக்குங் கிளைமேன்சுபோறுந் துரிசிப்பாருக்குச்சீராய்
கதிக்குந் துரைகள பன்னக்காட்டி முனிவர்துன்னக்
குதிக்கும் பாலகர் மின்னக் கூவதிசயமென்ன. அதி

முத்திவழியைக்காட்டும்மூடப்பவத்தையோட்டும்
சுத்தபொருளை யூட்டும் தூயபுகழைக்கூட்டும்
வித்தையதனைத்தேடி விரும்பும் பாலரைக்கூடி
மெத்தப்புகழ்கொண்டாடி மின்னுமாலைகள் சூடி. அதி

மன்னும் ப்ராஞ்சுலத்தின் வயங்கு மிங்லீசுதென்
துன்னுந் தமிழும்பன் தூயசங்கீதமின்
னின்னகலையறிந்திங் கியம்புவோரைத்தெரிந்து
வன்னவாசிபுரிந்து வயங்கு மலர்சொரிந்து. அதி

---

துப்பிசுவாமியார்மடத்தில் வெகுமானமளித்தபோது கூறப்பட்ட

## பாடல்கள்.

சீரிலகு மூவுலக மும்படைத் தருளமல சேசெனும் பரமனருளாற் சிங்காசனத்தேறி மகுடாபி ஷேகனுய்த்திவ்ய செங்கோல் நடாத்துந் தீரனப்போலெய மெனுஞ் சக்ரவர்த்தியின் திவ்யஞானப்பிள்ளையாய்ச் செகதலத்தோங்கு நம்புதுவைநகராளுஞ்சிறந்தபோந்தாங்குவர்னரும்; பாரிலகு சென்னைமா நகரில்வாழ் கஸ்தோரிபட்டணமெனுங் சதித்த பதியின்மேற்ராணியாம் பெனலியாண்டவரு நாம் பன்னுதிரிசிரகிரியில்வாழ் - பாங்குறு தமாஸ்பட்டணத்து மேற்ராணியாம் பகர்கஞேஸ் ஆண்டவருமிப் - பதிபுகழ் மைசூரில்வாழ் கனமுசேன் மேற்ராணிபகர் ஷிர்பொறு ஆண்டவர், எரிலகு நப்புதுவைதன்னில்வாழ் தெர்மோப்பிலென்னு நகர்மேற்ராணியா - மினியகொதேலாண்டவர் கோயம்புத்தூர் வாழ்கின்ற விசைகொள் கிறிசோபொலிசெனு - மிணையில் பொன்னகர் மேற்றிராணி தெப்போமியேயென்னு மைந்தாண்டவருடன் இப்பதியிலோங்கு துரைமார் முனிவரறிஞர்களோ டெவர்களு மியம்பூதுறப்,பேரிலகு துப்பிமாமுனிவரன் மடத்திலகு பெண்கள் கன்யாஸ்திரிகளாற் - பிறங்கு செந்தமிழ்மறை நன்முறைகற்பிலக்கணம் பீடுறுமில்லறவொழுக்கம் ப்ராஞ்சு பாஷையு முணர்ந்தாடவர்கடங்களைப் பேதைய ரென்றுதவண்ணம் - பேசுமிச்சிறுமியர்செய்திவ்ய சல்லாபமோ பெருமிதமளித்த தம்மா.................................*

கட்டளைக் கலித்துறை.

போந்தாமெனுங் குவர்னேர்துரையேபுதுவைக்குநல்ல
வேந்தாமெனச்சொலித் தண்ணுமையாம் பறைவீறடைந்து
தாந்தாமெனப்பெரும்பாக்கியமுற்றவர்தாரணியில்
நாந்தாமெனவிவற்றந்தானப்போலெயநல்லிறையே.

கொச்சகம்.

மின்னுமெழிற் செந்தமிழான் மெய்ம்மறையு நன்முறையும்..
பன்னுமுலகத்தியல் புப்பாவையருங் கண்டுய்ய ..............
உன்னுமருந்தவத்தினரிலுயர்ந்த துப்பிமாமுனிவர் ............
என்னுமிவர்தாண்மலருக் கெந்நாளுந் தோத்திரமே ........

கட்டளைக்கலிப்பா.

வாழ்கமெய்ம்மறை மன்னர் செங் கோன்முறை வாழ்க நம்புதுவாபுரிம ன்னவன், வாழகவாண்டவரென்னு மேற்ராணியர் வாழ்கவேதியரோடு பதேசியர், வாழ்கமாதுரைமார்களறிஞர்கள் வாழ்கசெந்தமிழ்வாணர் ந ன்னுவலர், வாழகதுப்பிமுனிவன் மடத்தினின் மன்னும் பெண்கள் மற் றோர்களும்வாழகவே ..........................................

மண்ணிறைக்கடியராயான் மாவிணைவளர்க்கும் பெண்கள்.....
விண்ணிறைக்கடியராகி வீடுபெற்றுய்யவேண்டிப் ............
புண்ணியமறையின்றூய பொருளெலாந் தமிழிற்காட்டும்....
எண்ணரும்புகழார் துப்பியென்னுமாதவனேவாழ்க............
இறையவற் கினியராக விருங்கலைமாதர் கற்பான் ....................
மறையவனென்னுந்துப்பி மாமுனிமடத்திலுள்ள..................
நிறையுறு கன்னிமாரும் நிமலன்வேதத்தையோதிக் ...............
குறையறவிளங்கும்பெண்கள் குழாமுமற்றையரும் வாழ்க..........

---

பலசமயப்பெண்களுக்குப் பள்ளிக்கூடம் ஏற்படுத்த
சவராயலு நாயகர்செய்தபிரசங்கத்திற்கு முன்கூறிய

## பாடல்கள்.

போந்தான் குவர்னர் பேரில்

தன்னுயிரெனவே மன்னுயிரனைத்துந்தாங்கி மாநிலமெலாம் புகழப் பொன்னுலகெனுமிப்புதுவையம்பதியைப்புரந்துசெங் கோலினிதோச் சி, வன்னநன் மடவார்தமக்குநற்கல்விவான்பொருடரவருண்மிகுந்து, ம ன்னிவந்தொளிர்பொந்தானெனுங்குவர்னர்மன்னனும்வளனைப்பணிந்து

கொதேல் ஆண்டவர் பேரில்

தண்காலருள் செய்பரனிருசெஞ் சரணம்புயமொண் முடி விளங்கத் தங்கக்குருசேருரம்விளங்கச் சகலவழகெங்கணும்விளங்கப் பண்கால்சக லகலைகளெலாம்பகர்நாவதனினிதம் விளங்கப் - பாணரியம்பும் பாக்களி லே பன்னாளுந்தம்புகழ் விளங்க, வண்கால்புரவுத்தொழிலொருங்குவய ங்குசெழுஞ்செங்கரம் விளங்க- வாய்மையருளன்பிதமனைத்தும்வதனம தனின் மிகவிளங்க, விண்கால்பெருக்கஞ்சிறிதென்ன வியன் சீர்காட்டும் புதுவைநகர்மேற்றிராணியாரொன்னமிளிர் கொதேலாண்டவர்த்தொழுது

துப்பிசுவாமியார் பேரி

நல்லருளொழுக்கஞ் சுகுணமொண்சீல ஞானமாதவங் கனமேன்மை வெல்லருந் தேற்றம்பொறைநிறை வாய்மை விளங்குமன் பிவையெலா

மொருங்கு, வில்லுருவெடுத்திங் கெழுந்துல கோர்கண்மிளிர்துப்பிசுவா
மியென்றெருபேர், சொல்ல நின்றவரோடயர்துரைமார்களுயே நற்பெரிய
னைவணங்கி ........................................................*

பிரசங்கத்தின் பேரில்

போற்றுமெழிற்கல்விவளமிஃ தென்று மஃதுணரிற் பூவைமார்க, டே
ற்றமுடனறமரங்கண்டெழின்மனைக்கோர்தீபமெனத் திகழ்வாரென்று
மாற்றன்மிகுபுலவர்சொற்றகூற்றுகள்சிற்சிலவிங்ஙனறைவேனென்னை..
ஏற்றவறிவினர்தூற்றூரஃதிலார் தூற்றுதற்கோரேதுமுண்டோ.....*

☞ இதைக்குறித்து ௲அசுரு-ம். ௵ ஒக்தோபர்௴ ௩௨ அச்சிடப்பட்ட சந்தி
ப்பிராஞ்சுதலங்களின் நூதன விளம்பரப் பத்திரிகையிலும் ஷை௴ ௬௨ அச்
சிடப்பட்ட ௭௧௨ நெம்பர் மொனித்தேரிலும் விவரிக்கப்பட்டிருக்கின்றது.

---

சவராலு நாயகர் மெதாயில் பெற்றுக்கொண்டபோது கூறிய

## பாடல்கள்.

தூய்ரான் துபுராய் குவர்னர்பேரில்

பொற்றகடெனு நன்மெதாயிலெற்கருளப் புதுவையம்பதியினிலயத்தி
ன், முற்றநற்றவர் கற்றவர்துரைமார்கண் முறையொருங்கிலங்கு மிவ்வ
வைக்கோர், விற்றயங்கணியாய் மகுடசேகரனாய் விளங்குசெங் கோல
னாய் விழைவோ, டுற்றதூய்ரான் துப்ராயெனுங் குவர்னரோங்கலினு
பயதாளினுக்கும் ........................................ *

கொதேலாண்டவர் முதலியவர்கள்பேரில்

மாமேவுவெயின்மணிகுயிற்றியொளிதருமிமையவான்முடிமிலைந்தணி
செயும்-மார்பிடைப்பொற்குருசணிந்துதவ நிதமோங்கமன்னு செங்
கோல்பிடித்து- வளருனதசுவர்னபொர்பீடிகையின்மேவியிவ்வறியசிறி
யேனுரத்தில்-மாண்பொறிபொறித்தபொற்றகடணிந்தணிசெய்தவல்ல
மேற்ராணியாராந், தூமேவு நங்கொதேலென்னுமாண்டவரணிதுணைத்
தாட்கும்வீரமுனிவன் - சொற்றதேம்பாவணியையச்சிட்டிவ்வவை நனி
துதித்திடவெனக்களித்த துப்பிமாமுனிவரிருதாட்டாமரைக்குமித்தூய
வேதியர்கழற்குஞ்-சுகுணமீனாட்சிசுந்தரதேசிகற்குமணிதுன்னுகவி வா
ணருக்கும், பூமேவுசோலையப்பாசாமியென்னுநற்பூபற்கு மென்பாவி
னைப்-போதவு மகிழ்ந்த வானந்தராயப் ப்ரபல பூமான்றனக்குநல்ல-
பொன்னுராஜேந்ரமகிபதிவலவனுக்குமென் புனிததாய்மாமனீன்ற -பு
தல்வனுநேய ஐயிலுநாயகற்குநற்போதமிகுசுகிர்தநாதப், பாமேவு வ
ளளற்கு மன்பன் முத்துச்சாமி பாக்கியவுதாரற்கும் யான்- பன்னு பிர
சங்கமதிலார்வ நனிகொண்டு பொற்பணியணிசெய் வலவனெனவிப்-
பதிபுகழ்மலைக்குழந்தைப்பத்தனுலவ்வணி பண்ணுவித்தெற்களித்த-
பண்பினர்தமக்கு நன்னன்றிவந்தனமிகப்பரவியஞ் சலிசெய்வனே.

☞ இவ்விசேஷங்களைக்குறித்து ௲அசுஅக.ம். ௵
நூவேன்௴ ௭௨ அச்சிடப்பட்ட ௩௧௯-ம். நெம்பர் மொனித்தேரைக்காண்க.

---

போந்தான் குவர்னரை மகாநாடு கண்டபோது கூறப்பட்ட

## பாடல்கள்.

நல்லகாலமிப்பூமிக்கு வந்தது நாங்கள் செய்தவமும்பலிப்புற்றது....
அல்லல்தீவினையாவுமொழிந்திவண்டுமெங்கட்கருஞ்செல்வமுற்றது
சொல்லருங் சனராஜகுலாதிப தூயநேயசம்போகதுரைத்தன.......
வல்லநல்லகுவர்னர்போந்தானெனுமன்னவன் புதுவைக்குவந்துற்றதே.

மதிவளர்போந்தானென்னு மன்னவரிவர்தாந்தாமென்.......
றதிதுதிமுழக்கியார்க்கு மரியதண்ணுமைமற்றைப்பூ.......
பதிகளையிவற்கொப்பாகப் பன்னுதல்தகாதகாவென்........
றிதந்தருமுகமன்கூறி யேத்துந்தாளங்களமன்னு..........

திங்களின்மீதெழு செஞ்சரண்மாதருள் சேசுபிரானருளாற் - சீர்வளர்
நப்போலெயமெனு மிறைவன்திருவுத்தரமேவிப், பொங்குதடம்
பணைவாவிகள்பொழில்பொலிபுதுவையெனும்பதியிற்-புகழ்பெறுகுவர்
னர் போந்தான் போந்தான்பூபதியாகவெனச், சங்கமுழங்கவருங்கன
யோகாதருமந்திகழ்போகா - தாயினுமன்பெம்மீதுசெலுத்துந்தயைமி
குசெங்கோலா, மங்குலெனுங்கரனேதயை சூழ்மகுடாதிபனே யுமுனர்
வளமுற வறியவர்துயரற நரபதிவாழுதி வாழுதியே............*

☞ ௲௮௱௬௰ ௲௨ தெசம்பர் மீ ௧௨ ௨ பரீசுபட்டணத்தில் அச்சிடப்பட்ட ரொவிதுய்மோந்துகொலோனியாலென்னும்புத்தகத்தில் அ௮௧ எட்டில் இப்பாடல்கள்பிராஞ்சிற்பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன.

---

துய்பிளேக்சு குவர்னர்சிலைவைத்தபோது கூறப்பட்ட

## பாடல்கள்

கட்டளைக்கலித்துறை.

முற்காலத்தோன்றுர்க்கிடி யேறெனநின்ற மூரிமன்னர்...........
பிற்காலத்திலையெனுஞ் சொற்பெருமனம்பேருலகைத்...........
தற்காத்த துய்பிளேக்செனுமிந்த வேந்தனைத்தந்ததுநம்...........
நற்கால வேந்தலினிமேலொன்றுர்க ணமக்கிலையே..............

மூளாச்சினங்கொண் டடங்காப்பகைவர் முடித்தலையைத்.....
தாளாற்றகர்க்குந்திறன்மன்னன் மாண்டுமித்தாரணியில்.....
மாளாதவனெனுஞ்சொற்கேற்ப துய்பிளேக்சுமன்னனிந்த....
வாளார்நப்போ லெயராஜாதிபனிடமன்னினனே..........

புறங்காட்டியோடும்படி யொன்னலார் பெரும்போர்க்களத்தில்......
உரங்காட்டுந் துய்பிளேக்செனுமிந்த வீரனொளிர்புஜங்கள்..........
மறங்காட்டுநெஞ்சந் திறங்காட்டுஞ்செங்கைவழங்கு நற்பொன்......
நிறங்காட்டுமாமுகம் பேரருள்காட்டிடு நித்தமுமே...............

மன்னுந் துப்பிளேக்சுகான்மான்சுபதார்நவாபுடனே.............
மின்னுமுசாபர்சங்பக்தூரொனும் பட்டமேவநன்கு...............
துன்னுமகாதிறஞ் சூழ்டில்லிபாக்ஷாவுஞ் சூட்டவிவற்...............
கின்னும்பெருந்துதி யுண்டோ புவியிலிசைப்பதற்கே.............

வெண்பா.

சீரார்கரோன்முதனந்திவ்ய போந்தான்வரையிற்...........
பாரார்குவர்னர்நாற்பத்தொருவ-ரோராரும்...............
இன்னவர்கடம்மி லிருந்புகழ்பெற்றோ னெவனென்
றன்னவல்லோர்காண்கவிதை யோர்ந்து...............

கொச்சுகம்.

உள்ளபல நன்னலங்க ளொருங்கியற்றோர் பிறரொன்று..............
வள்ளல்நப்போலெயராஜன்மதித்துணர்ந்தே தன்ஞானப் ............
பிள்ளையெனும்போந்தானைப் பீடுறவிங்குய்த்ததனுல்..............
தள்ளருஞ்சீர் துய்பிளேக்சு தார்வேந்தைக்கண்டனமே.............

கட்டளைக்கலிப்பா.

தாரிலங்குமலையெனுந்தோளினன் றாழ்ந்திடாதைத் தறிக்குமொண்வாளினன், போரிலங்கு முயர்நாமவேலினன்போற்றும்வீரக்கழலணிகாலினன், சீரிலங்குபசும்பொற் செங்கோலினன் செப்யமாமுறை செப்பு நன்னூலினன், ஏரிலங்குந்துப்ப்ளேக்செனு நாமம்பூண்டெங்கள்வேந்தென்றிலங்குமிவ்வேந்தலே ................................ *

விருத்தம்.

இலங்குநங் குலங்கட்கென்று மிடறுறுதினிதுகாத்த...............
வலங்கொண்மா குவர்னரொன்னுமன்னரிற்சிறந்தவேந்தன்..........
துலங்குதுப்பிளேக்சென்றியாருந்துதிக்க நல்லுருவாய்நின்ற........
நலங்கொளிம்மன்னன் சீர்த்திநாளு மேன்மேலும் வாழ்க.........

☞ இவ்விஷயத்தைக்குறித்து ௲௮௱௭௰௮ மூலியேத்துமீ ௨௨ உ அச்சிடப்பட்ட ௲௩௨ நெம்பர் மொனித்தெரிற் காண்க

---

## லோதுதுரைபேரில்

நீதிமன்னர்க்கதிபதியே நீணிலத்தோர்க்காதரவே.........
வேதியரெலாம்புகழும் விற்பனனே புண்ணியனே........
கோதகன்றலோதுதுரைக் கோமானே பாவலனென்.......
மீதிரங்கியருள்புரிந்தாய் மேன்மேலும்வாழுதியே.........

---

தஸ்கோனுகேர்துரை பேரில்

புண்ணியதஸ்கோனுகேரொனுஞ்சங்கப்புலவரிலோர் புலவனன்கு.....
பண்ணியலேசெக்கோதுப்பாதரொலானெனும்ப்ராஞ்சுப்பனுவலிந்த
மண்ணியன்றோர் மனமகிழ்வித்தறிவுணர்த்திமாசகற்றிவயங்குந்தூய
விண்ணியலுமின்பசுகமடைவதற்கு வழிகாட்டும்விளக்கமாமே.....

மின்னுசுடர்க்கெதிரான சுடரில்லையிறையவனால் விளம்பப்பட்ட.....
பன்னுமறைக்கெதிரான மறையிலைதஸ்கோனுகேர் பரிவிற்செய்த,
துன்னுபெருஞ்செயவீர சூரரொலானெனும்புனித சுகுணன்காதை...
என்னுமுயர்நூற் கிணையாகிய நூருன்மற்றொன்றெவ்விடத்துமின்றே.

வளங்கொளணிபரீசுமன்னர் மாதவர்வேதியர்மறைநூன் வல்லோர்பல்லோர்,களங்கமின்மேற்றாணியரோடிமேற்றிராணியருங்கருதினரும்
உளங்களித்துச்சிரமசைக்கதஸ்கோனுகேர்துரையாமுயர்ந்தோன்செய்த
விளங்குமின்நூன் முன்னர்மற்றை நூல்களெலாஞ் சுடர்முனமின்மினியாமன்றே..............................................*

நாவலர்நாவினுக்கினிக்குங் கேட்டவர்தஞ்செவிக்கினிக்கு நன்குணர்ந்த
பாவலர்தமனக்கினிக்கும்பாஸ்பிரனேயென்னுமெழிற்பதியிற்சீர்த்தி.
மேவமலாலோசனைச்சங்கத்துறு தஸ்கோனுகேர் விளங்கச்செய்த....
பூவலயம் புகழ்ந்திடுலே செக்கோதுப்பாதரொலான் புனிதநூலே...

தெள்ளமுதோ நறும்பாகோ தீங்கனியோசெந்தேனோ.......
உள்ளொளிருஞ்செஞ்சுடரோ ஒதறிஞர்மணிப்பூணோ........
அள்ளுமணமாமலரோயாதெனயானோதுவன்சீர்...............
கொள்ளுநந்தஸ்கோனுகேர் கோமான்செய் நன்னூலே.........

---

## ழுலியேன் வேன்சோன் துரைபேரில்

சோகுவனைச் சலமோனையோபென்போனைத் தூயமோயீசனை நீர்துளிக்கும்வானைப், பேசருந்தன்வெற்றியினாற் புத்திதன்னாற் பிழையிலாமெய்யுரையாற்பிரிவிலாத, சேசுபரனருளானற் கொடையான்வென்றுதிகழ்பரீசெனு நகரிற் சிறந்துவாழ்நம், நேசழுலியேன்வேன்சோன் துரையாம்பூபனீடூழிகால நன்கு நிலவிவாழ்க.....................*

எஞ்ஞான்றுங்கலைகளுணர்ந் திலங்குமொமமே ரொனும்புலவனிவன்றனென்ன, வஞ்ஞானவிருளகலப்பிராஞ்சுமன்னர் முகாம்புயங்களலறத் தூயமெஞ்ஞானந் திகழ்தருதன்குலாம்புதியிற்பிறந்தென்றும் விளங்குமோர்நற், செஞ்ஞாயிறனையழுலியேன் வேன்சோன் பூபனென்றுஞ் சிறந்துவாழ்க...............................................*

உலகொரு மூன்றுங்காக்குமுயர்பரனருளாலெங்கும்........
பலகலையாவுந்தூய பசுந்தமிழ்ப்பாவுமோர்ந்தங்..........
கலகிலாப்புகழ்சுமந்தே யறிஞர்நாவதனின்மேவி...........
யிலகிவாழ்ழுலியேன்வேன்சோனெனுந்துரையிதனைக்காண்க.

---

## எஸ்கேர் துரைபேரில்

செல்லாரும்பொழிற் புதுவைமாநகரினன்னீதிசெலுத்துந்தூயா.....
எல்லாரும் புகழெஸ்கேர்துரையே சாதிப்பரிட்சையெனு நூலொன்று
வல்லாரும்பல்லாரும் வந்திக்கச் சிந்திக்கமகிழ்ந்து போற்றச்.........
சொல்லாரு நீசெய்தச்சிட்டதைக்கண்டுள மகிழ்ந்தேன்சுகுணவானே.

முன்னூலாந் தொன்னூலு மூதறிஞரோதிய நன்முறைமை நூலும்...
பின்னூலுங் குலநூலும் பேசுபலசமயமதிற் பிறந்தநூலும்........
பன்னூலு முணர்ந்து நீ செய்சாதிப் பரிட்சையெனப் பகருமிந்த....
நன்னூலைப்பெற விரும்பாரிரும் பாரிலரும் புலமைநாடாதாரே......

புண்ணியதஸ்கோஜகேனொனுஞ்சங்கப்புலவரிலோர்புலவனன்குபண்ணியலேசெக்கோதுப்பாதரொலாமெனனும்ப்ராஞ்சுப்பனுவலுக்குக்கண்ணியவேன் சோன்முழியேன் கருதியெற்குவரைந்தபடிக்கவிகளோங்குந், தண்ணியசெந்தமிழதனிற் சமைத்தேன் எஸ்கேர்துரையாந் தருமவானே

---

உழேன் சிசேதுரைபேரில்

இறைவரி விசாரணைக்கிங் கிலங்கதிபதியாய்வந்த
நறைபுகழ் உழேன் சிசேயாஞ் சற்குணதுரையே நின்றன்
முறைவழா நெறியாற்கல்வி முதிற்சியாலுமுனர்க்குற்ற
குறையெலா மிரவியைக்காண் குளிரென வகலுமென்றே.

வந்தன நின்பா லெங்கள் வந்தனந் தந்தனம்பின்.................
இந்தனமென்னக் காய்ந்த விளங்கதிர் முடியைக்கொண்டு..........
வந்தனமிதனை யிப்பார்மன்னற்கு வழங்கி யெங்கள்..............
சிந்தனைமகிழ்வித்தென்றுஞ் சிறந்து நீ மேன்மேல்வாழ்க.........

கனிகளினினியசெந்தேன் கசிந்தெங்கு மூரும்பாகூர்
தனிலுழுதமிழப்பாவாணன்றன்மை நோக்காதவற்கு
நனியிடையூறுசெய்வோர்நாட்டிறைக்கதிபரானால்
இனியுழேன் சிசேயென்றன்னுனியம்பிடாதென்செய்வானே.

---

## தெபாசன் குவர்னர்துரை

குஷ்டநோயாளிகளுக்குக்கட்டினமண்டபத்தைக்குறித்துக்கூறப்பட்ட

# உலுத்தர்பத்தர்சல்லாபம்.

கொச்சகம்.

அணிதிரையின் கரையமர் சந்நாசி குள்ந்தனிலிருக்கும்
பிணியர்களுக்காதரவாப் பேதையேன் சொலும்பாடல்
திணிமிகுசெந் தமிழ்ப்புலவர் செவிக்கினியாதாயினுமுன்
பணியணிதாட் கினிக்குமெனப் பாடுகின்றேன் மாமரியே.

உலுத்தன் கவி.

கருதரு மிக்கடற் கரையிலென்றுங்காணுக் கவின்பெறுமித்தேரிலுள்ள கன்னியார்காண், மருவுமிந்த வாலயத்தில்வாழ் வோரியாரிம்மண்டபத்திலுள்ளவரியார் நீயு மார்காண், பொருதிரையி னெலியடங்கப்பரனையன்பாப் போற்றிவரு மிவரியாரிப்புதுமையெல்லாந், தெரிதர நீ யென்றனுக்குவிபரமாகச் செப்புவாயுள்ளபடி செப்புவாயே......... *

பத்தன் கவி.

தேரிலுள்ளகன்னியோ பரனையீன்றசெயமோட்ச ராக்கினியிச் சினகரத்தில், ஏர்பெறவாழ்பவர்லசாரொனுமர்ச்சீட்டரிலங்கு மிம்மண்டபமதனிலிருப்போ ரிந்தப், பாரிலுள்ள பிணியாளரியானுமன்னன் பரவியிங்கு வந்திருப்போர் பசியால்நோயால், ஆர்துயரின் மூழ்குமெளியோர்கடம்மையாதரிக்கும் புண்ணியர்களாகுமையா ...................... ※

உலுத்தன் கவி.

புண்ணியரோவிவர்களல்லவல்லவிணுப்பொருளையெளியவர்க்கழித்துப் பூமிதன்னில், நண்ணுமெளியவராகத் தாமுமாகினால நகைத்திடப்படுவோர் நாமேயென்றால், எண்ணரியபொருளபடைத் தேன்றனவானென்றேயெத்திசையும்பேர்படைத்தேனிவரென்பெற்றார், கண்ணறியாக் கதியையிவரடைவா ரென்றுகழறுவையோவோகோவீண்கதையிதன்றே

பத்தன் கவி.

அருந்தவோருண வில்லாருக் கரியநல்லுணவாய் நோயில ..........
வருந்துவோர்க் கருமருந்தாய் மனையிலார்க் கிடமாயெல்லாந்..........
தரும்பெருமன்புவாய்ந்த தாய்தந்தையிலார்க் கன்னாராய்ப்..........
பொருந்துமிப்புண்யர் பெற்றபுகழுனக்குண்டோ வையா..........

உலுத்தன்

இராகம் நாதநாமக்கிரியை தாளம் சம்பை.

புகழுனக்குண்டோவென்ற புல்லனே யெந்நாளும்..........
இகழுவாரெல்லோரு மெளியனை யென்றறிவாய்..........

பத்தன்

அறியாத மூடர்களா மவனையிகழ்வோர் கதியை..........
வறியபிணியாளர்விற்கும் வணிகனென வறிவாய்..........

உலுத்தன்

வணிகரிவரென்றுசொன்ன வறியா வோவெறியாகேள்..........
பிணியர்தமைக்காப்பதினற் பெருமையுமுண்டோசொல்....

பத்தன்

சொல்லருநஞ் சேசுபரன்றுன்பவெளியவர்போலே..........
நல்லுருவுற்றாரவரை நாமதித்தற்கன்றே..........

உலுத்தன்

மதிப்பதென்னப் பெரும்பிணியில் வாடுகின்றபாவிகளைக்....
கொதித்ததட்டியோட்டிவிட்டாற் குவலயத்துக்கழகாம்.....

பத்தன் கவி.

குவலயத்துக்கழகென்றிப் புதுவையிற் செங்கோன் முறையின்படியாண்ட குவர்னரொன்னுந், தவமலி தெபாசனந் நாள்கட்டிவைத்த தருமமடம் பெருமை பெறத்தக்கதாகப்; பவமகற்றுந் தீரியோஞ் சுவாமியென்னும் பண்ணவன் மேற்ராணியர்க்குப் பகுத்துனாக்க, நவமலிநம்மாண்டவர் தங்கண்காணிப்பில் நடத்தவேண்டிய முறையை நன்றுவெண்ணி..

இப்பதியை யாளுகின்ற துரைகட்கெல்லாமிந்நலமே நன்னலமென்றினி தாக்கூறி, ஒப்பரியவேன்சாந்தெபோலென்பாரினுயர்சபையார் விசாரணையினெழுங்கிற்சேர்த்தார், செப்பரியசேன்ழோசெப்சபையிலுள்ள சிறந்தகன்னிமார்களு நற்றிறமையுள்ள, அப்பன் தூய்ரான்துபுராயென்று சொல்லு மரியகுவர்னேர் மதாமன்பின்மிக்க..................

நீட்டுபுகழ்மதாம் பிறியோன்மம்சேல்லக்ரான்ழ்திவ்ய குணமுள்ளமதாமோன்பிளான்கான், மேட்டிமை சேர்மற்ற மதாமார்களும் மவ்விண்ணுலகவிளைவறுக்கமிகுநோயாளர், நீடுகரமெனு நிலத்திற் பொருளைவித்தா நீங்காமல் விரைப்பரிது நினக்கோகுற்றம், நாட்டி லெளியவர்க்குதவிசெய்யா வுத்தா நானுரைக்கும்புண்ணியத்தை நன்றுக்கேளாய்..

இராகம் துசாவந்தி தாளம் ஆதி.

புண்ணியந்தேடாத மூடா நோயாளிகளை...................
எண்ணமறப் பேசலாமோடா..........................
விண்ணுலகானந்தசுக நண்ணுவோரெளியருன்போல்..............
எண்ணுமுவுத்தர் நரகமண்ணைகளாவார்களடா..................

புண்ணியம்

நிறைசெல்வமுடையானை நோய்துன்ப மணுகாதோ நினைத்ததெல்லாம்வருமோ, குறையாதோ நாளவர்க்கு மரணமென்றுங் குறுகாதோ வவர்செல்வம், பிறரிடம்போகாதோ பிறந்ததோ வவரோடே..........
இறக்குமோ வதுகூடே யின்ன மறியா யிக்கேடே...............

புண்ணியம்

ஒப்பரிய குணத்தோர்க்கு மைம்பாதகத்தையு பதேசஞ்செய்யுமடா..
செப்பரிய துயர்க்கெல்லாந் தாயாகுமடா தீவினைக்கோர் செவிலியடா.
இப்பொருள்கொண்டோர்க் குறக்கமெப்பொழுது மில்லையடா.......
அப்பொருளைக்கொடுப்பது தப்பிதமென் றிடுங்கேடா.............

புண்ணியம்

எத்தனைபேர் கையில் முன்னமிப்பொருளிருந்ததவரெல்லாரு மெங்கேயடா, சத்தமின்றி யுன்னையது விட்டுப்போகாமுன்னமே தருமங்களைச் செய்யடா, பித்தனேயுனக்குப் பொருளெத்தனை யுண்டாயினு நீ.....
யத்தனை யரிசியல்லா லித்தனையு முண்பாயோடா.................

புண்ணியம்

முன்னுரைத்த புண்யவான்கள் காய் கனிநிழல் முற்றுமுதவியதல்லால் தன்னையு முதவுகின்றதாகிய தருக்கள் போற்றம்முடைய............,
பொன்னையெல்லா முதவிப்பின் பூட்சியாவுழைத்திட்டேனும்.....
இன்னுயிருதவியேனு மிடுக்கண்டீர்ப் போர்களடா ...............

புண்ணியம்

ஒடியுலர்ந்த பயிர்க்கு நல்ல மழையை யுதவு மேகங்களைப்போல்.....
வாடிமெலிவோர்கடம்மை யெந்நேரமுந்தேடிக்கொடுப்போர்களடா..

சாடுவெங்கோடையைத்தாங்கித் தானிழல்செய்யுமாலென்னப்.......
பீடுள்ளோர்தாம் வருந்தினு நாடு மெளியோரைக்காப்பார்............
புண்ணியம்

உலுத்தன் கவி.

ஒகோ விவர்கள் மோட்சத்துக்குரியோரொன்ற யென்போலே.......
ஆகாதேக மெடுத்தோர்க ளரியநரகுக்குரியரொன்றேப்ப்...........
பாகாஞ்சுருதிதனி லென்போல் பவர்கள் நரகிற்புகுந்ததுண்டோ.....
வாகாங்கதியிலிவர்போல்வார் வாழ்ந்தாரொன்று முண்டோசொல்......

பத்தன் அகவல்:

சொல்லுவேன்கேளாய் துற்குணலயனே- நல்லறமுடைய லசாரொனுந் தூயோன், பொருண்மிகப்படைத்துப் புவியினிலென்றுந்-தெருளிலா திருந்த வோர் செல்வனையண்டி, ஊழியனாகவுவந்து தன்றொழிலைத்-தா ழ்வறச்செய்துதற்பரனடியைத், தோத்திரம்புரிந்து துலங்கிடுநாளில்-மா ற்றரும்பிணிகள் வந்தனவவற்குச், செல்வனுமிசமான்சீயெனக்கடிந்தே- ஒல்லெனத்துறத்தி யோட்டியேவிட்டான், வறியனுப்ப்பிணியால் வாடியேமெலிந்துக் -குறியதாய் விரல்கள் குட்டநோயடைந்தே, உதவி செய்திடுதற் கொருவருமிலதால் -பதியில்வாழந்தப் பாக்கியவான்பால், சென்று தன்றுயரைச்செப்பியென்னைய-வின்றெனைவருத்துமிரும் பசி நீங்க, உண்டுநீகழித்தவுச்சிட்டமெற்களித்தால்-மண்டுமுன்பாக்யம்வள ர்ந்திடுமென்றே, இன்மொழிபுகலவெழுந்தவன் சீறித்-தன்னிடத்திருந்த சங்கிலிநாயைப், பிடித்தவன்றன்னைப்பிடுங்கிடவிடுத்தான்-கடித்திடாதவ ன்றன்காலிணைபணிந்தே, அன்புடன்சவரியார்புரிந்ததுபோ-லின்புடனன் னுயிவனுடற்புண்ணை, நாவினலாற்றி நன்குபசரித்து-மேவியேவருநாள் வெய்யவச்செல்வன், பொருளைவிட்டிறந்துபுகையெரி நரகில்-மருவியபே யால் வாதனையடைந்து, பொன்னுலகினியபோகபாக்கியத்தை-மன்னிவா ழுபராமடிமிசையேறிக், குசாலுடனிருக்குங்குறையிலர்ச்சீட்டலசாரினை க்கண்டுநாணி நின்றழுதே, ஒருதுளிதண்ணீருதவெனவிரந்தான்-எரி நரக தனிலிதுசெயப்படுமோ, ஆதலாலிஃதையறிந்து நற்கதிக்குப்போதரவே ண்டும்-புண்ணியஞ்செய்தே, ஆயிரத்தெண்ணூற் றறுபதாமாண்டி - லேயவவுமாதமிருபத்திரண்டா, நாள்புதவார மிந்நற்பரன்றுயின் - றுளிணைபணிந்துன்றருக்கினைபொழித்துப், புற்பொருண்மயலைப்போ க்கிநித்தியமா -நற்கதியடையநாடனின்கடனே ................... ※

உலுத்தன் கவி.

ஐயோபொருளாலிதைமறந்திவ் வரியபிணியர் தமையிகழ்ந்து .......
துய்யகுணபுண்ணியர்கடமைத்தூறிநிந்தை கூறியுன்னை ...........
வெய்யகொடியனென விகழ்ந்தேன் வீயுமளவு மிதற்கழுது..........
பொய்யாம்பொருளை யவர்க்களித்துப் புண்ணியஞ்செய்துய்குவனே ..

☞ சுஅகூ௰ அஉ அவுமீ ௱கவ அச்சிடப்பட்ட
ருசக நெம்பர்மொனித்தேரில் இதன்விபரங்களைக்காண லாம்

சவராயலு நாயகரின் ஆசிரியராகிய

# மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்பேரில்

ஓதுதற்கருநூலியாவையுமுணர்ந்த வுணர்வினன்றிரிசிரகிரியாம்.......
மேதகுபதியி லொளிதருஞானவிளக்கமாயடியவருளத்திற்..........
றீதுறுமவிச்சையாமிருள் சீத்துத்திகழுமெந்தேசிகனாய..........
கோதின்மீனாட்சி சுந்தரனருளாற் கூறுதுமிஃதுளந்துணிந்தே.....*

விளங்குறு வெண்புகழ் வனைந்தமீனாட்சிசுந்தரப்பேர்.......
களங்கமில்தேசிகனென்பாற் கருணைநனிபுரிந்ததனாற்......
றுளங்குறுதேம்பாவணிக்குச்சொலத்துணிந்தேனுரைவிரித்து.
வளங்கெழு மவ்வருளிலையேல் வழுத்தலரிதரிதரிதே .....*

முத்திக்குவித்தா முரிமனத்துக்காறுதலா ........................
மெத்திக்கினும்பொருளையீகுவதாஞ்-சுத்தகலை ........................
ஓதுகருணைமிகுமுத்தம வென்சற்குருநிற்........................
கேதுசெய்குவன்கைம்மாறின்று ........................*

கற்றற்கெளிதாகக்காட்டியரும்பாடலெல்லாம் ................
பற்றச்செய்நற்குண வென்பண்ணவனா-முத்தமநீ..........
ஞானப்பொருள்வழங்கி நற்றருமஞ்செய்வதுபோற்..........
றானமுண்டோவிவ்வுலகிற்றான்........................*

சீர்திகழ்வேதாவிநாயகவள்ளல் செகமெலாங்களிக்கநன்கியற்று......
மேர்திகழ்மடம்போலியைக்கநீகண்ணினியையுமோவலதியைந்திடினும்
நார்திகழெம்மீனாட்சிசுந்தரமா னற்றமிழணியஃதுடைய ..........
ஊர்திகழன்னங்கலைமகளொழித்தொண்டவமுயற்றினுமுறுங்கொல்லோ

புவிமகளுக்கோர்திலகன் விநாயகமால்விருந்தர்விலாப் புடைக்கவூட்ட
அவிர்தரச்செய்சத்திரத்தை மீனாட்சிசுந்தரவென்னுசான்சொற்ற.....
கவிமுகிலீயாரகமாஞ்சுரத்துமறமுளைத்தீகைக் கனியவன்னார்.........
செவியதர்சென்றிடுமிதனுக்கிணைசுரஞ்செல்லாமுகிலைச் செப்பலாமோ

திருக்கிளருமருச்சுனமாறவப்பயனைக்காட்டவந்த சேயாம்நல்ல......
வுருக்கிளரும்விநாயகவேண்மயிலைதனிலினிதிழைத்தவொளிர்மடத்தின்
பெருக்கதனைப்புகழ்ந்துரைத்தமீனாட்சிசுந்தரநம் பெருமான்பாவைல்
தருக்குடனேகருதியன்றேசுரர்புலவனெனும்பெயரைத்தரித்திட்டாரால்

அத்திரம்போன்றொளிர்கணுமைநகிற்சுவட்டையணிந்த நம்பனடிபரா
வும், மித்திரங்கூர்வியாசநகர்விநாயகமால்புரிந்தவெழில் விளங்குமன்ன
சத்திரத்தினெடும்புகழைமீனாட்சிசுந்தரநஞ் சான்றோன்பாவாற்......
சித்திரமாவியம்புதிறங்கண்டுகுறுமுனிமலைவாய்த் திகைத்தான்மன்னோ

பொன்னாடும்புகழ்தருவிநாயகவேண்மயிலையிற்றான் பொலியச்செய்த
தென்னாடுசத்திரச்சீர்மீனாட்சிசுந்தரதேசிகன் றீம்பாவாற்..........
பன்னாடும்புகழநுவலருமையறிந்தேபயிலும்பண்பாற்றெண்ணா....
நன்னாடுசான்றோனையுடையதெனும்பழமொழிக்குநலிவுறாதே.....*

எண்கணற்குமோர்கணற்குமெட்டாதமுக்கணன்வாழிதயனிந்த, மண்
கணுற்றோர்தொழுதேத்தெம்மீனாட்சிசுந்தரமான் மயிலைதன்னில்,விண்
களிக்கவிநாயகமால்கண்டசத்ரச்சீர்தமிழால் விளம்பல்கேட்கத், தண்
கடல்வாழரிமருகன்முறச்செவிகொண்டிடினதனற் றகையார்சொல்வார்

பார்புகழும்விநாயகவேடிருமயிலைச்சத்திரமாம் பாத்திரத்தில்.......
ஏர்குடிகொண்டோங்கிவளர் மீனாட்சிசுந்தரப்பேரொங்களாசான், நார்நனி
கொண்டமைத்துவைத்த நற்பாவாஞ்செவியுணவைநயந்தேவிண்ணோர்
சீர்தருதெய்வதவுணவை யவியவியென்றே வெறுத்துச் செப்புவாரால்.

துதிமிகுவியாசநகாருச்சுனவேடொல்புவிக் கருள்செயவளித்த, தூ
ய நற்சேயாம்விநாயகவள்ளல் தோன்றுறச்செயுமட ந்தருவெண், டதி
நெய்முற்பலவும்விராயவோதனமுந்தடமலிசிராமலைதனின்வாழ், தகுதி
பெற்றொளிர்செந்தமிழ்முனியென்னத்தக்க மீனாட்சிசுந்தரமான், விதி
முறையாயம்மடத்தினைப்புகழ்ந்துவிருப்பினிலுரைத்ததீந்தமிழும்,வே
தனைப்பயந்தமாதவன்பெற்றால் விதுரனில்லுற்றவோதனமும்; மதிநுத
ற்செவ்வாய்வெண்ணகைக்கருங்கண் மலர்மகளமுதமூற்றெடுத்து, வழி
தருமொழியுங்கனவினுமினிதாமதிப்பனோ மதித்திடான்மன்னோ...*

சீர்மலிந்திலங்குஞ் செழுமணிமாடத் தேர்மலிகருங்குழலிளமுலைமட
வார்; அலங்கொளிவிரிக்குமாமியத்திருந்து, வண்டிமிர் பூந்தொடைவார்
குழலவிழ, ஒண்டளிர் கரத்துறுவண்டினங்கலிப்ப, நுண்ணுசுப்பொசி
யவெண்ணித்திலமென, முழுமதிமுகத்திலெழுவெயர்வாட, இன்னிசை
பாடித்துன்னுறவாடுறு, முத்தமழுத்தியகொத்தொளிக்கழங்கின், தண்
ணிலாப்பரந்து விண்ணகத்தெழுந்து, சுரநதியகத்துறு மிரவலரலர்த்தி,
விளங்குறுமெழில் சேர்வியாசமாநகரோன், தெய்வதக்கங்கைச் செழுங்
குலதிலகன், தன்னிடத்தென்றுந் துன்னுறு வரினோர், குறிப்பறிந்திரு நி
திவெறுப்பவளித்துக், கேட்டபின் வழங்குபொன் னாட்டுறுதருக்கள், பு
றங்கொடுத்திரியப்பிறங்குறு கரத்தான், அருச்சுனமகீபனாற்றியபெருந்த
வப், பாற்கடலதனிற் பனிமதியென்னத், தோற்றியபுனிதன்றுகளில் கு
ணாகரன், தானஞ்சுரந்து தழையருள்வாய்ந்து, தூநகுபாவலர்துதிக்கை
பெற்று, வேண்டுறுவார்தம் விக்கினந்தொலைத்து, பூண்டகுமங்கதம்
பொலிபுயத்தணிந்து, செம்மையார்மணிநிறஞ்சிறக்கப்பூண்டு, மேவலி
னுமாபதிவிருப்பினிலளித்த, விநாயக மூர்த்தியைவிழைதரநலஞ்சேர்,
விநாயகப்பேரை மிளிரப்புனைந்தோன், தேமலர்நெட்டிதழ்த்தாமரை
முனியும், அசும்புதேனூற்றும் பசுந்துழாய்முகிலும், பன்னருஞ்சுரரு
மின்னமுங்காணா,மால்விடைப்பகவன்பாலமர்மலைமகள்,துணைமுலைக்கு
டங்கள்சுரந்ததீம்பால்,மணக்குஞ்செவ்வாய்மாமறைக்குழவி, என்புபெ
ண்ணுக்கவினிதெழுந்தருள்,அருந்தவம்புரிந்ததிருந்தெழின்மயிலையி,ல
றங்குதுகலிப்பப்பிறங்குறவியற்றிய, அன்னசத்திரத்தின்றன்னுசீர்யா
வும், ஒண்டளிர்பொதுளியதண்டலைமுகட்டு, பூந்துகள்மூழ்கிப் புதுநி
றம்வாய்ந்து, தவழ்ந்திநி திருக்குந்தழைமுழுமதிமேன், முதிர்கனியெ

ன்று முசுக்கலைபாயும், இன்னனவளம்பல துன்னுறக்கொண்டு, தேசுற வொளிருஞ்சிரகிரிவாணன், நற்குணமேன்மை நல்லொழுக்குடைமை பொற்புறுவாய்மை பொலிவுறு தூய்மை புண்ணியஞ்சீலம் பொறை நிறைதேற்றம், உண்ணிறையறி விவை யொருங்குதிரண்டு வந்தென வொளிருமாதவப்புனிதன், இலக்கணவிலக்கிய மினிதுறவெவர்க்குங், கலக்கமறப்புகல்கரிசில்குணாளன், தன்னிடைக் கற்பவர் மன்னவைக் களத்துள், என்னையுமொருவனைத் துன்னுவித்தருளிய, மெய்யருள்சும ந்த மீனாட்சிசுந்தர, நல்லாசிரியன் நனியுளமகிழ்ந்து, கன்னலும்பாகுங் கனிசுவையமுதும், முக்கனியிரதமும் முதிர்சுவைத்தேனுங், கைத்திட மதுரங் கனிந்தூற் றெடுத்துப்பாய்தரு நன்னலம்பரவுசெந்தமிழால், இலகுறுசெய்யுளீராம்பதாக, ஒருங்குநாவலர்களுவப்புற் றிருங்களிப் பெய்தவினிதியம்பினனே ................................ *

---

வல்லூர் தேவராஜ பிள்ளைபேரில்

பெடைநடையுமையாண்முலைச்சுவடணிந்தபெருந்தகைச் சிவனடிக்கடி யன், கொடையினிற்குமுணன் குணத்தினிற்றருமன் கொழுங்கலைதனிற் குறுமுனிவன், இடையறுப் பொருளிற்றனதனற் பொறையிலிரும்புவி பரித்திடுசேடன், தொடையறுப்புயத்தன் தேவராஜப்பேர்த்தோன்றலி தன் பிள்ளைக்குகவே ......................................... *

இளநிலாவெறிக்கு நீற்றொளிப்பெருமானிணைச்சரண்மலரகத்தூறும் வளநிலாவுறுமானந்த மாநறவம்வார்தருமுள்ள வள்ளத்தான்........
தளநிலாவுறுதாரணிபுயன்கேண்மை தருமணிகலமதாப்புனைந்தோன்.
உளநிலாங்கலைதேர் தேவராசேந்ரனுவப்பினிந்திருபநோக்குகவே... *

> வாசமலிகொன்றையணி யீசனிருதாளைப்...................
> பூசனைபுரிந்தொழுகுதாசனியல்வல்லோர்...................
> நேசனெனவந்தொளிரு மாசில்குணமேலோன்...........
> தேசமருமாதேவ ராஜமுகில் காண்க....................... *

பூவுலாமுயிரனைத்தையும்படைத்தருள் புராணன்...................
தூவுலாங்கழல் தொழுபவ னறம்புகுதொழிலன்......................
பாவுலாம்புகழ்த்தேவராஜப்பெயர்படைத்த............................
காவுலாம்வல்லூர்க் காவலனிதனைநோக்குகவே.......................*

> ஆரணப்பொருளாமாதிநாயகனல் லடிமலரலரகத்தடமும்....
> வாரணமனையசிற்றமுங்கலைஞர் வளம்பெறப்புகழ்தரு துதியுங்
> காரணப்பெயராத்தேவராஜனவே கழறுநன்னுமமுமடைந்தே
> தாரணிக்கொருகணும்வல்லூர்வாழுந்தனபதியிதனைநோக்குகவே

இருளணிகண்ட னிண்டையிணையடிமுடித்தன்னன்ற ..............
னருளணிதரித்தோன்கார்க்குமருங்கொடைதெரிப்போனென்றே.....
பொருளணியாகவேயிப்புவியெலாம் புகழப்போந்த ..............
தெருளணிதேவராஜச்செம்மலிக்கடிதங்காண்க.................... *

அருமதியை முடித்தவனல் லடிமலரை முடித்தோன், இருமதிகொண்டருங்கலைமுற் றெளிதி பறிவல்லோன் வருமதிதியாகிதேவராஜனென வாழுந், தருமதிகழபுனிதனிதைத் தயையினேக்குகவே,
சற்குண நற்புனிதனிதைத்தயையினேக்குகவே..........*

---

சோடசாவதானம்-தி-சுப்பராயசெட்டியார்பேரில்

பண்டுளோ ரருளினுவன்ற நன்னெறியின்பகுப்பினை நயம்பெறத்தொகுத்துக், கண்டுளோர்களிப்புற்றுவப்பவோர்சதகங்கழறுகவெனுக்குடந்தையினேர்; வண்டுளோ நிகர்வேங்கடப்பமால்கேட்பமகிழ்சுப்பராயநாவலன்வான், விண்டுளோர்வாணிபுரிவிரிஞ்சேசர்மீதுசொற்றனனுலகுயவே.

தி. தியாகராசசெட்டியார்பேரில்

பன்னகவயிரியுகைப்பவற்கரிய பவனிருசரணதாமரையைத், தன்னகஞ்சிமிழ்த்தெண்விழியுளான்மனையைத்தாலமார்த் திந்திரைதனைத்தோட், பொன்னகமசைத்துச் சிரகிரிதனின்வாழ் புனிதர்கள்புனிதனென்றிடுநற்றென்னகமெனவாழ் தியாகராசேந்த்ரச் செம்மலிக் கடிதநோக்குகவே.

முப்புரமுரித்தோனடி மலர்முடியின்முடித்துநன்னூலெலாமுடித்தோன், ஒப்பிலாப்பெரியோன்புலவர்கோனெவர்க்குமுயரருள்புரிந்திடு முறவோன், தப்பிலாப்புனிதனின்சொலனென்பாற்சந்ததமன்புளோன்றூய, திப்பிய புகழோன் தியாகராசேந்த்ரச் செம்மலிக்கடித நோக்குகவே.....

மைசூர்-சதாவதானி-அப்பையாசாரியார்பேரில்

பார்வளருமறுமுகவன் குன்றினின்றன்பயமுண்டா னைந்தொருசாணுடம்பாய் நின்றான், சீர்வளருமரவாச னருகாலுண்டுசெய்ய விழியிமையாமலொளித்தா னென்றால், ஏர்வளருமப்பையாசாரியென்னு மிணையிலாமாதவனிங் கெவரும்போற்றப், பேர்வளரச்செயுஞ் சதாவவதானத்தின் பெருமைதனையென்னெனயான் பேசுவேனே.........*

சாமி - பொன்னுசாமிமுதலியார்பேரில்

நாமமொப்பிகல்முப்போதுறுப்பிலன்றனுண்மலரடியகமசைத்தோன் தோமறவருநூற் பொருளொருங்குணர்ந்தோன்றூய வென்னன்பரிற்சிறந்தோன், காமனுங்காமமுறக்கவினுடையோன் காவெனப்பொழிதருகரத்தோன், சாமிபொன்னெனும்பேர்ச்சற்குணநிதனைச் சாதமுற்றற்பினேக்குகவே..................................*

துதிமேவுபுதுவைநகர் பொன்னுசாமிப்புலவன் சொற்றவிந்தப் .....
பதிமேவும் வீரசிந்தாமணியினிய லுணராப்பண்பாலன்றே .......
ததிமேவுபாத்தற்குத்தாரகப்பேரவுணற்குஞ்சம்பரற்கு ...........
நதிமேவுசேகரன்மாலிந்திரன்வென்கொடுத்தன்று நலிந்தாரம்மா ...*

வல்லமல்லயுத்தமொடுவிற்றொழிலும் படைத்தொழிலும்வகுப்பிலாய்து, பல்கலைகளினியலைந்தியலனைத்துந்தெரிந்துணர்ந்த பண்பாலியார்க்கும், நல்லபொன்னுசாமியென்பான்வீரச் சிந்தாமணியைநன்குபாவாற் சொல்லவதற்கிறும் பூதென்னியாம்பகரிலிறும்பூதாய்த்தோன்றுமம்மா.

பாலசித்தாந்தசுவாமிகள்பேரில்

பாகூர்ச்சிவனுமைமேற்பாலசித்தாந்தன் பகர்ந்த............*
பாகூரினியதமிழ்ப்பாக்கடலை -வாகூறப்.................*
பன்னுலைப்பன்னுது பாராளைப்பாராதிங்................*
குன்னுளை யுன்னுதுலகு..................................*

மாமேவுதலைமாலைகொன்றைநதிமதிமழுமான்மறைத்துவந்திப்.......
பூமேவுமீனாட்சிசுந்தரநாவலவர்பிரான் பொற்றுட்போற்றுந்.........
தூமேவுமாதவனும்பாலசித்தாந்தன் பாகூர்த்துலங்குந்தூயர்........
நாமேவுசீலிபாஞ்சாலிக்கோர்பதிகநன்கு நவின்றான்மாதோ....*...

பாலசித்தாந்தனணிபாகூர்ப்பாஞ்சாலியின்மேற்...........*
சீலசித்தாந்தமுறச்செய்பதிகம் - மூலஞ் .................*
சினைக்குமறியாமைக்குந் தீமைக்கும்பாவ ................*
வினைக்குங்கொடுக்கும் விடை.............................*

இராமலிங்கப்பத்தன்பேரில்

நலங்குலவுமணமேட்டிராமலிங்கப்பத்தனென்னு நல்லோனின்றென்..
றுலங்குசெல்வன்பெயரமையவனளவா வினிதமைத்தசுகிர்தபாகூ...
ரிலங்குமலங்காரசெயராக்கினிமாமரியுருவி னெழிலைக்கண்டிந்.......
நிலங்குலவோவியங்கடமைக்கிழிகிழியென்றே யவனர்நிகழ்த்தினரோ.

உந்தியங்கமலவன்னவூர்தியை நகைப்பான்வேண்டி.........
வந்தநமிராமலிங்கவல்ல நற்குலாலன்செய்த................
இந்தநல்லுருவம்போல விசைப்பவரிவணுண்டென்ன......
லந்தரமலர்முயற்கொம் பாமிதென்றறைதல்மானும்.......*

தாசீல்தார் - அ-சஞ்சீவிநாயகர்பேரில்

நீர்கொளுவாழிசூழுலகமீதலமுழுது நிமடம்படைக்கவல்ல-நிகமொதிரி
லாவமலஞானமுச்சுடருணடுநின்ற சேசெனுநாதனை -நிசிதபுன்மாக்க
ளீடேறவீந்தருள் செயனை நிமலசரணம்புயத்தை-நிதமரிச்சனை செய்
சவராயலுவெனுஞ்சிறுனேர்மைகொண்டெழுதுநிருபம், சீர்கொணிறை
பொறைகனங் கல்விபேரறிவுமுற் செப்பரியவாய்மையழகுஞ்-சேர்ந்
தொருங் கோருருவெடுத்திட்டதெனவந்த செந்நெறிவழாதபுருடன்-திக
ழ்புதுவையம்பதியலாது தென்னாட்டுஞ்சிறந்த தாசீல்நடாத்தச்-செகத
லந்தனிலிவனலாதுவேறேதெனச்செப்பவந்துற்றதிறலோன், பேர்கொ
ளருளப்பசஞ்சீவிநாயககன ப்ரதாபனளி கொண்டுகாண்கப் - பெற்ற
தாய்தந்தை சார்பற்றுதவியின்றியேபேதுறீஇத்தளருமெற்குப்போன்
போடாறலீந் தஞ்சலென்றேயெனது பீடைதனை யோட்டினதலாற்பி
ன்னுமெனையாளாக்கவுன்னத்திலளிமிகப்பெற்ற நீயாதலாலே, ஆர்கொ
ள்புகழ்சேர் சிராப்பள்ளியின் மகத்துவவகஸ்தியனெனத் தோன்றிவந்-
தவதரித்திட்ட மீனாட்சிசுந்தரகுருவை யண்டி நற்றமிழையோர்தற்-காய
வழிகாட்டவுனையன்றிவேறிலை யென்றடுத்துளமிரங்குமென்றன்-அனுப
வமறிந்தெனக்காதரணை செய்யநினதகங்களித்திடல்வேண்டுமே......*

செங்கமலமலர் பூத்ததடங்கள் சூழுந்தென்புதுவை நகர் செழிக்கவரு முதாரா, மங்களஞ்சேர்சருவேசன்பதத்தைநாளும்வாழ்த்திமகிழ்குண சிகாமணி வஜீரா, துங்கனெனும் அருளப்பனருள்குமாரா துரைகள் மகிழ்சஞ்சீவிசுகுணதீரா, இங்கெனது துயர்தீர்க்கநினையலாமலியாருளரொன் றுனையடுத்தேனிரங்குவாயே ........................................ ✻

பொங்குதடஞ்சூழ்பூம்புதுவைத்தாசில்செலுத்திச்
சங்கமதிலோங்குகன சஞ்சீவித் - துங்க
வடக்கோடுதேர்செலுத்துவான் குடையுமெற்குக்
குடக்கோடு மொன்றெனவாகும்.

முத்தைநிகர்த்திடு மெயிறுமனநடையுஞ்சிற்றிடையுமோகமூட்டுந் தத்தைநிகர்த்திடு மொழியுமான் விழியுமேவியவுத் தமியாமென்றன் அத்தைமகனெனுஞ் சாஸ்ரியருளப்ப நாயகன்போலதிஞர்போற்ற வித்தையினிலுயர்ந்தகுணச் சஞ்சீவிதீரனிதை விருப்பிற்காண்க

---

கலெக்டர்-சோலை அப்பாசாமிமுதலியார் பேரில்.

அப்பாசாமியெனத்தமிழின்பறியா லோபர்தமைப்பாடல்
அப்பாசாமிதனிற்பெறும்பேறரி தாமிதனலொரும்புலவீர்
அப்பாசாமிபத்தில்வளரன்னப் பேறரனருள்சோலை
அப்பாசாமிவள்ளல் புகழுரைவீர் பெரும்பேறடைவீரே.

பருதியெனவிளங்குமொருகடவுளடித்தாமரையைப்பற்றி நன்கே வருதியென வரவழைத்தியாவருக்குமுபகாரமலியச்செய்யுஞ் சுருதிநெறி தவராத சோலையப்பாசாமிமன்னு சொல்லக்கேளாய் கருதிநினையடைந்தவரைக்கனப்படுத்த வேண்டுவதுன்கடமையாமே.

பூவேறு மன்னநடையார்க்கனங்கன் புகழிலுயர்
பாவேறுதூயநற் செந்தமிழைந்தியற் பாவலர்கள்
நாவேறுசோலையப்பாசாமியென்னு நராதிபனே
காவேறிலையிவற்குன்னையல்லாமலிக்காலத்திலே.............. ✻

சீர்வளர்பாலர்க்கனல்குளிர்தரச்செய் சேசெனுந் தெய்வதச்சுரபிக் கேர்வளரன்பாம்பசியமென்றூர்வை யினிதுடனருத்திடச்சுரந்த பேர்வளரருளாந்தீம்பயன் பாவப்பிணி தருபசிகெட வருந்துங் கார்வளர்சோலை மேவப்பாசாமிக்காவல நாளும் வாழியவே.......... ✻

வேலைதனிலதாளித்த மெய்ச்சேசு நாதன்மலர்க்
காலையகத் தெஞ்ஞான்றுங் கண்ணிவளரு ருணியே
மாலையற நன்னீதிமன்னு நிறைகோலெனச்செய்
சோலையப்பாசாமியெனுஞ் சுந்தர நீவாழியரோ.............. ✻

எள்ளியிருவேறுலகத்தியற்கைதிருவேறு
தெள்ளியராதலும் வேறென்றுரைத்தவர்தந்திறமறுத்து
வள்ளியர்சிகாமணியாய் மாண்கலைமுற்றறிந்துயர்ந்தான்
தள்ளருஞ்சீர்ச்சோலையப்பாசாமி நரபதிதானே...................... ✻

பூமேவு நிலவுலகோர் நினைத்தகாரியங்களெலாம் புகலுகின்ற, தேமேவுசி
ருண்மைவிளக்கமென்னுஞ்சாத்திரத்தைத்திகழ்வுற்றோங்கும்,
பாமேவு புகழ்சுமந்து மனுநீதிமுழுதுணர்ந்த பண்பான்மிக்கோன்
றாமேவுசோலையப்பாசாமி மகிபதியன்பிற் சொற்றான்மன்னோ.

சீரிலகு புதுவை நகரன்னப்பமால்செய் செழுந்தவந்தனி லுதித்துச்-செ
ந்தமிழ்து லுக்குமாராஷ்டமாந்திரமொடுசிறந்த வைங்லீசுமுதலாந்- தே
ச பாஷைகள்பலவுமோர்ந்து மனு நீதிநெறிதிவ்ய வேதாகமவழிச்- செ
ன்றைங்கிலீயமன்னவரொலாம்புகழச் சிறந்தவுத்யோகமேவி; ஏரிலகுபுல
வர் பாமாலைபூமாலையோடிலங்குபொற்றகடுமோங்க-லெனுமிரு புயத்து
ற விளங்குங்கலைக்டரிவரொன்னவதிபின்சனுற்றிவ்-வெழிற்சோலை மன்னி
வாழ்சோலையப்பாசாமியென்னுமதிபாக்யசீலன்- இலகுநாற்பத்தைந்து
வருடத்தினுக்குமுனமின்றெலுங்கதனி லுள்ள, தாரிலகுமுயரிராமச்சக்
கரந்தனைத்தமிழதனி லுறவமைத்துத்-தந்தபின்கோயமுத்தூரி லதிகார
ஞ்சமைந்தினிது செய்யுநாளிற்-றன்பெயராயன்னதின்கடை வரியிலுற
வேசமைத்துவைத்ததைவிளக்கிச்-சகலருங் கண்டிறும்பூதுறச் செய்த
னன் சாற்றுமச்சக்கறத்தைப், பாரிலகு மாந்தர்களெடுத்தெழுத வெழு
தவுறு பல்பிழைகளைத் திருத்திப் பகர்ந்ததன் ஞமமிரு நான்காய
வரியிற்பதிந்திடச் செய்திந்நாளிற்-பன்னுமெழுதா வெழுத்தினிலமை
த் திட்டனன்பகர்திரிசிராப்பள்ளியிற்-பலருமப்பாசாமி யென்றேவிய
ம்பவொளிர் பக்யனிவ்வதியோக்யனே........................*

வண்கலக்கந்தரமனையகுழலவிழவுடை நெகிழ வளைகள்சோரக்
கண்கலக்கந்தரமுலைகளபசப்புறப் பூவணைத்துயிலுங்கரந்துவாடும்
பெண்கலக்கந்தரப்புயனஞ்சோலையப்பாசாமிமுகில்பிணையலன்றிப்
பண்கலக்கந்தர மொழியீரென்செயினும் வேறென்றுற்பாறிடாதே.

கனக்கவசந்தனையறுசீர்ச் சோலை யப்பாசாமிவள்ளற் கண்டேன்கண்ட
வுனக்கவசந்தனையளிப்பேனென்றுகருப்புச்சிலைகொண்டுருத்துநின்றே
யனக்கவசந்தனையலர்தூற்றக்கவன்று துயிலுறந்தவளியன் வெந்நோய்
தனக்கவசந்தனையசிரமிழப்பதென்ன வினைமடவீர்சாற்றுவீரோ.

இராகம்- துசாவந்தி தாளம் ஆதி.

ஆசைத்துரையைத்தேடி என்றனைக்கூடி அணைய அழைத்துவாடி
தேசம்புகழுஞ்சேலம் டிப்டிகலெக்டரென்னச்
செப்புஞ்சோலையப்பாசாமியொப்பில்லாக்கண்ணாளனுமென்.
ஆசைத்துரை

மாங்குயிலிசைகூவப் புலியென்னவே மாருதம்வந்துதாவ
வாங்கலையொலிமேவ மதியனலை வாரியென்மீதுதூவ
ஓங்கிமதன்கணையை யோயாதென்பேரிலெய்ய
ஓடியங்கள்சொல்லியென்றன்சேடியர்தினமும்வையத்
தாங்காவிரகங்கொண்டேன் பாங்கிநானிந்நேரமுய்யச்
சந்ததமுமென்றனோடுவந்துநற்சுரதஞ்செய்ய. ஆசைத்துரை

பாசமிகும் விவேகன்லீலாவிநோதம் பண்ணும்பிரபுமகன்
தேசமதிக்குந்தியாகன்மன்னர்புகழச்செய்யும்பெருமுத்யோகன்
வாசமணக்குமலர் வீசுமணிதிண்டோளன்
மாரன்கலையறிந்து சேருமென்றன் கண்ணாளன்
நேசம்பொறையறிவு நீங்காதொளிர்மணாளன்
நித்தமும்பாவலர்புகழ் உத்தமகுணாளனுமென்.

ஆசைத்துரை

மன்னர்துதிக்குந்தீரன் செந்தமிழ்க்கவி வாணர்க்கருளுதாரன்
மின்னும்புதுவையூரன் பொற்றகடணி மேவும்புயசிங்காரன்
வன்னக்குயின்மொழி யென்மார்பிற்றுயிலுலாசன்
வாடுமெளியர்தமைத்தேடித்தருநன்னேசன்
அன்னப்பனெனும்போஜன் அளித்தசற்குணவாசன்
அம்புவிதுதிக்குஞ்சோலைஅப்பாசாமியாமென்றன். ஆசைத்துரை

புதுவை- சிரஸ்தா-அற்புதவுடையார்பேரில்

பார்விளங்குமெழிற்புதுவைச் சிரஸ்தாஅற்புதமென்னப்பலரும்போற்றச், சீர்விளங்குமரசர்பொறித்தளித்திடு பொற்றகடணிந்தசெழுந்தோணேயா, பேர்விளங்குநந்நேயமேன்மேலுமென்ஞான்றும்பெருகயான்செய், ஏர்விளங்கும்பாடல்களைக்கேட்டு மனமகிழ்ந்துநீயென்றும்வாழ்க.

பொற்புறு வெற்பெனப் பருத்துப்புடைத்துமதத்தெழுந்து விம்மிப்பொருக்கென்றோங்கி, வற்புறுமென்முலைக்களிறுதுற்பலச் சிற்றிடைக்கிடறு வருத்தாவண்ணம், சிற்பர்கட்க்கு மெழுதருநின்னெழி லுகிர்த்தொட்டியினடக்கச்சிரஸ்தாவென்னும் அற்புதமே அற்புதமேலில்லை யுனக்கென்கொலெனவறைவார் மின்னார்............................*

இதவுடையானணி தொடையானன்னடையான் பின்னிடையா னெவர்க்குஞ்செம்பொன், னுதவுமெழிற்பெருங்கொடையானென்னலர்கடமக்குடையானேர்காலத்துஞ் சிதைவுடையான்பெரும் படையான்றுரைகள்மகிழணிபுதுவைச் சிரஸ்தாவாமற், புதவுடையானெனையுடையான்வரிலுடையானிடையன மேபுனைவேனென்றாள்.............................*

மைசூர் இராஜாங்கத்தைச்சார்ந்தபெங்குளூர்நகரத்து சட்சியாகிய
தி. இரா- தம்பு செட்டியார் திருமணப்பாடல்கள்.

மாமேவுமலர்மணம்போற் றேபியன்சாராளென்னமகிழ்ந்து மேவித்தூமேவுபெருஞ்செல்வந்துதைந்தோங்கவெஞ்ஞான்றுஞ் சுகஙோதுய்த்துப், பாமேவுபுகழ்த் தம்பு மகிபாலனணிகற் பிற்பாவைமார்கள்நாமேவுராசம்மாளெனும் பெண்ணினொடுசிறந்துநன்குவாழ்க.

வண்டுதொடர் நறுந்தெரியல் வனைகூந்தற்கருங்குவளைமானுநோக்கங்கண்டுமொழிராசம்மாள் புனிததுரோதம்மாளைக்கடிப்பநாளுமண்டுபேரன்பினொடுநந்தப்புவென்னுமகிபாலற்கேற்றதொண்டுமகிழ்கருத்தினொடு மொழியாதபேரின்பந் துய்க்கமாதோ.!

சந்தப்பாரம்மாள் வாசகப்பாவுக்குக்கால் நாட்டும் போது

## கூறப்பட்டபாடல்.

சீருலவுமாதனகியான் முனஞ்செய்த துர்த்தீமையனலாற்கரிந்த - சீரினா
ராமடயிர்செழித்திடக்கறையட்பு சேசெழிலிபெய்திலவெனச் - செப்பு
மஞ்ஞானிசடமக்கோர்காட்டாயுறத்தீயோக்கெனுங்குரிசிலின் - சேயாயு
தித்துலகவொன்று மிம்மறைதனைச் செந்நெறியெனப் பிடிக்க, ஏருலவு
முடல முனைடவீசக் கரும்பொறுலிசைத்தசீப்பாற் ஷயர்புரிந் - தெஃகந்
தனிற் சிரஞ்சேர்த்தியே நெய் நிறைந்திலகு கொப்பரியில்வீழ்க்க - வெ
ண்ணரியவாதையுண் டப்பன்னைகவாளாலிறந்த சந்தப்பாவெனு - மென்
றாய் தன்சரிதை காவில்லாப்ப்ரதிமையாவிசைத்தனன் புதுவைவாழும்,
நாருலவுமப்பாக்கனென்னு நாவலனஃதைநாடியுயமெளியர்தமையாள்
நற்குணம் பொறையருளொழுக்கமுதலியாவு நனி நல்லிடமெனச் சென்
ஷவாழ் - நட்பமைந்தொழுகுமைந்துற்றமர்கண்முயல் வென்னு நல்ல
ணியினாற் புனைந்து - நளவருடமாணிமதிபத்தொன்பதாந்தேதி நல்லசுப
தினமானதிற், காருலவுபொங்கர்சூழிங்குறு மெவர்க்குமவர்கறை யறக்கா
ண்பித்ததாந்-கன்னியாப்பரனையின்றெளிரமலகமலவிருகழன் மரிதனை
ப்பணிந்து-கல்வியுஞ்செல்வமும்பெற்றோங்கிவாழு நற்கனவான்களேயெ
ழுந்து - காதலோடப்பாவையிவணடந்தேற நற்காலேற்படுத்துவமரோ.

---

இஸ்தாக்கியார் வாசகப்பாவுக்குக் கால்நாட்டும்போது

## கூறப்பட்டபாடல்.

மாமேவுமதிமீதெழுஞ்செழுந்தாளியருண்மைந்தனோர்கானின் மானின்
மத்தகத்திருகோட்டிடைப்பண்டிருக்குருசின்மருவிவந்தருள் காட்சியா
ன் - வறியபொய்ச்சமையம்வற்சித்தர்ச்சியசிஷ்டமறைமருவு மிஸ்தாக்கி
யென்பான் - மான்மியக்காதையைப் புதுவையம்பதிவித்துவான்சாமிநா
தபோதன், பாமேவுமினியசெந்தமிழினன் வாசகப்பாவாக்கினனன்ன
தைப் - பாருலகிலோங்கு நற்றவர்கள் கற்றவர்களொடு பன்னுமற்றவரு
மினிதாப்-பார்த்துமகிழவெய்தியத்தூயநின்மலனைப்பணிந்துகதிமேவ
வேண்டிப் - பமரநறவுண்டுவிளரிப்பண் மிழற்றுமலர்பரவுதண்டலைக
ள்சூழ்ந்த, தூமேவுபுதுவையன்புற்ற பொன்னுச்சாமிசுகுணவாரோக்ய
சாமி-சொற்பெரியசாமி தனைசாமியான் ஞாசாமிதுன்னியையங்கர்த்தரா
கிச் - சொல்லுமச்சீலனின்சீலந்தனக்குரியதுறைவல்லோர் தமையொரு
ங்காத்-தொகுத்தவர்க்குச்சத்திபத்திகைச் சித்திருழ் தூயவபாம்பிள்ளை
யாற், றேமேவுபட்டோலைதருவித்தடுக்கினுற்றேற்றின துணர்த்தநயினு
ர் - திகழமேர்திரைக்தர் ழெனறல்பெரியே துரையெனுந்தீரனுத்தரவீ
ந்ததால் - தேர்ந்தகல்விச்செல்வமோங்குசகசனரோ தியங்குமிச்சுதினமி
ங்கண்-செப்புமிவ்வாசகப்பாமின்னுலாவச் சிறந்தகால் தருவாமரோ.

முன்சீப் -ச- வேதநாயகம்பிள்ளை பேரில்

நன்னெறிகள் வயக்குதலாற் கற்பனைகள் விளக்குதலானலங்கொளாருக்
கன்னெறிகள் வகுத்திடலானின்னீதி நூல்பரனைப்பாகு நாளும்......
பன்னெறிசால் வேதநாயகமகிபாவனைய பராபரனையீன்ற..........
மன்னெறிசாலொருதெய்வ மொப்பானாய் நீயிதற்குமாறென்றின்றே.

வேதமுழுதுணர்ந்ததற்கு நாயகமாநீபொலியும் விதமோர்ந்தன்றே...
போதமுழுதுள நினக்குவேதநாயகமெனும்பேர் புனைந்துநந்தை.....
யேதமுழுதற நீசெய நீதிநூ லுணர்ந்து பெயரிடாவாறென்னோர்.....
கோதமுழுதொழியதுவும் வேதமேயெனத்தெரிந்த குறிப்பானன்றே.

நேடுபொருள்சிதறவிடல்புதைத்தலொரீஇ வெளிப்படையி னிகழச்செ
ய்து, பாடுபொருட்பெரும்புலவராதியர்க்குநல் குதல்போற்பற்பனீதித்
தேடுபொருள்சிதறவிட்டார் சிலர்புதைத்தார் சிலரனையசெய்கை நீத்தக்
கூடுபொருள்வெளிப்படைசெய்தருள்வேதநாயகமால் குவ்விற்றேவே.

பாரகாவியம் புரிவார் பன்னூற்கு முறையிடுவார் பாரில்யார்க்குந்.......
தாரகாவியமலிசீர் வேதநாயகமகிபாதழைசெல்வக்கு...............
பேரகாவியந்தொடையாய் நின்சேடெனினீசெய்பெற்றியோர்நூற்.....
சேரகாவியந்தனன்யானெனமொழியினுண்டாகுமிலச்சைதானே.....

யான்முந்தியேகுவன் மற்றியான்முந்தியேகுவனென்றெழுந்தெல்லாம்
வாய்ப், பான்முந்திவரவடித்துக்கொளுநினக்குந்தமிழ்வளர்த்த பாண்
டியாசெந், தேன்முந்தியளியுணுந்தார் வேதநாயகமகிபா தெளியோர்நீ
தி, நூன்முந்தி யுரைத்தலரிதாமே யெப்பாடுபட்டு நுவன்றுளாயே.

வித்துவான் அருளப்பமுதலியார்பேரில்

தெருளப்பார்கடலுலகிற் சிறந்தமாவீரமுனி செய்தவேதப், பொருள
ப்பார்கலம்பகத்திப்புதைபொருளியாதென்றொருவர்புகன்றலியாரு...
மருளப்பாமுடியாதென் றிசைப்பதைக்கண்டாயதற்குவழுவிலாம..
லருளப்பாவருளப்பாவென்ற மலனிவனையிவணனுப்பினனே.......*

அக்கலம்பகத்தினுக்கு மனையழுங்கலந்தாதியாயநூற்கும், பக்குவமதா
கமுன்னோர்பண்ணிவைத்தவுரைகடமிழ்ப்பயின்றோர்க்கல்லா, லிக்குவ
லயத்திலுளோரியாவருக்கு முபயோகமியற்றதென்றே, திக்கனைத்தும்
புகழவைகட்கருளப்பனுரையெளிதாச்செய்தான்மாதோ............*

மாமேவுபொற்றாமரைத்தடாகங்களொடுமதுகரம்பண்மிழற்றி - வாழ
வான்கண்படும் பூம்பொதும்பருமேவுமங்களத்தஞ்சையினில்வாழ், தே
மேவுபுவியெலாம்போற்றுமாபண்டிதன்சீர்த்தமுத்துச்சாமிமால்செய்
மாதவத்தில் வருபுத்திரன்விழியெனச் செப்பைந்திலக்கணமுமார், பா
மேவுமதிபாரகாவியங்களுமோர்ந்தபடி வீரமாமுனிவர்தாம் - பகர்கலம்
பகமதற் கினியவுரையெழுதியிப்படியதேத்தருளப்பவேள், நாமேவுபி
றர்வேதகாவியங் கீர்த்தனைகணவிலல்கண்டியர்சத்தியநூல் நல்லதேசிகரி
ட்டகட்டளைப்படியவனயந்தெழுதுபாவிதுவரோ.................*

திருமலைராயன்பட்டணம் - ச - ஞானப்பிரகாசம்பிள்ளை பேரில்

நலந்திகழ்செந்தமிழ்ப்பயிற்றுஞானப்ரகாச நாவலவன்சொற்ற, துல
ங்கெழிற்பாக்களின்முனமர்ஜையபுலவரிதுகாறுஞ்சொற்றபாக்க, ளிலங்
குயிர்காண் குற்றுகர மெப்படியோவப்படியா மென்னிலன்னான்,பலந்
திகழ்நற்பாக்களிலாம்பன்னயத்தையென்னெனயாம்பன்னு வோமே.

நி-த-பகவந்த ஐயர்பேரில்

மட்டவிழுமலர்மணம்போலுடலுயிர்போலன்றிலைப்போன் மகிழ்ந்து
மேவிச்சிட்டர்தொழுபிரானருளாற்சோடசமாம்பேறுயசெல்வத்தோங்கி
கட்டழகிஜெகதாம்பாள்பகவந்தராயபலகலையில்வல்லோன்..........
இட்டமுடன்சாராளதோமியனெனச்சம்பன்னர்களா யென்றும்வாழ்க.

தீவான் நயினுத்தை அபராமுதலியார் பேரில்

திருவாரப்பாசாமிதருசிந்துராய வளளறன்னைப்...................
பொருவாவலவன்புலவனெனப் பூமிபுகழுநயினுத்தை .............
யொருவாயாற்சொற்புகழ்ப்பாவை யோராயிரநாவான்றெரிக்க .......
மருவாதொளித்தானெனிலஃதைவருக்கயாரோ வல்லவனே....... *

கலெக்டர்-திரு-சுந்தரம்பிள்ளைபேரில்

இயல்வரியருளாயினமறையளித்தவேகனையனுதினம்பணிவோன் ....
வயல்வளமிகுபூந்திரிசிராமலையில்வாழ்ந்திடுங்கலெக்டரென்றுயர்ந்தோன்
மயலறவேதக்கலையொருங்குணர்ந்தோன்மருவுநற்குணளிற்பெரியோன்
புயல்வளர் கரத்தோன்சுந்தரம்பிள்ளைப்பூபதியிதனை நோக்குகவே...*

நாமக்கல்- முன்சீப்- அதிசயம்பிள்ளைபேரில்

தாசரகமலருறையுந்தற்பரனற்புதமலர்த்தாடன்னிநேயன்
பேசருநல்லுபகாரனென்பாவிலின்புறுவோன் பெயராச்செல்வன்
நேசவொலாமிதங்கூறச் சேலமெனும்பெரும்பதிவாழ் திருப்பன்வல்ல
நாசரதிசயம் பிள்ளையெனுங் கோமானிக்கடிதநன்குகாண்க

தாசில்தார் தம்பியாப்பிள்ளைபேரில்

உம்பர்தொழுமொளிமுடியனொளியுடையனொளியடியனுயிர்த்தநாதன்
வம்பலரஞ்சேவடிக்குள்வான்றவிசாவியற்றநனிவளங்கொள்காயைம்ப
திக்கோரம்பகம்போன்றருங்குணமெய்யெனக்கொடவதரித்துப்போந்த
தம்பியாப்பிள்ளையெனுந் தருமசிகாமணி யிதனைத் தயையிற் காண்க.

அ- ஞானதிக்கமுதலியார்பேரில்

வானுடனைத்துமிமைப்போதே வகுத்தாள்சேசுபரனுபைய........
காணர்செழுஞ்சேவடிப்போதுட் கமலத்திருத்துங்கருமத்தோன்......
ஆனவன்பனரும்பொறையனன்னப்பன் செய்தவப்புதல்வன்.......
ஞானதிக்கமெனுஞ்சுகுண நயவானிதனைநோக்குகவே........... *

சேலம் - சிரஸ்தா - திவ்யநாதம்பிள்ளை பேரில்

பொங்குபேரருளாற்புவனமுற்றளிக்கும் பூரணனிருசரண்மலர்க.....
டங்குநல்லிதையன்தமிழ்ப்புலவருக்குத் தகவுறவளித்திடுசுகுணன்...
பங்கயத் தடஞ்சூழ்சேலமென்பதியிற் பார்புகழ்ந்திடுசிரஸ்தாவாந்...
துங்கநற்தீரனெனுந்திவ்யநாதத் தோன்றலீதன்பினோக்குகவே.....*

திருவாரூர் முன்சீப் நமசிவாயம்பிள்ளை பேரில்

சீரார்ந்தபுதுவைநகர்வாழ் பொன்னுப்பிள்ளையென்னுஞ் செல்வனீன்ற
தாரார்ந்ததிண்புயநம்நமசிவாயம்பிள்ளை சதாகாலத்தும்...........
ஏரார்ந்தவணிதிருவாரூரின் முன்சீபதிகாரமிலங்கச்செய்து..........
பேரார்ந்தபெருஞ்செல்வம்பெற்று மனைமைந்தரொடுபெருகிவாழ்க..

காரைக்காலார் பேரில்

பருதியென்றொளிர்சேசெனும்பராபரனைப் பயந்தவடுணைவனின்கதை
யாஞ், சுருதிநூலெனுந்தேம்பாவணிப்பொருளைச் சொற்றிடற்கெளிய
னுமெனையும்,வருதியென்றழைத்துக்கேட்டுளமகிழ்ந்து வான்பொருண்
மிகவளித்தினமுங், கருதிநன்முகமனுரைத்தகாரையில்வாழ் கனதிபர்க்
கனந்ததோஸ்திரமே ......................................❊

மயிலை - சவரிமுத்துப்பிள்ளைபேரில்

சீரணிசரத்திற்சிரமுறப்பொம்பேர்சென்றகித்தேரியின்கதையாம்....
ஏரணியமுதையெவர்களுமிழும்பூதினிதுகொண்டுணவெணிப்புகன்றான்
தாரணிபுயச்சின்னப்பிள்ளையெனுமான்றவலறு தவத்தினிதுதித்த......
நாரணிபுனிதச்சவரிமுத்தெனும்பேர்நயந்தநன்னாவலரேறே.........❊

குரிசையன்றலவன்கொணர்ந்திடக்களித்தகோதிலான்பெயரினார்விருதி.
இரிதரத்தரளமகவுசார்மொழிகளிலங்கிடவிளங்கிடுபெயரான் .........
கரிசில்கித்தேரிக்கதையையின்றமிழிற் கழறினன்வாசகத்தொடர்பா..
விரிபுகழறிஞரோணையர்குழாமும்வியப்பெனுமலையின்மூழ்கிடவே...❊

பிள்ளையைக்கொண்டெலியனுக்குப்பிசியளித்தோன்கழற்பதுமப்பிரச
மூறும்,வளையகச்சவரிமுத்துப்பிள்ளைகித்தேரிக்கதைபா வாணரியாரு
ங்,கொள்ளைகொண்டுண்டுவப்பெய்தக்கோதறுசெந்தமிழதனிற்குலவுந்
தூய, வெள்ளையில்நன்மொழிகொண்டுவிரித்தான்றன்பெரும்புகழை
விளங்கமாதோ ........................................❊

இத்தேரியின்கதையைக்கேதமிலாவொண்டீக்காக்..........
இத்தேரிக்கற்றோர்கள்கேட்டிடவெ-முத்தமிழிற்..........
காட்டுஞ்சவரிமுத்துக்காவலனுக்கார்காட்டுக்..............
காட்டுங்கவிஞர்களேகண்டு .........................❊

வித்துவான் - பு - ஆரோக்கியநாயக்கர்பேரில்

தேனொழுகுநறியசெந்தூயவொண்டமிழிற்சிறந்தமாவீரமுனிவன்-செ
ய்ததேம்பாவணியினுண் பொருளெவர்க்குந்தெரித்திடற்கருணனிபெ
றீஇச் - செகமெலாங்காக்கும் பராபரனளித்த வொண்டிவ்யமறையாவு
மோர்ந்து-செந்தமிழினைந்தியலோடைந்துகாப்பியமுந்தெரிந்துபலநூ
ல்களாய்ந்து,கானொழுகுதெரிய லோடரியநற் சீலங்கவின்றூய்மைவாய்
மைமேன்மை-கனமன்புபொறையறிவு நிறைதேற்றமியாவுங்கதித்திட
ப்பூண்டுதெளிவாக்-கற்றகவிவாணர்கவிவாணனிவனென்றுசிரகரகம்பித
ங்களசெய்யக்-கண்டுகளிகொண்டொளிருமாரோக்யநாயக்க னங்கவிவா
ணனினிதுகண்ட,வானொழுகுமதுரம்பழுத்தொழுகுமிசையொழுகுட்வ
ல்லபத்திமையொழுகுநன் - மறையெனுந்தூயதேம்பாவணிக்கீர்த்தன

மன்னுமிடையூறின்றியே-வல்லகவிவாணர்நாப்பண்ணரங்கேற்றுண்டு
வையகமெலாம்பரவிவீண்- வறியபொய்ச்சமயரிருளோட்டிமறைகாட்
டி நிதமன்னியெந்நாளுமோங்க, மீனெழுகுமுடியளாய் விதுவொழுகும
டியளாய்வெயிலொழுகுமுடையளாய்வான்-விண்ணுலவும்வல்லநெல்லி
த்தோப்பினுழைமருவிமின்னு சினகரமடைந்து-வெயின்மணிகுயிற்றி
யொளிர்தருமிமைய பீடிகையின் மேவுநம்பரமதாயாம்-மிளிர்மோக்ஷ
ராக்கினியை யற்பினிப்புகைதனின் வேண்டியஞ்சலிசெய்வமே......※

திரு - குழந்தைசாமிமுதலியார்பேரில்

பூமேவுமதுவொழுகியுவட்டெடுத்துப் புலவகலப்புணரிபாயு.........
மாமேவுபொழிலுழவர்களையிலமருபகாரமரிக்கின்பாகப் ..........
பாமேவுமெழிற்புதுவைத் திருச்செல்வராயவள்ளல்பயந்தமைந்தன்.
தேமேவு சொற்குழந்தைசாமி நன்றுப்பதிகமொன்றுசெப்பினனே .
பாருலகம்புகழுழவர்பதிவதிவிண்மதி மிதிநம்பரனையீன்ற.........
சீருலவுமுபகாரமரியினுக்கன்போடுதிருச்செல்வராயன் ...........
பேருலவவருகுழந்தைசாமிசொற்றபதிகம்போற் பிறங்குவையத்....
தாருணைத்தாராருணைத்தாரிப்படியிலிப்படியாரறையவல்லார்.......※
அறைதருநற்றமிழிருந்தவூரதனிற்குடியிருந்து மறியாமூடர்.......
சுறைதருபுன் மொழிமாசிற் பார்பரம்மாள்சரிதமொடுகழறுஞ் சில்ல..
நிறைதருநற்சரித்திரங்களெனுமொளிகளகப்பட்டு நிற்கின்றுற்போன்
மறைதருநல்லப்பொலினேர் சரித்திரமுமகப்பட்டு மங்கிடாமல் ....
மண்ணிருக்குமறிஞரொலா மதித்திடுநற்றிறவலவன்வையமேவ.....
விண்ணிருக்குந்தற்பரனைப்பலர் வேண்டப்புதுவைதனின்விளங்குந்தூ
ய,தண்ணிருக்குமருண்மிகுநற்றிருச் செல்வராயவள்ளல்தவத்தில்வந்த
திண்ணிருக்குங்கலையுணர்ச்சிமிகுகுழந்தைசாமியெனுஞ்செல்வனன்ப
மின்னுதவந்தனிலுயர்ந்த மேற்படியப்பொலினேர்தன் விளங்குந்தூயா
தன்னிகரிலாக்கதையின்மான்மியமிவ்வகில மெங்குந்தழைப்பமிக்க...
நன்னயமாவழுவென்பதெட்டுணையுமில்லாமனாளுமோங்கப் ........
பன்னுதேன்சுவையினு மின்சுவைதருசெந்தமிழதனிற்பாடினனே...

க - தைரியநாத வாத்தியார்பேரில்

பாருலகிலங்கலங்காரநற்புதுவையம்பதியில்குமதிகயோகன் - பன்னுமு
த்தமிழினொடு நாற்கவிதைநாற்பொருளபகுத்தளித்திடுதியாகன், தாரி
லகுபுயகனகராயதேசிகனணிதவப்பயோததியின்மதிபோற் - சந்தான
குருவென்னவந்தந்தவீரமுனி தன்பெயரினைப்பரித்த, சீரிலகு தைரிய
நாதப்புனிதவாசான்சிறந்தமாணுக்கரின்று-செருனர்கிடுகிடெனவொளிரி
டி விடுதனுக்கை யொண்டீரவாமன்சரிதையை, எரிலகுபொற் பொறிக
ளாரதாரங்களாலிலகுகல்லூரிதன்னி-லினிதுறவிளக்கினரியாவருமகிழ்ந்
து நல்லிறும் பூதுறும்படிக்கே ..........................※

நீரமுறுமாமலர்த்தடங்க ணிலவும் புதுவைமாநகர்வாழ
வீரமுனிவனிவனென்ன விளங்குந் தைரியநாதனின்று
தீரமுதவருவப் புறநஞ்சிறுவராற் செய்வித்ததிவ்ய
சாரமுறு நற்சல்லாபஞ் சகத்துக்கமுதாயினித்ததுவே.

பண்டோர் பவமற வந்தானடியைப் பணியுமன்பு..................
கொண்டோருமேவைத் தொடர்ந்தன்று சென்றமுக்கோக்கடம்மை.....
வண்டோரலரணி வல்லார் நல்லார்கண் மகிழவின்று..............
கண்டோந்தயிரிய நாதசிங்காரன்கழகத்திலே..................*

தே - இரத்தினசாமிசெட்டியார்பேரில்

கானாயாயிரர்க்கன்றேரடைகொண்டன்னார்களிக்கவிருந்தளித்திடுநற் கடவுள்பதந்தொழுவோன், மானார்களணிதரளப் பேருவரியின்பேர்-மன்னுகருமுகிலின்பேர் வயங்கு குருவின்பேர், வானார்செம்மலர்மேவு வண்டின்பேரிவற்றின் - மருவுமிடையெழுத்தியைக்கவரு பெயரின்முன்னே, தேனார்செந்தமிழ்க்கிழவர் தெய்வப்பேர் நிறுவத் - திகழ்பெயரொன்னன்பனிந்தச் சிறுகடிதங்காண்க.............................*

உரத்தினிற் பருதிதன்னை யுடையெனப் புனைந்துதேவ
வரத்தினிற் புதைந்த கன்னிவளந்தருபாதப்போதைச்
சிரத்தினிற் பிணித்துக்காரைச் செங்கரத்தியாத்ததேவு
இரத்தினசாமியென்னு மெழிலனீதன் பிறேக்க

புவியெனுமகடனுரத்தினிலொளிரும் புதுவையாமதாணியினுப்பட்...
சவியுறு குருமாமணிப்படி யொளிருஞ் சாயலின் காரணக்குறியாற்....
செவியறிதிருத் தே விரத்தினசாமிச் செம்மலென்றருந்தமிழ்க்குரவர்
கவியறிதரச்செய்கருணைகான் முகிலிக்கடிதமன் புற்றுநோக்குகவே...

மானன்னவிழிமாதர் மடலெழுது தோளான், வானன்ன செழுங்கரமும் வாய்மையு மிக்குடையான், தேனன்ன தேவிரத்னசாமியெனச்செப்பும், யானன்ன பண்பனிதை யற்பிறேச்குகவே, அருள்கனிந்தே யிதனையற்பிறேக்குகவே..............................*

அள்ளிலைவேலுழவர்பகையினையொருவன்கொள்ளினு மிவ்வுலகிலந்தன்னிற், றெள்ளுதமிழ்ப்புலவர்பகைகொளலாகாதெனக்குறளாஞ் சிறந்தநூலின், வள்ளுவர்கூறியமொழியைமதியாதவ்வாணருள்ளம் வாடநாளு; மெள்ளுமிழிவினர்கடம்மை யேசிவசைகூறிடவு மேற்குமென்றே.

கலைமகளே ஔவை கம்பன் காளமேகன்முதலாங் கலைவல்லாளர்
மலையெனுந்தோள்ரசரையுமடையரையுந் துஷ்டரையும் வசைகள்பாடி
நிலைகுலையச் செய்தனவென்றறிந்திரத்னசாமியென்னு நிபுணனெங்கும்
விலைபெறநன்வசைகள்பலவிளம்பினனம்பகைவர்மனம்வேகமாதோ.

டாக்டர் - ஞானவராய முதலியார்பேரில்

நலங்கொளாயுள்வேதியர் சிரோமணியெனஞாலத்
திலங்குஞானவராய வென்னேய நோயினர்சஞ்
சலங்கடீர்க்கு நன்மருந்து நீயாதலாற்றமியன்
கலங்கிடாதிவணுவந்து வந்தேகலுன்கடனே.

அவ்வாக்கா தே - அப்பாவுபிள்ளைபேரில்

நிலம்புகழ்சற்குணநிபுண அப்பாவுபிள்ளையென்னு நேயா தூயா....
தலம்புகழுந் தேவரம்பன்றவம் விளங்கவரு புனிதா தமிழ்ப்பாவாணர்
குலம்புகழப் புதுவைநகரணி துரைகள மகிழவருசோமானே நின்....
வலம்புகழென் கடிதத்தைக்கண்டு மனமகிழ்ந்தென்றும் வாழ்கவாழக.

சாந்து இரத்தினசாமி உடையார் பேரில்

மாந்தர்புரிபவம் போக்க மனுவுருவானவனருளா..........
லேந்துபுகழ்மேவுபரீசென்னு மெழின்மாநகர்க்கோர்.......
தீந்தமிழாசிரியனெனத்திறன்மன்னர்புகழவொனிர்.........
சாந்துரத்னசாமியென்னுஞ் சற்குணனேவாழுதியே....... ※

புண்ணியசாந்துடையார்செய்தவமெனுமோர்பயோததியிற்புனிதமான
தண்ணியவெண்மதியெனவந்திலங்கும்ரத்னசாமியெனுஞ்சற்குணயான்
பண்ணியபற்பாக்களை யின்றனுப்பினே னவைகளை நீ பார்க்கயான்முன்
எண்ணிநினக் கெழுதினதற் கின்னருள்செய்திடுக நீயென்றும் வாழ்க.

சவராயலுநாயகர்குமாரன் செயகான்பேரில்

ஏர்வளராயிரத்தெண்ணூற்றைம்பானேழெனும்வருடம்.............
பார்வளர் தூயவவுரீன்மதியிருபான்திகதி ..........................
வார்வளரம்புலி நாண்மாலை நான்குமணிப்பொழுதிற் ...........
பேர்வளர் நஞ்செயகானெனுஞ் செல்வன்பிறந்தனனே............ ※

பிறந்தா னந்நாளிரண்டாண்டொரு நான்மதிப் பீழையின்றிச்.
சிறந்தான்குதலைமொழிந்தான்பயந்தவர் செய்தது நல் ......
லறந்தானெனப்புவிகூற வைத்தானனையத்தனைவிட்........
டிறந்தான்பரற்குமுதற்பலியாய்க்கதியெய்தினனே ....... ※

ஷெயார்குமாரன் செயராயலுபேரில்

ஆயிரத்தெண்ணூற்றறுபானொண்டவுரீன்மதிபதினைந்தாகுந்தேதி......
தூயஞாயிறுவார நிசிமூன்றேகான்மணியாஞ்சுபநேரத்திற்..........
பாயவுலகிற்சுகுணலயசீல நிபுணனெனப்பலரும்போற்ற ..........
நேயசெயராயலு நஞ்சேயெனவிந்நிலத்து வந்துநிலவினனே ..... ※

ஷெயார்குமாரன் அருளப்பன்பேரில்

நிலம்வளரவ்வாண்டோடீராண்டுறு நவம்பர்மதிநிகழோராறு........
தலம்வளரமுன்கொளிருபான்திகதி புதவாரஞ்சமைந்தகாலைப்........
பலம்வளரவருமெட்டுமணிப்போதிற் புதுவையெனும்பதியிற்கௌரி.
குலம்வளரவருளப்பனெனுஞ் செல்வன்புவிமகிழக்குலவினனே.... ※

நானமிகுமாலயத்திற்பதினெட்டாந்தேதி சனிநாளின் ஞானஸ்.......
தானமடைந்ததற்குரியகுரவனொனச் சோலையப்பாசாமிமன்னன்.......
மானமிகுமன்னம்மாளிவர்விளங்கப் பின்வருமங்கலனண்மாலை.......
வானம்வளர்சேசுபரன் பதமடைந்தவ்வமரரொடுமருவினனே ...... ※

ஷெயார்குமாரத்தி சந்தபாரம்மாள்பேரில்

மருவளராயிரத்தெண்ணூற்றறுபானென்காண்டவுரீன்மதியையைந்தாவ
துதிகதிமதிவார நிசிபதினென்றேழுக்கான்மணிநேரத்தில்திருவுமெழிற்
குணமுமன்புஞ்செழுங்கற்பும்பொற்புமொன்றுறச்சேர்ந்தோர் தூயவுரு
வமெடுத்திவணெழுந்ததெனச்சந்தபாரெனும்பெண்ணுற்றுண்மாதோ
பார்வளரும்புரோவிக்கேரொனுந துப்பிமாமுனியும்பரன்பாலன்புஞ்...
சீர்விளங்குநற்குணமுந் திகழம்மாளெனும்பெண்ணுஞ்சினகரத்தில்.
ஏர்விளங்கு மணிஞானக் குரவர்களாயடுத்துவருமிரவிநாளப்.......
பேர்விளங்குஞ் சற்குருவாற் றூயஞானஸ்தானம் பெற்றுண் மாதோ.

ஷையார் குமாரத்தி தெரசம்மாள்பேரில்

மாதலத்தாயிரத்தெண்ணூற்றறுபானெட்டாண்டவுறில் மதிபத்தொன்
பான், தேதியிலாமாதிதினமாலையிரு மூன்றுமணிச் சென்றபின்னர்;
தீதகன்ற தெரசம்மாள் திகழன்னம் மாளிருவர் சேர்ந் துதித்தார்,
ஆதிபரன்பாதமதிலன்னம்மாண் மூன்றுநாளடைந்தாளன்றே..... ✻

சென்னைமாநேசர் பு- சிந்துராயமுதலியார்பேரில்

சீர்கொண்டபுலவர் சிரசரகம் பிதஞ்செயுந்திவ்ய சங்கப்ப்ரசங்கன் - செய
யமுத்தமிழிநெடுநாற்கவிதைநாற் பொருள்தெளிந்துரைக்கும் போதக
ன்-செயகாளெனுஞ்சுகுண நிபுணன்செய்மாதவச்செல்வ னெனவருமு
த்தமன் - திரிசிராமலையில் மீனாட்சிசுந்தர சிரோமணியினருள பெ
ற்றவன், பார்கொண்ட சென்மப்பவத்தொடர் பறிக்கப்பருங்கழுமரத்தி
லேறும் - பரமசேசென்னு நன்னயவமலனுபயபொற்பாதமறவாதபக்
தன்-பன்னுதேம்பாவணிகொண்மான் மியமனைத்தும் பகுத்துணர்த்தி
டுநாவலன்-பாயகலையாயு நன்னேயசவராயலு பரிந்தெழுதும் விஞ்ஞாப
னம், ஏர்கொண்ட சென்னைமாநேசனென்னும்புனித னெண்ணருங்கலைக
ற்றவன்-இணையிலாதோங்கும் பகீரதிகுலன் புதுவையில்குதிவான்மரபி
னோன்-எண்டிசையகத்தும் புறத்துமூதண்டத்து மெங்கும் ப்ரதாபமு
டையோன்-இலையென்றுதம்பாலிரப்பர்பா லெவருநனி யேற்பவருண
மாவுதாரன், தார்கொண்டபுயசிந்துராயபூபதியாந் தயாநிதிமகிழ்ந்து கா
ண்க-சகலகலைவலவன்முத்துச்சாமிபூபன்சமைத்ததிக்காரமென்னுந்-தி
தர்க்கநன்னூலையன்றச்சிட்டெவர்க்குந் தரும்வள்ளனீயாதலாற் - றமிய
டையவெற்கு மந்நூலொன்றனுப்பநீதயவு செய்திடவேண்டுமே....✻

ஒருவள்ளல்மன்னர்கண் மெச்சுநன்வள்ளலுயர் புதுவை
வருவள்ளல்வாணர்கண்வாழ்த்தரும்வள்ளல்மதிமிகுத்த
பெருவள்ளல்தூயவப்பாசாமிபூபதிபெற்றவள்ளல்
தருவள்ளல் வள்ளல்துரைசிந்துராயதனிவள்ளலே.........✻

சீர்மணக்குமெழிற்புதுவைத்தீவானப்பாசாமிச் செம்மலீன்றபார்மண
க்குஞ்சென்னைநன்மாநேசனெனும்புகழாளன்பாவலோர் சொற்றார்மண
க்குப்புயசிந்துராயவள்ளலெனுங்கோமான்றன்னைப்போலப்பேர்மணக்
கும்பேர்மணக்கும்பெருமையினர்பெருமையினர்பொருமையயோரோ .

ச - சுகிர்த நாதமுதலியார்பேரில்

வையகந்தன்னிற் சிறந்தபாகூரின் மருவிரசிதத்தினலமைத்த
வையகமென்னத்திகழுமாலயத்தின் மருவுமாமரியெனுமாதா
வையகமறயாந்தொழச்செயும்விழாவைமனமகிழ்ந்தினிதுகண்டனது
வையசமிரண்டுநாளிருந்திட நின்மயிலொடுவருகமித்திரனே.

நிலஞ்செய்ததவமன்று நீளுறவோர்தவமன்று
குலஞ்செய்யுமிருகுரவர் கோதிலாத்தவமிதெனப்
பலஞ்செய்யவுருவெடுத்துப் பற்பலபாவையிற்றேர்ந்து
நலஞ்செய்யுநஞ்சுகிர்தநாதனீதச்சேற்றினனே.

பாதிமாமதியைத்தேப்த்தொளிர் செழுந்தண்பங்கயச் சேவடியணையாந்
கோதிலாக்கன்னிமரியினல்லருளைக்கொண்டவன்பலகலை யுணர்ந்தோன்
தீதிலாப்புனிதன்சற்குணமனைத்துந் திரண்டுருவெடுத்தவன்சுகிர்த
நாதனென்றிலங்குந் தூயவனிவற்றை நாடியச்சேசற்லுவித்தனனே.

திருந்துமழகினி லுயர்ந்தசிந்தம்மாளொடுநமதுதேவியென்னும்
அருந்ததியாமம்மாளுந்தாங்களுமின்றெனதுமனையகத்தில்வந்து
விருந்தருந்த விருப்புகின்றேனாதலாலென் விருப்பமேவவன்பு
புரிந்துவரயானுங்கண் மூவரையுமிகவேண்டல் புரிகின்றேனே.

சீர்வளர்கோன் சேல்துரைகள் புகழ்சவரிநாதனென்னுந் தீரனீன்ற
பேர்பெருகிவளர்சுகிர்த நாதனென்னு மென்னினியபிரியனேயிப்
பார்வளரொப்பாரையிலும் வல்லவனேநல்லவனேபாக்யவானே
தார்வளருன்பூங்குழன்மாங்குயிலோடென்மனைவரநீதயைசெய்யின்றே

பொன்னுலகமென்னவொளிர்புதுவையெனும்பதியில் வளர்புனிதாகோ
ன்சேல், மன்னவர்கள்புகழ்சவரிநாதனெனும்பூபதியின்மைந்தாயார்க்கு
நன்னலஞ்செயுஞ் சுகிர்தநாதா பல்கலையுணர்ந்த நல்லாய்வல்லாய்
என்னகுறை செய்தனனீயித்தனை நாளெனைக்காணாதிருக்கயானே.

வேதநாயகன் பாதபங்கயந்தொழு மேலோன்
கோதில் நற்குணத்தினுங்குலத்தினுமுயர்கோமான்
நீதமன்புநல்லருள் பொறைநிறைந்தவன்சுகிர்த
நாதனென்பவன்காண்கவிக்கடிதத்தைநயந்தே.

என்னினியவரிலினியராய்விளங்கும், நன்னயசுகிர்தநாதபூபதியும், அன்ன
நன்னடையம்மாளுஞ்சுகுண, உன்னதமயிலுமொருமையாவாழ்க.

நல்லறமென்னு மில்லறம்புரிய, வல்லவம்மாளுமயிலினை மணந்த
சொல்லரும்புகழார்சுகிர்தநாதச்செல்வநின்க்ஷேமஞ்செங்கையான்வரைக

முகமலர்ந்தினிதுநோக்கிமுறுவலித்துபசரித்துச்
சுகமெனத்தீஞ்சொற்கூறுந்தூயவம்மாளினல்ல
அகமகிழ்ந்திடப்பற் பாஷையறிந்த நற்சுகிர்தநாதா
செகம்புகழுசுகுணநின்றன் றிருக்கண்ணலிதனைக்காண்க

நற்றவஞ்செய்தெலிசபேத்தெனுந்தூயபுண்யவதி ஞாலந்தன்னி
லுற்றருலமாதர்சிரோமணியிவளென்றுலகேற்றவுஜிதமாகப்
பெற்றவம்மாளுந்திவ்யபசுங்கொடிக் கோர்கொழுகொம்பாய்ப்பிறங்
குநன்னூல், கற்றவர்களபுகழ்சுகிர்தநாதபூபதியிதனைக்களிப்பிற்காண்க.

கண்ணேமயிலே குயிலேசெங்கரும்பேயனமே யென்னினிய
பெண்ணேயமுதேயென்றெலிசபேத்தம்மாணங்கியப்பவந்து
விண்ணோர்மதிவாணுதலம்மாளவிளங்குஞ் சுகிர்தநாதனென்றே
எண்ணோர்புனிதனென்றுமெனதிதயமகலானிதைக்காண்க.

இவ்வாறுவஞ்சகம் பொய்யிழிவனைத்து மோருருவாயெப்பிறுைச், செவ்வாயார்புகழ்ந்து பொருளிழந்துடலமெலிந்தெளியேன் சிந்தைநொந்தேன், எவ்வாறித்துயரொழிப்பேனமுதறிஞர்மாதனையெள்ளளவு நம்பல் ஒவ்வாதென்றுனாத்தபலவாக்கியங்களுணர்ந்துமிதற்குடன்பட்டேனே.

க. மலையையமுதலியார் பேரில்

கலையைத்தருநல்லிளமதியைக் காலிற்றரித்துப் பேயரவின்.........
றலையைத்துமித்தாளருளமலன்றயவாற் கனகரத்தினத்தின்........
நிலையைக்குறிக்கவினிதுவந்த நிபுணன் புதுவைநகர்புகழு..........
மலையையன்மாகுணதீரன் மகிழ்வோடிதனைநோக்குகவே......... *

௨. அப்பாடி நாயகர்பேரில்

ஆயிரத்தெண்ணூற் றைம்பானூரண்டு மேமாத,மேயபதினேழென்றியம்புநாடியே, புதுவைவாழ்சின்னையபூபன் முதற்செல்வன், வதுவைசெய்திங்குற்றுன்மகிழ்ந்து .......................................*

காஷிகிப்பர்-த. ஆனந்தராயமுதலியார்பேரில்

சென்னைஜன்னல்போலீசுகாஷிகிப்பனெனுந்தொழிலோன்சிறந்தசோலைத், தன்னிகரிலாத்தம்பியப்பன்மனை மரியம்மாடவத்தில்வந்தோன், முன்னுமுப்பத்தெண்வயதனனந்தராயனென்பான் மூரிக்காளை, தன்னிலாயிரத் தெண்ணூற்றைம்பான் மூன்றுண்டிற்சேண்டலம்பெற்றுனே...

தா- மரியம்மாள்பேரில்

அரியசேசுநாயகன்மலரடிதொழுதேதன், உரியகேள்வனுஞ்செல்வனும் பெண்களுமுறவும், பெரியசெல்வமுற்றிலங்கவப்பிரான்றனைவேண்ட. மரியம்மாளெனு முத்தமி யத்தலமவதிந்தாள் ...............*

இராகுகாலத்தின்பேரில்

இரவி நான்கனை திங்களேழனை யிலகுமங்கலன்மூன்றுமால்.........
விரவுபன்னிரண்டொளிர்பொன்னென்றனை வெள்ளிபத்தனைமுதுமகன்
பரவுமொன்பான்மணிக்குமேனிதம பன்னுமொன்றனைமணித்துணை...
வரவிராகெனக்கண்டுநற்றெழில் மாந்தரோர்ந்து செய்யார்களே....*

திருமணப்பாடல்கள்

கொச்சகம்.

புயலிலகும் பொழிற்புதுவைப் புகழுமெழிற் பூபனென்னும்........
யலிலகுமணமகனை மினியகுணச்செல்வனுக்கும்.................
சயல்விழியாளென்னுமிந்தக் காரிகைக்குமுத்தமநற்..............
செயலிலகும் புண்ணியர்காள்செப்பிடுவீர்சோபனமே...........*

இராகம் கமாசு தாளம் ஆதி.

சோபன மிகநகசுகநலமா தூயபுனிதஜெய சோபனம்.....
பூபனெனுமினியபுண்யமணளனுக்கும் - ரீ ............
மாகுணவதியென்னும் புண்யமணளிக்கும் ..... சோபனம்

பாதலபூதலமீதலரட்சகமூலாமூலன் இரு ..................
பங்கயவிங்கித செங்கழல்தங்கசீலன் ....................

கோதிலுஜ்ஜி தகுண ஜோதிவதனமுள்ள-ரீ
கொஞ்சுசெஞ்சொன்மடவஞ்சியோங்கஜெய — சோபனம்
மாமலர்மணமுடனுயிர்சொற்பெருளெனமேவமேவ- சன்
மார்க்கதூயபெரியோர்செழுமலர்கொடுதூவ
பூமலராலெனத் தோமிலாமன்மிக - ரீ
புத்ரபாக்யசம்போகயோகமுற
அற்புதநற்றமிழ்விற்பனரணியிசைபாடக் கூட நல்
அணியணிமங்கையர் மணமணமென்றுகொண்டாட
தற்பரனருளொடுநற்புதல்வர்களொடு-ரீ
தாங்குமோங்குமபராங்கிளையெனமிக — சோபனம்

கொச்சகம்

சீராருடுசிரத்திசெஞ்சுடராரம்பரத்தி.......................
ஏராரணிமரியினினியமலர்ப்பதம்வணங்கிப் ................
பாரார்புகழுமிந்தப்பாவையென்னும் பெண்ணினுக்குந் .....
தாராரணிபுயற்குஞ் சாற்றுவீர் சோபனமே .............*

இராகம் செஞ்சுருட்டி தாளம் ரூபகம்

சோபனஞ் ஜெயசோபனஞ்சுபசோபனஞ் ஜெயசோபனம் .........
சோபனஞ் ஜெயசோபனமிந்தத் தூயநன்மணவாளர்க்கே ....சோ.
ஆதனபராந்தோபியாசருளப்பர் நன்மணம்போலவே ............
நாதனருளாலிசைந்தவிம்மணம் நாளுமோங்கி வாழ்கவே...... சோ.
காரொனுங்குழனங்கையுமிந்தக் கட்டழகுள்ள நம்பியும் ...........
பேறெனும் பதினாறுப் பெற்றுப்பிரபலமுடனோங்கவே ......சோ.
இலங்கும்பன்னலம்வருகதிவ்ய இறைவனல்லருள் பெருக .......,
துலங்குமபராஞ்சந்ததியெனச் சுபுத்ரசம்பத்துண்டாகவே .....சோ.
அணிகொளிம் மணப்பெண்ணும்பிள்ளையுமமலனல்லருளாசியால் ..
மணியுமொளியுமுடலுமுயிருமாக நாளும் வாழ்கவே ........சோ.

புதுவை- இராசாங்க அச்சுக்கூடத்துக்கதிபதியாகிய

## அ. சவீஞி துரைபேரில்

மச்சுக்கோவிற்கடிகழ் வண்புதுவைக்குவரன்மா....................
அச்சுக்கூடத்தினுக்கோரதிபதியே மன்னனொன்று ...............
மெச்சுசவீஞி துரையேவித்தகனே நின்னருளை ...................
நச்சுமெம்மை யாதரித்துநாளுநீவாழுதியே.......................*

---

## முதற் பாகம் முற்றிற்று.

# அட்டவணை.

| சவராயலுநாயகரால் கூறப்பட்ட பாடல். | பக்கம். |
|---|---|
| திறித்துவத்தின்பேரில் | ௯௭ |
| சுவாமியின்பேரில் | " |
| தேவமாதாவின்பேரில் | " |
| சென்மராக்கினிமாதாவின்பேரில் | " |
| ஆரோக்கியமாதாவின்பேரில் | " |
| செயராக்கினிமாதாவின்பேரில் | ௯௮ |
| சூசைமாமுனிவர்பேரில் | " |
| மிக்கயேல்முதலிய நவவானோர்கள் பேரில் | " |
| பன்னிருசீஷர்கள்பேரில் | " |
| பிதாப்பிதாக்கள் முதலியவர்கள் பேரில் | " |
| திருச்சபையின்பேரில் | " |
| ஐந்துகாயப்பிராஞ்சீஸ்குவின்பேரில் | " |
| சவேரியார்பேரில் | ௯௯ |
| அந்தோனியார்பேரில் | " |
| லசார்பேரில் | " |
| எலியாசுமுனிவர்பேரில் | " |
| ஆரோக்கியமாதாவின்பேரில் | " |
| அரியனூர் ஆரோக்கியமாதாவின்பேரில் பதிகம் | ௱ |
| பாகூர் செயராக்கினி மாதாவின்பேரில் பஞ்சரத்நம் | ௱௧ |
| மரியம்மன்பேரில் பஞ்சரத்நம் | ௱௨ |
| சுவாமியின்பேரிலும் மாதாவின்பேரிலும் சித்திரக்கவிகள் | ௱௪ |
| தேவகீர்த்தனங்கள் | ௱௫ |
| தேம்பாவணிப்பிரசங்கத்தின்பேரில் | ௱௰௩ |
| வீரமாமுனிவர்பேரில் | " |
| போனும் ஆண்டவர்பேரில் | " |
| கொதேல் ஆண்டவர்பேரில் | ௱௰௪ |
| தெப்போமியே ஆண்டவர்பேரில் | " |
| துப்பிசுவாமியார்பேரில் | ௱௰௫ |
| பாழ்சுவாமியார்பேரில் | " |
| லெயோதேசுவாமியார்பேரில் | " |
| மத்தியேன்சுவாமியார்பேரில் | ௱௰௬ |
| பர்பேசுவாமியார்பேரில் | " |
| லெவெய்யார்சுவாமியார்பேரில் | " |
| முசேசுவாமியார்பேரில் | " |
| லிழோஞ்சுவாமியார்பேரில் | " |
| மோறிசுவாமியார்பேரில் | " |
| ஆன்றிசுவாமியார்பேரில் | ௱௰௭ |
| புருழையாசுவாமியார்பேரில் | " |

| சவராயலுநாயகரால் கூறப்பட்ட பாடல். | பக்கம். |
|---|---|
| அருள்நாதசுவாமியார்பேரில் .......... | ௱௰௭ |
| கல்விசாஸ்திரமடத்தில்வெகுமானமளித்தபோது .......... | « |
| துப்பிசுவாமியார்மடத்தில் வெகுமானமளித்தபோது ..... | ௱௰௯ |
| பலசமயப்பெண்களுக்குப் பள்ளிக்கூடமேற்படுத்த ........ | ௱௨௰ |
| சவராயலுநாயகர் மெதாயில் பெற்றுக்கொண்டபோது .... | ௱௨௧ |
| போந்தான் குவர்னரை ம்காநாடு கண்டபோது .......... | ௱௨௨ |
| துய்பிளேக்சு குவர்னர்சிலைவைத்தபோது .......... | « |
| லோதுதுரைபேரில் .......... | ௱௨௩ |
| தஸ்கோனுகேர்துரைபேரில் .......... | « |
| மூலியேன் வேன்சோந்துரைபேரில் .......... | ௱௨௪ |
| எஸ்கேர்துரைபேரில் .......... | « |
| உழேன்சிசேதுரைபேரில் .......... | ௱௨௫ |
| அ. சலீநிதுரைபேரில் .......... | ௱௪௭ |
| உலுத்தர்பத்தர்சல்லாபம் .......... | ௱௨௫ |
| மீனுட்சிசுந்தரம்பிள்ளைபேரில் .......... | ௱௨௬ |
| வல்லூர் தேவராஜப்பிள்ளைபேரில் .......... | ௱௩௧ |
| சோட சாவதானம்-தி. சுப்பராயசெட்டியார்பேரில் .......... | ௱௩௨ |
| தி. தியாகராசசெட்டியார்பேரில் .......... | « |
| சதாவதானிஅப்பையாசாரியார்பேரில் .......... | « |
| சாமி. பொன்னுசாமிமுதலியார்பேரில் .......... | « |
| பாலசித்தாந்தசுவாமிகள்பேரில் .......... | ௱௩௩ |
| இராமலிங்கப்பத்தன்பேரில் .......... | « |
| தாசில்தார் சஞ்சீவிநாயகர்பேரில் .......... | « |
| கலெக்டர் சோலை. அப்பாசாமிமுதலியார்பேரில் .......... | ௱௩௪ |
| சிரஸ்தா. அற்புதஉடையார்பேரில் .......... | ௱௩௫ |
| சட்சி. தம்புசெட்டியார்பேரில் .......... | « |
| சந்தப்பாரம்மாள் வாசகப்பாவுக்குக் கால்நாட்டலின்பேரில். | ௱௩௭ |
| இஸ்தாக்கியார் வாசகப்பாவுக்குக் கால்நாட்டலின்பேரில் ... | « |
| முன்சீபு. வேதநாயகம்பிள்ளைபேரில் .......... | ௱௩௮ |
| மு. அருளப்பமுதலியார்பேரில் .......... | « |
| ச. ஞானப்பிரகாசப்பிள்ளைபேரில் .......... | ௱௩௯ |
| பகவந்த ஐயர்பேரில் .......... | « |
| திவான்நயினுத்தை அபராமுதலியார்பேரில் .......... | « |
| கலெக்டர் திரு. சுந்தரம் பிள்ளைபேரில் .......... | « |
| முன்சீபு. அதிசயம்பிள்ளைபேரில் .......... | « |
| தாசில். தம்பியாப்பிள்ளைபேரில் .......... | « |
| அ. ஞானதிக்கமுதலியார்பேரில் .......... | « |
| சிரஸ்தா. திவ்யநாதம்பிள்ளைபேரில் .......... | « |
| முன்சீப். நமசிவாயம்பிள்ளைபேரில் .......... | ௱௪௰ |
| காரைக்காலார்பேரில் .......... | « |

| சவராயலுநாயகரால்கூறப்பட்ட பாடல். | பக்கம். |
| --- | --- |
| மயிலை. சவரிமுத்துப்பிள்ளைபேரில்.................... | ௱சஎ |
| பு. ஆரோக்கியநாய்க்கர்பேரில்.................... | « |
| திரு. குழந்தைசாமிமுதலியார்பேரில்.................... | ௱சக |
| க. தைரியநாதவாத்தியார்பேரில்.................... | « |
| தே. இரத்தினசாமிசெட்டியார்பேரில்.................... | ௱சஉ |
| டாக்டர். ஞானவராயமுதலியார்பேரில்.................... | « |
| அவோக்கா. அப்பாவுபிள்ளைபேரில்.................... | « |
| சாந்து இரத்தினசாமிஉடையார்பேரில்.................... | ௱சஈ |
| சவராயலுநாயகர்குமாரன் செயகான்பேரில்.................... | « |
| ஷையார் குமாரன் செயராயலுபேரில்.................... | « |
| ஷையார் குமாரன் அருளப்பன்பேரில்.................... | « |
| ஷையார் குமாரத்தி சந்தப்பாரம்மாள்பேரில்.................... | « |
| ஷையார் குமாரத்தி தெரசம்மாள்பேரில்.................... | ௱சச |
| மார்நேசர். சிந்துரார்யமுதலியார்பேரில்.................... | « |
| ச. சுகிர்தநாதமுதலியார்பேரில்.................... | « |
| க. மலையையமுதலியார்பேரில்.................... | ௱சரு |
| அப்பாடிநாயகர்பேரில்.................... | « |
| த. ஆனந்தராயமுதலியார்பேரில்.................... | « |
| தா. மரியம்மாள்பேரில்.................... | « |
| இராகுகாலத்தின்பேரில்.................... | » |
| திருமணத்தின்பேரில்.................... | « |


இதிலுள்ள அச்சுப்பிழைகளை

இரண்டாம்புத்தகத்திற்காணலாம்.


இ○○து

சவராயலு நாயகரின் மைத்துனர்

த. துரைசாமி நாயகரால்ச்சிலிசைக்கப்பட்டு

புதுவைக் குவர்னமா அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.


முதற் பாகம் முற்றிற்று